ஓம்.




ஸத்.

# லக்ஷஞளந்தர்

திருவாய் மலர்ந்தருளிய

# ஞானரகஸ்யம்

இவை

௧௯௫௧

ஓம்.

தத்.  ஸத்.

# வ ர லா று

ஸ்ரீ விலக்ஷணானந்தர் 5024. 57. 11. முதல் நூறு தினங்கள்வரை திருப்பதி ஸ்ரீ வேங்கடேஸ்வர **பருவதத்தில்** **ஸ்ரீனிவாஸப்பெருமான்** திருக்கோவிலுக்கு உத்தரதிக்கின் ஒரு யோஜனை தூரத்தமைந்துள்ள தெய்வீகத்தன்மை வாய்ந்திருக்கப் பட்ட **சனத்குமார தீர்த்தக் கரையில்** ஏகாந்த நிஷ்டையிலிருந்த தருணங்களில் அவ்வப்போது ஹ்ருதயத்தில் தானே தோன்றிய வைகளை எழுதப்பட்டது. இதில் அதி அற்புத ஞானயோகத்தின் ரகஸ்யதத்துவங்களைச் சூக்ஷ்மமாக விளக்கியிருப்பதால் இந்த சாஸ்திரத்திற்கு **ஞானரகஸ்யம்** என்று நாமம் இடப்பட்டிருக்கிறது.

**ஞான சித்தன்.**



விலக்ஷணானந்தர்
உலகசஞ்சார சமயம்

ஓம்.

தத். ஸத்.

# விலக்ஷணாநந்தர்

## ஞானரகஸ்யம்.

1. அகில வுலகங்களுக்கும் அதிபதியாயிருக்கப்பட்ட தேவாதி தேவனெவனோ அவனுக்கும் அப்பாற்பட்ட வஸ்துவும், ஈஸ்வரர்களுக் கெல்லாம் ஆதாரமாயிருக்கப்பட்ட சர்வேஸ்வரனை யும் பரமேஸ்வரனையும் கடந்து பிரகாசியா நிற்கின்ற தெதுவோ அந்த வஸ்துவும்,

சகல வேதங்களிலும் அதிரகஸ்யமென்றும் மஹாரகஸ்ய மென்றும் பிரதிபாதிக்கப்பட்டிருக்கிற ஸ்தானங்களுக்கும் எட்டாத வஸ்துவும்,

பஞ்சமூர்த்திகள் முதல் சகல தேவர்களையும் உண்டு பண்ணி உலாவப்பண்ணிக் கபளீகரம் பண்ணி விடுகின்ற காலப்பிரகிருதிக் கும் ஆதார தெய்வமான ஜெகதீஸ்வரனுக்கும் அப்பாற்பட்ட வஸ்துவும்,

முக்குணங்களாலும் மனத்தாலும் மற்றத் தத்துவங்களாலும் வேறு எவராலும் இன்னபடியென்று கண்டு பிடித் தறியக் கூடாத வஸ்துவும்,

களங்கமில்லாததும் நிர்மலமானதும் அதிசூக்ஷுமமானது மாகிய புத்தியினால் அறியக்கூடிய வஸ்துவுமாயிருக்கப்பட்ட பிரஹ்ம மத்திற்கு எனது அபேத ஐக்கிய நமஸ்காரம்.

2. எவருடைய ஆக்ஞையின் பலத்தால் சர்வக்ஞ ஈஸ்வரன் தன் வடிவத்தைத் தாங்குகிருனே,

பிரமா விஷ்ணு ருத்ரன் மஹேஸ்வரன் சதாசிவன் முதலிய பஞ்சமூர்த்திகளும் சுப்ரமண்யன் கணேசன் முதலியவர்களும் தங்கள் தங்கள் வேலைகளைச் சரிவரச் செய்து வருகிருர்களோ

எவரை அறிவதற்கு அனுக்கிரக சக்தியுடைய தக்ஷிணுமூர்த்தி கல்லால் விருக்ஷத்தினடியில் கற்பகோடிகாலம் மஹா மவுனத்துடன் வீற்றிருந்தாரோ

எந்தப்பரமபுருஷனை அறிவதற்கு மஹாவிஷ்ணு க்ஷீராப்தியில் பரமயோக நித்திரை புரிந்துகொண்டிருக்கிருரோ,

எந்தத்தேஜோமயத்தை உணரும்பொருட்டு பிரமதேவர் ஸ்வேத தீபத்தின் ரகஸ்யஸ்தானமாகிய வைஜயந்தி பருவத சிகர மத்தியில் ஏகாந்தமாக வீற்றிருக்கின்றனரோ,

எந்த வஸ்துவை வேதவேதாந்தங்கள் விசாரித்துக் காணமுடியாது கதறுகின்றனவோ,

எவரை அறிந்தமாத்திரத்தில் ஜன்மமரணம் பஸ்பமாய் விடுகிறதோ,

எந்தப்பரம்பொருளை அறிய முடியாமல் சகலஜீவர்களும் தத்தளிக்கிருர்களோ,

எந்தப்புருஷோத்தமனை அறிவதற்குப் பிரஹ்மரிஷிகள மஹரிஷிகள் ரிஷீஸ்வரர்கள் ரிஷிகள் முனீஸ்வரர்கள் யோகீஸ்வரர்கள் ஞானிகள் பக்திமான்கள் சித்தர்கள் முதலியவர்கள் பாடுபடுகிருர்களோ,

எவருடைய பிரகாசத்தை அபேக்ஷித்து முச்சுடரும் பிரகாசிக்கின்றனவோ,

எவர் மற்றொரு பிரகாசங்களை அபேக்ஷிக்கிறதில்லையோ,

எவருடைய அனன்யசக்தியால் லக்ஷ்மி சரஸ்வதி மாஹேஸ்வரி பார்வதி ராஜராஜேஸ்வரி பராசக்தி காலசக்தி முதலிய சக்திகள் விளங்குகிறார்களோ,

எவருடைய திவ்ய ஆக்ஞையால் சர்வ புவனங்களும் அதனதன் நிலையில் நிற்கின்றனவோ,

எவரை அறிந்தபின் இன்னொருவரை அறியவேண்டுவதில்லையோ,

எவருக்குமேல் இன்னொருவரில்லையோ,

எவரை உத்தமமுமுக்ஷுக்கள் நேரே அடைய விரும்புகிறார்களோ,

சர்வ சுருதிநிச்சயங்களும் எதனிடத்தில் தாத்பர்யமும் லக்ஷியமும் வைத்திருக்கின்றனவோ,

எவரிடத்தில் வாக்குமனம் பிராணன் முதலிய தத்துவங்கள் செல்லாதோ,

எந்த ஜோதி சொரூபத்தை இன்னபடியென்று பேச நினைக்க முடியாமல் பஞ்ச மூர்த்திகளும் அறிகிறார்களோ,

எவர் ஜீவ யீஸ்வரப் பிரகாசங்களாகத் தோற்றுகிறாரோ,

அத்தகைய பரம ஏகாந்த நிஜாரூட நித்திய அப்ரமேய அநாமய பரப்பிரஹ்ம வடிவரான ஸ்ரீ. பரவாசுதேவரது அந்தரங்கவடிவ நிர்க்குணத்தோடு ஸ்ரீமந் நாராயண மூர்த்தியினது பகிரங்க சொரூப சகுணத்தையும் எனது திரிவித கரணங்களால் நிஷ்காமமாகத் தியானித்துச் சர்வ வேத வேதாந்த சம்மத அனுபவ யுக்தமான இந்த மஹத் கிரந்தத்தை எழுத ஆரம்பிக்கிறேன்.

3. மஹா தேவன் உமாமஹேஸ்வரன் லக்ஷ்மிநாராயணன் பிரமதேவன் குஞ்சரமுகன் சரஹணபவன் தசாவதார மூர்த்திகள் திக்பாலகர்கள் நவக்கிரகங்கள் ஆதிசேஷன் வைனதேயன் முதலிய சர்வக்ஞ ஈஸ்வராதிகளது உபய பாதார விந்தங்களில் மனதைச் செலுத்தி இந்த ஞான தத்துவ சாஸ்திரத்தை எழுதுகிறேன்,

4. பராசக்தி காலசக்தி காயத்திரீ சரஸ்வதீ லக்ஷ்மீ பார்வதீ தருமதேவி பூமிதேவி பத்ரகாளி அயிராணி கங்காதேவி அருந்ததிதேவி பஞ்சகன்னிகைகள் இவர்களின் காலசக்தியை நமஸ்கரித்து இந்த நூலைத் தொடங்குகிறேன்.

5. தக்ஷிணாமூர்த்தி நரநாராயணரிஷி தத்தாத்திரேயர் காகபுஜண்டர் ஜனகாதியோகிகள் வாலகில்லியர்கள் வசிஷ்டர் அகஸ்தியர் பிரஹஸ்பதி வியாஸர் சுக்ரபகவான் பிருங்கிரிஷி நந்தீஸ்வரர் புலஸ்தியர் மரீசி அத்திரி தன்வந்தரி விஸ்வாமித்திரர் சுகர் கௌதமர். காசிபர் கௌசிகர். கண்ணுவர். பாரத்வாஜர். வால்மீகர் ஆங்கீரஸர் நாராயணர் பிருகு நாரதர் மைத்திரேயர் பராசரர் காலவர் மௌத்கல்யர் ருஷ்யஸ்ருங்கர் சதானந்தர் ஜாபாலர் சுதீக்ஷணர் சரபங்கர் மாண்டவ்யர் திரிதுலர் தௌம்யர் ஜாமதக்னியர் பீஷ்மர் துர்வாஸர் வாமதேவர் பிருஹதாரண்யர் தித்திரீயர் கீதார்வணர் முதலிய பிரஹ்மரிஷிகளின் அந்தரங்க அனுக்கிரகபலத்தால் சகலவுபநிஷத்சாரமாகிய இந்த அனுபூதிவாக்கியங்களை வெளியிட ஆரம்பிக்கிறேன்.

6. ஞானரகஸ்யமென்னும் இந்த சாஸ்திரமானது அதிசூக்ஷ்ம ஞானயோக அப்பியாசிகளுக்கு மாத்திரம் உபயோகமாகும்.

7. இந்த அத்யாத்ம ஞானசாஸ்திரத்தில் என்னுடைய சொந்த அபிப்பிராயம் ஒன்றுகூடக்கிடையாது.

8. கல்லால் மஹரிஷி மஹாவிஷ்ணு சதாசிவன் பிரம்மா சுப்ரமண்யன் கணேஸ்வரன் நந்தி ஸ்வாயம்புமனு வசிஷ்டர் ரிபு அகஸ்தியர் சுகர் சூர்யன் நாரதர் ஜனகாதிப்பிரஹ்மரிஷிகள் தத்தாத்திரேயர் நரநாராயணரிஷி முதலிய பிரஹ்மரிஷிகள் அங்கீகரித்து ஆண்டுவரப்பட்டதை நிரூபித்து எழுதுகிறேன்.

9. மனுஷ்யர்களைத்தவிர மற்றத்தேவர்களுக்கெல்லாம் உபதேசகர்த்தா, தக்ஷிணாமூர்த்தி.

10. ஞானமற்றயோகமும் யோகமற்றஞானமும் பிரயோஜனமில்லை,

11. ஜீவாத்ம பரமாத்ம பேதமுடையவன் பயம் ஜன்மம் இவைகளை அடைகிறான்.

12. பிரபஞ்சத்திற்கு உபாதானகாரணம் பிரஹ்மம்.

13. ஞானிக்கும் ஒரு ஜென்ம முண்டு.

14. விவகார தசையில் வேதாந்தம் பேசுவது குற்றம்.

15. பேதஞானமில்லாதவனுக்கு அபேதஞானம் வராது.

16. சகலாதீத வஸ்துவை இன்னதென்று யாதொரு சந்தேகமும் விபரீதமுமறத் தெளிந்து கொள்வது அதிமானுஷயோகம்.

17. ஜனன மரணங்களைக்கடந்துநின்ற மோக்ஷத்தில் விருப்பமுடையவர்கள் மனச்சாக்ஷிவடிவமான அந்தர்யாமியின் ஆக்ஞாவடிவ மந்திரசொரூப வேதத்திற்கு விரோதமாகிய பாபகாரியங்களினின்றும் விடுபடும்பொருட்டு அதனதன் சுத்தி மார்க்கங்களைக் குறைவின்றி விதிப்படி முறையே அனுஷ்டிக்கவேண்டும்.

18. பயமுடையவனுக்கு ஜெயமும் அபஜெயமாகத்தோற்றும்.

19. பராக்கிரமசாலியாகிய தைரிய புருஷன் எதுவாயிருந்தாலும் மறைத்துச்செய்யமாட்டான்.

20. ஈஸ்வரதரிசனம் தேவர்கள் அவதாரபுருஷர்கள் மஹரிஷிகள் ஞானிகள் இவர்களின் தரிசனம் கிடைத்தாலும் நமது ஹ்ருதயம் சுத்தமாகாமலும் ஏகாக்கிரமாகாமலுமிருந்தால் யாதொரு பிரயோஜனத்தையும் அடையமுடியாது.

21. யாதொரு நிபந்தனையும் நியமமுமில்லாத உத்தமமான தைரிய புருஷன் உண்மையான பிராம்மணனாகிறான்.

22. பழவர்க்கங்கள் பரிசுத்தமான காற்று கனங்குறைந்ததீர்த்தம் இவைகளை உண்டு வருவதால் ஸ்தூலசரீரத்தின் இரத்தம் நாடி நரம்புகள் சுத்தப்படுகின்றன.

23. சங்கல்பத்தின் எதார்த்தவிரிவே விசேஷமென்று பல மேதாவிகளும்அதன் ஒடுக்கமே சிரேஷ்டமென்று சிலமஹான்களும், விரிவும் ஒடுக்கமும் அற்றதே மஹாவிசேஷமென்று அவதார புருஷர்களும் சொல்லுகிறார்கள்.

24. ஒருவனுக்காக ஒருவன் ஒரு காரியத்தைச்செய்வது உத்தமமாகாது உறுதியாகமாட்டாது.

25. உலகப்பொருளில்லாத உத்தமனைப் பரமாத்மா ஒருவர் மட்டுங்கொண்டாடுகிறார்.

26. ஒருவன் செய்த பாபமானது தான் செய்த பாபகாரியங்களை வெளியிட்டுச் சொல்வதனாலும், தானத்தினாலும், வைராக்கியத்தினாலும், புண்ணிய தீர்த்த க்ஷேத்திர யாத்திரைகளினாலும் ஜபம் பாராயணம் சாது சங்கம் பிராயச்சித்த கருமம் இவைகளாலும் விலக்கப்படுகிறது.

27. தர்மம் காமம் ஸ்வர்க்கம் கோபம் கல்வி சந்தோஷம் அடக்கம் புண்ணியம் சிநேகம் இவைகளெல்லாம் பொருளிலிருந்துண்டாகின்றன.

28. உலக நாயகர்களை இழந்த ஸ்திரீகள் உடம்போடு உலகத்தில்சஞ்சரிப்பது உலகத்தின் எதார்த்த நாசத்திற்கேதுவாகிறது.

29. முன்பின் ஜென்மாந்தரங்கள் பிராரத்த நிச்சயம் ஈஸ்வர நியதி இவைகள் தோன்றுமானால் சிருஷ்டி முடிவடைந்து விடுமென்று மாயாசக்தி மறைத்து வைத்திருக்கிறது.

30. புருஷர்கள் எந்தப்பெண்களிடமும் வெளியிடக்கூடாத ரகஸ்யமான வார்த்தைகளைச் சொல்லக்கூடாது.

31. உலக சம்பந்தமான எந்தக் காரணங்களைக்கொண்டும் உலக வெறுப்படைந்து சந்நியாசம் பெற்றால் அது நிலைபெறமாட்டாது.

32. தன்னைத் தாழ்த்தி நினைக்கிறவனால்தான் பிறத்தியாரைச் சாந்தப்படுத்த முடியும்.

33. அசூயை துவேஷம் கோபம் இம்மூன்றையும் யாரிடத்திலும் உபயோகப்படுத்தாத மனிதனைத் தேவர்கள் கொண்டாடுகிறார்கள்

34. யாதொரு அபகாரமும் செய்யாதவர்களுக்கு அபகாரம் செய்வதால் அதன் பலனைச் சாப பூர்வகமாக அனுபவிக்க நேரிடும்.

35. சகலவித பேதங்களினின்றும் கட்டுப்பாடுகளின்றும் விலகிக் கொண்டவன் சத்திய வஸ்துவை உணர அதிகாரியாகிறான்.

36. முக்குணத்தை ஆதாரமாகக் கொண்டவன் ஈஸ்வரன் பிரகிருதியைக் கைக்கொண்டவன் ஜெகதீஸ்வரன் மூலப்பிரகிருதியை வசஞ்செய்து கொண்டிருப்பவன் சர்வேஸ்வரன் ஒன்றிலுந் தாக்கற்றிருப்பது பிரஹ்மம்.

37. எவ்வித ஜாதிபேதமுமின்றிச் சகலமும் பரமாத்ம ஜாதியேயென்கிற உறுதியே பரமசிவன் மஹாவிஷ்ணு பிரம்மா சரஹணபவன் முதலியவர்களது மதம்.

38. உலக காரியங்கள் நடைபெறும் பொருட்டே ஸ்திரீ புருஷபேதம் போகஇச்சை உலகபேதம் வருணாஸ்ரமபேதம் சராசரபேதம் முதலியன உண்டாயிருக்கிறதென்றும் தீர்க்கதரிசிகள் இவைகளை அதிக்கிரமித்துவிடுவார்களென்றும் சமதிருஷ்டிவாய்க்திருக்கப்பட்ட மஹரிஷிகள் கூறுகிறார்கள்.

39 வருஷம் ஒன்றுக்கு ஒரு கோடியாகப் பத்து வருஷங்கள் வரை அஷ்டாக்ஷரம் பஞ்சாக்ஷரம் சடாக்ஷரம் பிரணவம் துவாதசாக்ஷரம் தாரகம் வேங்கடேஸ்வரத்ரயோதசாக்ஷரீ முதலிய மஹாமந்திரங்களை அதனதன் அதிஷ்டான தேவதைகளோடு முறைப்படி ஜெபித்து வந்தால் முடிவில் நிருவிகல்பசமாதி சித்திக்கிறது.

40. ஆகாசபோத ஞாபகத்தைவிட்டுப் பிரஹ்மத்தை நோக்கிச் செல்லுதல் ஞானத்தில் கிரியை.

41. அரசாங்கதண்டனையை எதிர்பாராமல் தெய்வதண்டனையை மட்டுங் கருதுபவர்கள் உத்தமபுருஷர்கள்.

42 பிரஹ்மத்தை நோக்கிச் செல்லுகிற மனோவிருத்திதானே தனித்து ஓய்வுபெற்றிருப்பது ஞானத்தில் யோகம்.

43. மாருத மனமுடையவர்களை மாற்றிவைக்குஞ் சக்தியைத்தான் மஹாமாயையென்று மஹான்கள் கூறுகிறார்கள்.

44. அகத்துறவில்லாமல் காஷாயம்பூண்டு கழுத்தில் ருத்ராக்ஷமணிந்து கையில் ஜெபமாலை பிடித்து நெற்றிநிறையத் திருநீறோ மற்றெந்தக்குறிகளோ தரித்துக்கொண்டு ஞானியென்று புறப்படுகிறவர்களைக் கண்டு ஜெகதீஸ்வரன் தேவர்கள் ஞானிகள் இவர்களெல்லாம் உள்ளே நகைக்கிறார்கள்.

45. ஐஸ்வர்யம் வீர்யம் கீர்த்தி தேஜஸ் ஞானம் வைராக்யம் இவ்வாறும் ஒருங்கே உடையவன் பகவான்.

46. ஈஸ்வர நியதியின் ஒரு பெரிய காரணத்தினாலேயே பிரபஞ்சமாறுதல்கள் அவ்வப்போது ஏற்படுகின்றன.

47. மத ஆராய்ச்சி செய்வதைக் காட்டிலும் ஞான ஆராய்ச்சி செய்வது சிரேஷ்டம்.

48. சிஷ்யர்கள் ஒழுங்குதவறி நடந்தால் அது ஆசாரியர் குற்றமேயன்றி வேறில்லை.

49. மனம் பதறுவதற்கு ஏதுவான சாதன வஸ்துக்கள் எவ்வளவு உத்க்ருஷ்டமாயிருந்தபோதிலும் அதைவிட்டுவிடுவது சாந்த சுபாவமுடையவர்களுக்கும் ஜிக்ஞாசுக்களுக்கும் லக்ஷணம்.

50. எதார்த்த வேதசம்பந்த தெய்வீக ஸ்தாபன ஆதிவைதீக சநாதன தர்ம மதத்திற்கு விரோதமான சில குட்டிமதங்கள் ஒவ்வொருயுக காலங்களிலும் தோன்றித் தோன்றி மறைவது சர்வசாதாரணம்.

51. குருட்டுச் சிஷ்யர்களுக்குக் குருட்டு ஆசார்யர்கள் குருட்டு ஞானத்தைக் குருட்டுத்தனமாகப் போதிக்குந்தன்மை கலியுக காலத்தில் அபரிமிதமாக ஏற்படுமென்று மஹரிஷிக் கூட்டம் கூறுகிறது.

52. பாஷாஞானம் அர்த்தஞானம் ஆத்மஞானம் இம் மூன்றுமின்றியவர்களுக்கு வேதாகம புராண இதிகாச ஸ்மிருதிகள் பயன்பட மாட்டாது.

53. உலகத்திலுள்ள ஒவ்வொரு தேசங்களையும் ஒவ்வொரு மிருகங்களாகவும் பரதகண்டத்தைப் பசுவாகவும் வருணித்துப் பசுபதி கூறியிருக்கிறார்.

54. கலப்பில்லாத ஞானயோகத்தை அந்தரங்கத்தில் வைத்துக்கொண்டு பலகலப்புள்ள ஞானயோகத்தைப் பகிரங்கத்தில் காண்பித்துக்கொண்டு சுதந்தர சுபாவமாயிருக்கப்பட்ட மஹாத்மாக்கள் பலர் பாரதகண்டத்தில் இருந்திருக்கிறார்கள்.

55. உண்மையான அத்வைத அர்த்தந்தெரிந்துகொண்டு அனுபவியாமல் வெளிவேஷ சாஸ்திர அனுபவத்தைக்கொண்டு தான் பிரஹ்மமென்று வாயால் பேசிக்கொண்டு உலாவி வருகிற பல பிரஹ்மங்கள் இனிமேல் வரப்போகிறதென்று ஸ்ரீ சங்கரபகவத் பாதாசாரியர் சொல்லியிருக்கிறார்.

56. கீழான செய்கைகள் நடக்கிற ஸ்தானங்களையே மேலான இடமென்று நாலாவது யுககால ஜனங்கள் கருதுகிறார்கள்.

57. சர்வேஸ்வரனும் திரிமூர்த்திகளும் தங்களது பிரபஞ்ச காரியங்கள் நடைபெறும் பொருட்டும் நிறைவேறும்படியும் மாயா சக்திகளின் உதவியை நாடுவதுபோல, அவதார புருஷர்களும் ஆசாயர்களும் மாயாசக்திகளை வகிக்கவேண்டிவருகிறது.

58. கருமயோகத்தில் சுருசுருப்பும் பக்தியோகத்தில் சிரத்தையும் ஞானயோகத்தில் நிலைப்பும் இந்த மூன்று யோகத்தையும் விட்டுவிடுவதுமான. ஸ்திதியை உண்மையாகப் பெற்றுள்ளவர்களை **மஹரிஷிகள்** தங்கள் கூட்டத்தில் சேர்த்துக் கொள்ளுகிறார்கள்.

59. மஹான்களிடமுள்ள கெட்ட குணங்களைமட்டும் எடுத்துக் கூறுபவர்களுக்கு நாய் ஜென்மமும் இல்லாத நற்குணங்களை ஆரோபித்துக்கூறுபவர்களுக்குக் கழுதை ஜென்மமும் நிச்சயமாய் கிடைக்கிறதென்று வாதராயணமஹரிஷி கூறுகிறார்.

60. காலவொற்றுமை புருஷமுயற்சி குருவுபதேசம் இம் மூன்றும் ஒன்றுபட்டகாலத்தில் எதார்த்தஞானோதயம் உண்டாகிறது.

61. மாறுங்கடமை மாறாக்கடமை என்ற இரண்டுகடமைகளையும் முடித்தவனை மஹரிஷிகள் ஆசீர்வதிக்கிறார்கள்.

62. பிரஹ்மம் ஒன்றைத் தவிர வேறு ஏதாவதொன்றில் மனதுபற்றியிருப்பவர்களுக்குத் தீக்ஷண்யம் சக்தி ஞானம் ஸ்வாதந்தர்யம் சாந்தம் சமம் உதாரம் உறுதி வீர்யம் இவைகள் முன்னேற்றமடைய முடியாது.

63. ஒரு ஸ்திரீசம்பந்தத்தை விட்டு மற்றொரு ஸ்திரீயின் சம்பந்தமுண்டாவதற்குமுன் பிரஹ்மஞானம் பூர்த்தி பெற்றிருக்க வேண்டும். இல்லையேல், அந்தச் சரீரத்தில் பூர்த்தி பெறுவது சிரமம்.

64. உலகத்திலுள்ள சகலபதார்த்தங்களும் ஒன்று தவராமல் மோக்ஷசாதனமாய்ச்சந்தேகமின்றி எவனுக்குப்படுகிறதோ அவனுக்குச்சீக்கிரம் ஞானோதயம் உண்டாகிறதென்று ஞானமதத் தலைவர் கூறுகிறார்.

65. உலகஸ்திரிகளுக்கு உலக நாயகர்களே தெய்வமென்று கர்மயோகமும், மணவாளனே இல்லையென்று பக்தி யோகமும், பர்த்தாவும் தானும் ஒன்றென்று ஞானயோகமும் போதிக்கிறது.

66. குற்றமுடையவஸ்துவைக்குற்றமாகப் பார்ப்பதால் குற்றமுண்டாகிறது.

67. யோகசாஸ்திரத்தையும் யோக ரகஸ்யத்தையும் ஆதியில் உலகத்திற்கு வெளியிட்டவர் ஹிரண்யகர்ப்பர்.

68. ஜீவன்முக்தர்களது மனோநிலைமையை ஈஸ்வரனாவது ஜீவன் முக்தர்களாவது காணவேண்டுமேயன்றி மற்ற எவராலும் காணமுடியாது.

69. தான்மாத்திரம் தனித்து நிற்றல் ஞானத்தில் ஞானம்.

70. பிரஹ்மரந்திரம் சுழுமுனை கழுத்து ஹ்ருதயம் நாபி இந்த ஐந்திடங்களிலும் பிராணவாயுவை நிறுத்தி நவகண்டயோகிகள் பழகுகிறார்கள்.

71. சகலமனோநினைப்புகளையும் விட்டு ஒரே நினைப்புடனிருத்தலைக்கூட ஓர் வித சமாதியென்று பிராக்ஞர்கள் கூறுகிறார்கள்.

72. வேதத்தினுற் சொல்லமுடியாத பரம் பொருளைக்காண்பதற்கு வேதஸ்லோகங்களைக் கண்டபடி வாயாற் கதறுகின்ற பல பண்டிதர்கள் உலகத்திலிருக்கிறார்கள்.

73. பிரபஞ்சஜனங்கள் வரமுடியாத காட்டில் தவஞ்செய்வதைவிட மனோவாசனைசஞ்சரிக்காத பெரிய காட்டில் தனித்திருப்பது மஹா விசேஷம்.

74. பஞ்சகோசங்களையும் விலக்கிவிட்டு ஆகாசபோதத்துடனிருத்தல் ஞானத்தில் சரியை.

75. யோகாப்பியாஸ காலங்களிலுண்டாகிற நோய்கள் போவதற்காகத் தன்வந்த்ரி பகவானைத் தியானித்துவரவேண்டுமென்று யோகமுடிந்தவர்கள் கூறுகிறார்கள்.

76. பிரஹ்மம் காலம் குணம் ஞானம் ஆத்மா மனம் காமம் கர்மம் குரு தபஸ் இந்தப்பத்துத்தத்துவங்களையே ரிஷிகள் அங்கீரிக்கிறார்கள்.

77. தன்னுடைய நன்மையின் பொருட்டு அன்னிய ஜீவர்களுக்குத்தீமையை விளைவிக்கிறவர்களிடம் கீர்த்தி தேஜஸ் புண்ணியம் காருண்யதேவதை சம்பத்து இவைகள் செல்லுகிறதில்லை,

78. ஸ்திரீகள் அக்னிபோலவும் புருஷர்கள் நெய்போலவும் இருக்கிறபடியால் நெய்யை அக்கினியில் வைத்தால் தான் உருகு மென்பதில்லை. அதன் வாசனை அடித்தாலும் உருகிவிடுமாதலால், சந்நியாசிகளும் யோகிகளும் பிரம்மசாரிகளும் மஹாபுருஷர்களும் தபசிகளும் அக்னியின் வாசனைகூடத்தாக்காது ஜாக்கிரதையாயி ருந்து கொள்வார்கள்.

79. மெல்லிதானதும் கடுமையில்லாததும் சேஷ்டையை உண்டுபண்ணாததும் வீர்யமானதும் தெய்வப்பிரசாதமானதும் இன் பத்தை உண்டு பண்ணுவதும் சுவாதந்தரியத்தைக் குறைக்காததும் சுத்தமானதும் சுருதிக்குப் பொருத்தமானதும் ஹிம்ஸையில்லாத தும் மனதிற்கு ரம்யமானதும் நோயை யுண்டுபண்ணாததும் ஞான சாதனமுமான ஆகாரத்தை அறிவாளிகள் உட்கொள்ளவேண்டும்.

80. ஒன்றில்லாத ஒரு ஜோதி வஸ்துவினிடத்தில் மனது ஒடுங்கியிருப்பது யோகத்தின் முடிவு.

81. எந்த எல்லைக்குட் சென்றவுடன் மீறிய ஆனந்தம் யாதொரு காரணமுமில்லாமல் உண்டாகிறதோ அந்த எல்லையில் மஹத்துக்களின் சஞ்சாரமிருக்கிறதென்று நிச்சயமாகத் தெரிந்து கொள்ளவேண்டும்.

82. சுகதுக்கங்கள் எதுவாயிருந்தாலும் வரவேண்டியவைக ளெல்லாம் வரட்டும் வாராததெல்லாம் இருக்கட்டுமென்று எவன் மனது சலிப்படைகிறதில்லையோ அவன் உண்மை ஞானத்திற்கு அதிகாரியாகிறான்.

83. ஞானயோக திருஷ்டாந்தங்களைக் கருமயோகத்திற்கும், கருமயோக திருஷ்டாந்தங்களை ஞானயோகத்திற்கும் பொருத்திக் காட்டுதல் குற்றம்.

84. நன்மையானாலும் தீமையானாலும் வெற்றியானாலும் தோல்வியானாலும் ஆரம்பித்த காரியத்தை விடாதிருப்பவனைக் கண்டு சூக்ஷுமதேவதைகள் ஆச்சரியப்படுகின்றன.

85. இச்சையற்ற காலத்தில் இச்சையில்லாத வஸதுக்களெல் லாம் அழையாமலே வந்து சுற்றுகின்றன.

86. சத்துவ சமஸ்காரம் மாத்திரம் மிகுந்திருந்து விருத்திக ளில்லாததாகும்போது அஸம்ப்ரக்ஞாதஸமாதி.

87. எல்லாப்பிராணிகளிடத்திலும் பேதமின்றி ஒரே கட வுளைக் காண்பதுதான் சமத்துவபுத்தி யென்று மஹான்கள் கூறு கிறார்கள்.

88. ரஜஸ் தமஸ் இல்லாத காலத்திலுள்ள மனது ஆத்ம சொரூபத்தை நோக்கி மேலே செல்ல ஆரம்பிக்கின்றன.

89. நமது ஜென்மாந்தரபாபபுண்ணிய கருமங்கள் பரமாத் மாவை அறியவிடாது தடுத்துக் கொண்டிருக்கிற தென்று புத்தபக வான் கூறுகிறார்

90. பிரபஞ்சத்திலுள்ள ஒவ்வொரு வஸ்துக்களிலும் ஒவ் வொரு பரமாத்மாவை அறிய ஆசை கொண்டவன் பேத ஞான அறிவாளி.

91. எந்தக் காரியங்களிலும் இடைவிடாது முயற்சிசெய்து கொண்டிருப்பவர்களிடமும் சோம்பல் மயக்கம் நித்திரை அபாவ ஞானம் இவைகளில்லாதவர்களிடமும் பிரயத்தனலக்ஷ்மி வாசஞ் செய்கிறாள்.

92. மனதை ஏகாக்கிரப்படுத்திக்கொண்டு எதை நினைத்தா லும் அது வுடனே சித்திக்கிறது.

93. திரிமூர்த்திகளும் காலசக்தியால் கட்டுப்பட்டுப் பந்த மடைகிறார்கள்.

94. யாதொரு சங்கல்பமுமில்லாத எதார்த்த உண்மை ஞான நிஷ்டைக்கு இடங்கொடுத்து விட்டால் உலக சிருஷ்டியின் விருத் திக்கு விரோதமுண்டாய் விடுமென்று பிரபஞ்ச கர்த்தாவும் திரி மூர்த்திகளும் நினைக்கிறார்கள்.

95. உண்மை ஞானமும் உலகஞானமும் ஒருவனிடத்தில் ஒரே காலத்தில் சேர்ந்திருக்க முடியாது.

96. பேதமுள்ள வஸ்துக்களில் பேதமில்லாத ஒரு வஸ்துவைப் பேதமில்லாது காண்கிறவன் பெரிய தபோபலமுள்ள விசேஷ பாக்கியசாலி.

97. ஒன்றை உண்டாக்குவதற்கும் ஒன்றை அழிப்பதற்கும் மற்றொன்றின் உதவி வேண்டியிருப்பதால் ஒன்றையுங் கருதாதிருப்பது உத்தமம்.

98. விளையாட்டாகச் செய்யப்படும் புண்ணிய பாப கர்மங்களும் அனுபவப் பிராரத்த கர்மமாகக் கலந்துவிடுகிறது.

99. காமக்குரோத குணங்கள் சம்பந்தியாமற் செய்யப்படும் கர்மபலன்களை ஞானக்னி எரித்துவிடுகிறது.

100. வேண்டாமென்று வெறுத்துத்தள்ளிய உலகமயக்கங்கள் மீண்டும் திரும்பிவரும்போது உண்மையான சாதுசங்கவுதவி வேண்டியிருக்கிறது.

101. உலக சஞ்சாரமுடையவர்களாயிருந்தும் உலகத்தோற்றமும் அதன் அனுபவங்களும் தோற்றுதஹ்ருதயமுடையவர்கள் பிரஹ்மவரிஷ்டன் என்ற நிலைமையை அடைந்தவர்கள்.

102. பேச்சளவின் ஞானமே பேச்சில்லாஞானத்திற் கொண்டு போய்ச்சேர்த்து விடுகிறது.

103. பரவாசுதேவர் மஹாதேவர் பிரம்மதேவர் சுப்ரமண்ய தேவர் கணபதீதேவர் இந்திரன் சூர்யன் சுக்ரன் பிரஹஸ்பதி சந்திரன் சனீஸ்வரன் வருணன் அக்னீ எமதருமராஜன் ஜனகாதி மஹரிஷிகள் காகபுஜண்டர் அகஸ்தியர் கருடன் நந்தீஸ்வரர் தன்வந்திரீ தத்தாத்திரேயர் விஸ்வாமித்திரன் அத்திரிமஹரிஷி வசிஷ்டர் கண்ணுவர் நாரதர் கௌதமர் பதஞ்சலி கபிலமஹரிஷி புத்தர் திருமூலர் ஸ்வாயம்புமனு. ஸ்ரீ ராகவர் கண்ணன் பீஷ்மர் பராசரர் ஜடகோபர் திருஞானசம்பந்தர் மாணிக்கவாசகர் சங்கரபகவத்

பாதர் ஸ்ரீ பாஷ்யகாரர் மத்துவமுனி முதலியவர்கள். அனுஷ்டித்து வந்த அந்தரங்கமதானுஷ்டான மெதுவோ அதையே அனுஷ்டித்து வரவேண்டுமேயன்றிச் சாமர்த்தியசாலிகளால் இடைக்காலத்தி லுண்டாக்கப்பட்டிருக்கிற மதங்களை அங்கீகாரம் செய்வது உசித மல்ல.

104. தெளிந்த ஞானியைக் காட்டிலும் தேர்ந்த ஞானி சிலா கிக்கத்தகுந்தவன்.

105. அதிகஆத்திரத்துடன் ஞானம் யோகம் பக்தி அனு பவ சாஸ்திரம் இவைகளை அப்பியாசிப்பதை விட அதிக அமைதி யுடன் அப்பியாசிப்பது மாறாத நல்ல பிரயோஜனத்தைத் தருகின் றது.

106. உலகம் தேசம் மதம் காலம் ஜாதி அகங்காரம் அர சாங்கம் சுற்றம் தோற்றம் உடை நடை ஆசாரம் ஸ்நேகம் பிரயா ணம் அன்பு வாக்கு நீதி நினைப்பு நிச்சயம் உணவு ஞானம் இந்த இருபத்தொரு கட்டுப்பாடுகளினின்றும் உண்மையாக விலக்கிக் கொண்டவர்கள் எதார்த்த சன்னியாசிகள்.

107. ஒருமதத்தின் உண்மையே எல்லாமதங்களின் உண் மையென்று தெளிந்தஞானிகள் யாதொன்றிலும் சலன மடைவ தில்லை.

108. பிரவிர்த்திஞானி நிவிர்த்திஞானி இருவருக்கும் ஞான மும் மோக்ஷமும் சமமாயிருந்தாலும் பிரஹ்மசுகம் மாத்திரம் ஏற்றக் குறைச்சலாக இருக்கிறது.

109. ஒருமதத்திலிருந்துகொண்டு பலமதங்களின் உண்மை களை அறிந்துகொள்ளவேண்டுமென்றநீதி பிரவிர்த்தி ஞானிகளுக் கன்றி நிவிர்த்திஞானிகளுக்கல்ல.

110. ஞானி அஞ்ஞானி இருவருக்கும் அறிவு அறியாமை என்ற வித்தியாஸமேயன்றி வேறில்லை.

111. சீக்கிரம் எவனுக்குக்கீர்த்தி உண்டாகிறதோ அவனுக்கு அதே சீக்கிரம் கீர்த்தி மறைகிறது.

112. பகிர்முக அந்தர்முக கீர்த்திகளுக்கு ஆசைப்படுவதை விட எங்குந்தானாய் நிறைந்துள்ள பரமபாக்கியமான கீர்த்தியே மாறாதது.

113. உள்ளதும் இல்லாததுமில்லதே உண்மை வஸ்து.

114. பேதஞானத்தினால் அபேத ஞானத்தை அடையலாமென்று துவைதமதம் கூறுகிறது.

115. உண்மையல்லாத சில வுண்மைகளும் உண்மையான சிலவுண்மையல்லாதவைகளும் எல்லோருடைய ஹிருதயங்களிலும் தோன்றித் தோன்றி மறைகின்றன.

116. பிரபஞ்சத்திலுள்ள ஒவ்வொரு ஜீவர்களின் மனோவிருத்தியும் ஒவ்வொரு பேதவிஷயங்களிற் சென்று கொண்டிருக்கின்றன, ஒன்றிலுஞ்செல்லாது சும்மாஇருக்கும் விருத்தியுடையவர்களுக்கே பிரஹ்மசாக்ஷாத்காரம் வாய்க்கிறது.

117. ஓர் பெண்மணியின் கற்பை அழிக்கநினைக்கும் போதே நமது கற்பும் சத்தியதேவதையும் நம்மைவிட்டு விலக ஆரம்பிக்கிறது.

118. அன்பு அமைதி ஆத்திரம் இம்மூன்றும் ஒன்றன்பின் ஒன்றான ஹம்ஸபூதங்கள்.

119. பற்றைவிடுவதும் வைத்துக்கொள்ளுவதுமான முயற்சியைக் காட்டிலும் பற்று நம்மைவிடும்படி செய்து கொள்ளுகிற முயற்சியே விசேஷம்.

120. சரீரப்பற்று இருக்கிறவரை உருவத்தையும் இல்லாத காலத்தில் நிர்க்குணத்தையும் உபாசிக்கலாம்.

121. எந்தக் காலத்தில் எந்தக்காலசக்கரம் யாதொரு தடையுமின்றி விரைவாகச் சுழன்று கொண்டிருக்கிறதோ அந்தக் கால சக்கரத்தில் அகப்படாமல் அதிரகஸ்யமாக அதை ஜெயிக்க முயற்சிப்பவர்கள் உண்மையின் உருவந்தெரிந்த தீரபுருஷர்கள்.

122. ஒருகாலத்தில் ஒருவராலாவது ஒருகூட்டத்தாராலாவது உண்டாக்கப்பட்ட மதங்களிலும் அதன் கட்டுப்பாடுகளிலும் எதார்த்த நிலையை அறிய எண்ணங்கொண்டவர்களும் ஸ்வாதந்தர்ய சுவாதீன புருஷர்களும் சம்பந்தப்படமாட்டார்களென்று புத்தபகவான் சொல்லுகிறார்.

123. ஈஸ்வரசக்திபெற்ற அவதாரஹம்ஸரூப மஹாபுருஷர்களும் ஆசார்யர்களுங்கூட அவதாரகாரியம் முடிவடையும் பொருட்டு அந்தரங்கத்தில் ஒற்றுமையையும் பகிரங்கத்தில் வேற்றுமையையும் ஒருவருக்கொருவர் காண்பிப்பார்கள்.

124. பேசாதஞானம் பேசுகிறஞானம் இரண்டிலும் பிரதிபலித்துக்கொண்டிருக்கிற பிரஹ்மசுகத்தைப்பிறழாது அறிந்துகொண்டிருக்கிறவர்கள் பிரஹ்மரிஷி ஸ்தானத்திற்கு அதிகாரிகள்.

125. கேட்கத்தகாத உலகசம்பந்தமான தூஷணவாக்கியங்களைச் செவியின்வழியாக மனது வாங்கியவுடன் முன்பின்யோஜியாமல் திடீரென்று அடங்காக்கோபம் ஆத்திரம் ரத்தக்கலகலப்பு கண்சிகப்பு இவைகளுண்டாவதுபோல, பிரஹ்மசாக்ஷாத்கார மஹாவாக்கியங்களையும் ஈஸ்வரநாம மஹா மந்திரங்களையும் ஹ்ருதயம் வாங்கியவுடன் இதுவரை தானறியாத தெய்வானந்தம் சாந்தஎண்ணம் ஒரு நாளுங்காணாத ரோமச்சிலு சிலுப்பு சத்துவகுணப்பிரதான தெய்வசம்பத்து இவைகளுண்டாகின்றன.

126. உலகமும் அதன்மூலவஸ்துவின் பரிணாமசக்தியும் அதன் சாதனவர்க்கங்களும் உலகமபக்கங்களும் அதன் அந்தரங்க பகிரங்க ஆர்ப்பாட்டங்களும் உண்மையில் எவன்மனதை இழுக்கவில்லையோ சலிக்கச்செய்யவில்லையோ அந்தஹிருதயத்தைச் சொந்தமாகவுடைய தீரமஹாபுருஷன் தான் உலகப்பிரஜைகளுக்குப் பிரஹ்மஞானத்தைப்போதிக்குந்தன்மை வாய்ந்தவன்.

127. அழிவுள்ள பாக்கியசாலியும் அழிவற்ற பாக்கியசாலியும் பிரயத்தனமில்லாது காகதாலீய நியாயப்படி ஒன்று பட்ட

காலத்தில் அழிவற்ற பாக்கிய சாலியின் அந்தரங்க ஆத்மானந்தக் காற்றடித்தமாத்திரத்தில் அழிவுள்ள பாக்கியசாலி அதிர்ஷ்டவானாகிறான்.

128. மாயையைத் தாண்ட முயற்சிசெய்கிறவர்களுக்கு மாயையே சகாயஞ்செய்கிறது.

129. காரிய காரணங்களில்லாமற்போகக் காந்திமதி பிரசன்னமாகிறாள்.

130. அஷ்டமாசித்திகளின் ஆசை ஸ்திரீகளின்போக இச்சை இவைகளை மனத்திலிருந்து விட்டுவிட்டவன் பிரம்மசாரி.

131. அநேக பூமி திரவ்யம் ரத்னம் போகம் இவைகள் ஒருவனிடத்திலேயே தங்கியிருப்பது சிருஷ்டிதேவனுக்கு அபிப்பிராயமேயில்லை.

132. முக்குணங்களில்லாத இடத்தில் மனமும் மனமில்லாத இடத்தில் முக்குணமும் மூன்றவஸ்தைகளும் இல்லை.

133. பக்தி யுக்தி சக்தி இம்மூன்றும் ஒருங்கேயுள்ளவர்களால் சாதிக்கக்கூடாதது ஒன்றுமில்லை.

134. தர்மசாஸ்திரப்படிநடப்பது ஞானசாஸ்திரப்படி நடப்பதற்கேது வாகிறது.

135. மனோலக்ஷணத்தை உண்மையாயறிந்தவன் பிரஹ்மத்தையும் அனுபவத்தில் காண்கிறான்.

136. அவதாரபுருஷர்களுக்கு அடிக்கடி பிரஹ்மசுகம் கிடைக்கிறதில்லை.

137. நமஸ்காரம் செய்கிறவர்கள் ஏற்றுக்கொள்பவர்கள் இருவரும் விஷயந்தெரியாதவர்கள்.

138. ஆலயம் வேறு தெய்வம் வேறு தான்வேறு என்ற பேதம் போகிறவரை ஆலயங்களுக்குப்போய் வரவேண்டும்.

139. ஆகாரம் உண்ணும்போது பேசக்கூடாது.

140. அன்னங்களும் பக்ஷணங்களும் எவ்வாறிருப்பினும் நிந்திக்கக்கூடாது.

141. அதிருப்தியோடும் கெட்டமனத்தோடும் உண்ணக்கூடாது.

142. அசுத்தவஸ்துக்களும் சுத்தபாவனையால் நல்ல பலனைத் தருகின்றன.

143. பூமியின் வடபாகமானது ரிஷிக்கூட்டங்கள் வசிக்கக்கூடியதும் புண்ணியமானதும் பரிசுத்தமானதுமாயிருக்கிறது.

144. சூர்யன் உதிக்குங்காலத்திலும் அஸ்தமிக்குங்காலத்திலும் தூங்கினால் தேஜஸ் சக்தி பறிமுதலாய்விடுகிறது.

145. யுகப்பிரளத்தில் உலகம் நசிக்கிறது.

146. ஆலயம் நந்தனவனம் பசுக்கூட்டம் பொதுவீதி ஆறு குளம் தான்யத்தின்மத்தி பயிர்களின்நடு யாகசாலை மடம் புஷ்ப மரத்தடி புண்ணியதீர்த்தக்கரை இவ்விடங்களில் மலஜலங்களை விடுவதால் பாபம் உண்டாகிறது.

147. யுகாந்தப்பிரளயத்தில் தேவர்கள் அழிகிறார்கள்.

148. கற்பப்பிரள்யத்தில் பிரம்மதேவர் ஒழிகிறார்.

149. கற்பாந்தப்பிரளயத்தில் திரிமூர்த்திகளுமில்லை.

150. மஹாகற்பப்பிரளயத்தில் மஹேஸ்வரன் மடிகிறான்.

151. மஹாகற்பாந்தப்பிரளயத்தில் சதாசிவன் மறைகிறான்.

152. பரமப்பிரளயத்தில் பிரகிருதி மறைகிறது.

153. சகஜப்பிரளயத்தில் மூலப்பிரகிருதிமறைகிறாள்.

154. மோக்ஷகாலத்தில் ஜீவனைக்காணோம்.

155. பிரகிருதி மறையும்போதே ஈஸ்வரனில்லை.

156. கடைகியில் மிஞ்சியிருப்பது பிரஹ்மம்.

157. பஞ்சமூர்த்திகள் முருகன் கணபதி இவர்கள் அழிகிறார்களென்பது அவர்களது நாமரூபம் மட்டும் மறைகிறது.

158, பஞ்சமூர்த்திகளும் தங்கள் தங்கள் வேலைகள் ஒழிந்தபின் அவரவர்கள் சரீரங்களைவிட்டுப் பிரஹ்மத்தில் கலந்து ஐக்கியமாய்விடுகிறார்கள். மீளவுந்திரும்புவதில்லை.

159. வருணாஸ்ரமவிதியுடன் சரீரபாவனையால் புண்ணிய கருமஞ் செய்கிறவன் நூறாவது ஜென்மத்தில் முக்தியடைகின்றான்.

160. காலையிலும் மாலையிலும் ஆகாரமுண்ணலாம் இடையில் சாப்பிடுவதால் குற்றமான மனமுண்டாகிறது,

161. உள் பிரபஞ்சமில்லாமற்போனால் வெளிப்பிரபஞ்சமில்லாமற்போம்.

162. பந்தமோக்ஷங்கள் ஜீவாத்மாவுக்கு.

163. பிரஹ்மம் ஒன்றைத்தவிர மற்றெல்லாம் அனித்தியம்

164. நாற்கால் மிருகங்களுக்குள் பசுவும் உலோகங்களுக்குள் தங்கமும் சப்தங்களுக்குள் வேதமும் பருவதங்களுக்குள் மஹாமேருவும் சமுத்திரங்களுக்குள் க்ஷீரசாகரமும் தேவர்களில் பிரம்மதேவரும் இரண்டுகாற் பிராணிகளில் பிரஹ்மத்தை அறிந்த பிராம்மணனும் சிரேஷ்டம்.

165. கிழத்தனத்தால் சூழப்பட்டவன். சத்துருக்களால் பீடிக்கப்பட்டவன். பெரிய ஆபத்தில் அகப்பட்டவன்.. வியாதி வந்தவன். கடன் பட்டவன். ஆகாரம் கிடைக்காதவன். சரீர ஆதரவு இல்லாதவன். இவர்களுக்கு மனச்சஞ்சலமும் உலகவெறுப்பும் சன்னியாஸ ஆசையும் ஆத்மஞான எண்ணமும் உண்டாகின்றன.

166. அர்த்தந்தெரியாமல் வேதங்களைக்கற்றவனை மந்த புத்தியுடையவனென்று ரிஷிகள் கருதுகிறார்கள்.

167. சரீரத்திலிருந்துகொண்டே சரீரத்தை அதிக்கிரமித்துவிட்டவன் சரீரமெடுத்தபலனை அடைந்தவனாகிறான்.

168. நின்று கொண்டோ, நடந்துகொண்டோ, படுத்துக் கொண்டோ, சாய்ந்துகொண்டோ, யோகஞான அந்தர்முக அப்பியாஸங்கள் செய்யக்கூடாது.

169. தேவர்களும் மனுஷ்யர்களும் மற்றயாரும் தெய்வத்தை வாஸ்தவத்தில் அறியாத ஒரு காரணத்தினலேயே தேவாலயங்களைத்தேடிச் செல்கிறார்கள். அங்குள்ள விக்கிரகங்களைக்கூர்ந்து கூர்ந்து பார்க்கிறார்கள். அருச்சனை செய்கிறார்கள். உருவத்தைத் தியானிக்கிறார்கள். நமஸ்கரிக்கிறார்கள். யாகாதிபுண்ணிய கருமங்களைச்செய்கிறார்கள். தீர்த்தயாத்திரை மூர்த்திதரிசனம் சமுத்திரஸ்நானம் ஜபம் பாராயணம் இவைகளைச் செய்கிறார்கள். வருணாஸ்ரம தருமங்களை அனுஷ்டிக்கிறார்கள். மதசித்தாந்தங்களில் சம்பந்தப்படுகிறார்கள். வேதம் ஆகமம் ஸ்மிருதி புராணம் இதிகாசம் வேதாங்கம் முதலிய சாஸ்திரங்களை அப்பியாஸம் செய்கிறார்கள். தர்க்கம் இலக்கணம் இலக்கியம் காவியம் நடனம் முதலியன கற்கிறார்கள். கிரகாதிபதி கிராமாதிபதி மடாதிபதி தேசாதிபதி மண்டலாதிபதி ராஜ்யாதிபதி உலகாதிபதி தேவாதிபதி முதலிய பதவிகளை ஏற்றுக்கொள்ளுகிறார்கள். ஒருவரை ஒருவர் கண்டு ஆச்சரியப்படுகிறார்கள். ஒருதேசம் விட்டு மற்றொரு தேசம் செல்லுகிறாகள். மந்திரஜெபம். ஹோமம். சந்தியாவந்தனம் சிராரத்தம் தர்ப்பணம் பிரசங்கம் முதலியவைகளைச் செய்கிறார்கள். யோகாப்பியாஸம் ஞானப்பியாஸம் சமாதிப்பழக்கம் நிஷ்டை தாரணை தியானம் தவம். இவைகளைச் செய்கிறார்கள். பேச்சின்றி மௌனமாயிருக்கிறார்கள். அதிகமாகப் பேசுகிறார்கள். பட்டினிகிடந்து தவம் புரிகிறார்கள். சத்திரம் சாலை குளம் ஆலயம் நந்தனவனம் பாடசாலை முதலியன ஏற்படுத்துகிறார்கள். புருஷன் மனைவி புத்திரன என்ற பேதம் பாராட்டுகிறார்கள். திரிகால ஸ்நான நேமத்தோடிருக்கிறார்கள். பெண்களைக்கண்டு புருஷர்களும் புருஷர்களைக்கண்டு பெண்களும் நாணமடைகிறார்கள். அரசனுக்குக்குடிகள் அடங்கி நடக்கிறார்கள். பிரஜைகளில் ஒருவருக்கொருவர் பெரியவன் சிறியவன் என்ற பேதம் பாராட்டுகிறார்கள். ஆடவருக்குப்பெண்கள் கட்டுப்பட்டிருக்கிறார்கள். சிஷ்யன் குருவுக்கு அடங்கி நடக்கிறான். குருபெரியவர் சிஷ்யன் சிறியவன் என்ற பேதபுத்தி தோன்றப்

படுகிறது. சகலரும் ஓயாது தொழில் செய்து கொண்டிருக்கிறார்கள். இரவு பகல்கள் மாறி மாறித்தோற்றுகின்றன. ஒருவர் மனத்தை மற்றொருவர் அறிவதில்லை. ஒருவன் மற்றொருவன் தயவை எதிர்பார்க்கிறான். தூக்கம், விழிப்பு இவைகளை உடையவர்களாயிருக்கிறார்கள். அறிந்தவர்கள் அறியாதவர்கள் என்ற பேதத்தோடிருக்கிறார்கள். நன்மை தீமைகளைச்செய்கிறார்கள். ஆறாதாரபாவனை சோடசகலாமார்க்கம். சுழுமுனைநாட்டம், இமையாத்திருஷ்டி கேசரி சாம்பவி பைரவி, முதலிய முத்திரைகள் இவைகளை அப்பியாசிக்கிறார்கள். ஆசனம் இயமநியமாதிகள் சமதமம் இவைகளைப்பழகுகிறார்கள். ஆசாரியனிடம் சிஷ்யன் பாடங்கேட்கிறான். குரு சிஷ்யனுக்கு வுபதேசம் செய்கிறார். சிஷ்யர்கள் குருதக்ஷிணைகளைச்செலுத்துகிறார்கள். குரு பெற்றுக்கொள்ளுகிறார். அரசன் தண்டிக்கிறான். ஒருவருக்கொருவர் நமஸ்காரம் செய்கிறார்கள். மேல்ஜாதி கீழ்ஜாதி என்ற வித்தியாஸம் நினைக்கிறார்கள். காஷாயம் ருத்திராக்ஷம் துளசிமணி திருமண் விபூதி முதலியவைகளைத்தரித்துக் கொள்ளுகிறார்கள். பகவானை நினைத்து உருகி உருகி அழுகிறார்கள். தாடி வளர்க்கிறார்கள். மொட்டையடித்துக்கொள்ளுகிறார்கள். பிக்ஷை வாங்குகிறார்கள். பிக்ஷைபோடுகிறார்கள். நித்திய நைமித்திக பிராயச்சித்த கருமங்களைச்செய்கிறார்கள். குலதேவதைகளைப்பூஜிக்கிறார்கள். கண்ட கண்ட இடங்களில் கருத்தைச் செலுத்துகுறார்கள். துறவுபூண்டுகொள்ளுகிறார்கள். தருமஞ்செய்கிறார்கள். அரசர்கள் ராஜ்யத்தை ஆளுகிறார்கள். பலவித சங்கல்பஞ்செய்கிறார்கள். பூமிப்பிரதக்ஷணம் செய்கிறார்கள். சந்தேகமான கேள்விகளைக்கேட்கிறார்கள். வைத்தியவாத ஜோதிஷ மாந்திரீக வித்தைகளைச்செய்கிறார்கள். ஆகாயகமனம் பரகாயப்பிரவேஸம் முதலிய சித்திமார்க்கங்களை அனுஷ்டிக்கிறார்கள். இது என்னுடையது இது பிறருடையது என்கிறார்கள். விருப்பு வெறுப்புக்களை உடையர்களாயிருக்கிறார்கள். சந்தோஷம் துக்கம் இரண்டையும் அனுபவிக்கிறார்கள். பசி தாகங்களால் கட்டுப்படுகிறார்கள். தோன்றித் தோன்றி மறையும் காரியங்களையே சிந்திக்கிறார்கள். இன்னும் நாநாவித செயல்களைச் செய்கிறார்கள்.

170. நிஷ்டை சமாதி யோகம் தியானம் இவைகளை ரகஸ்யமாக அப்பியாசிக்கவேண்டும்.

171. குருசிஷ்ய தாரதம்யங்கள் மனோ பேதத்தாலுண்டாகிறது.

172. மூன்றவஸ்தையில்லாதவன் துரியத்தை அடைகிறான்.

173. யாவருக்கும் முன் செய்த கரும வாசனையும் பிராரப்தமும் முன் செல்லுகிறது. அதனதன் அனுபவமும் கிடைக்கிறது.

174. தேவர்களும் மஹரிஷிகளும் தங்களுடைய பதவிகளை இழந்து விடுகிற காலமுமுண்டு.

175. மனத்தையும் செவியையும் ஒருமுகூர்த்த காலம் வரை அந்தராத்மாவில் அடக்கிப்பழகினவனுக்கு உண்மையான ஞானோபதேசம் செய்யும்படி எல்லாம் தெரிந்தவர்கள் கூறுகிறார்கள்.

176. கனிவுள்ள பழவர்க்கங்கள் பற்பல காய் கிழங்குகள் இவைகளால் ஜீவிக்கிறவனும் பிதுர்க்கள் தேவர்கள் இவர்களை ஜலத்தாலும் பற்பல இயற்கையான வஸ்துக்களாலும் வாக்குகளாலும் திருப்தி செய்விக்கப்பட்டவனும் தேவர்களின் ரகஸ்யத்தை அறிகிறான்.

177. ஒவ்வொருகடமைகளையும் சரிவரச் செய்து முடிப்பதனால் காலக்கிரமத்தில் சலிப்படைந்து வெறுப்புற்று உலகம் துக்கமயமெனக்கண்டு நிவிர்த்திமார்க்கத்திற் செல்வதற்காகவே வருணாஸ்ரமதர்மக் கடமைகளும் மற்றெல்லாக் கடமைகளும் பரமேஸ்வரரால் ஏற்படுத்தப் பட்டிருக்கின்றன.

178. காமம் குரோதம் பயம் லஜ்ஜை மயக்கம் டம்பம் ஜன்மம் மரணம் துக்கம் தந்திரம் மந்திரம் யந்திரம் பூஜை யாகம் நடை பாவனை தூக்கம் விழிப்பு வார்த்தை மௌனம். வந்தனம் பசி-தாகம் விஷமம் சந்தோஷம் சங்கற்பம். சங்கம் சாஸ்திரம் யாத்திரை உபதேசம் சேவை ஜீவன் சமாதி நிஷ்டை மாயை ஈஸ்

வரன் இவைகளை உள்நோக்கி உள்ளிருந்து விட்டவன் பிரஹ்மமாகி றான்.

179. ஆசையோடு கூடிச் செய்கிற கர்மமானது மிருத்யுவுல கத்திற் சேர்ப்பித்து விடுகிறது.

180. உலக சிருஷ்டி ஆரம்பியாத காலத்தில் காலாதீத மந்திர சிருஷ்டி தேவ மஹரிஷிகளால் பிதாமஹர் உண்டானார். அந்த ரிஷிகள் மஹேஸ்வரரால் உண்டுபண்ணப் பட்டவர்கள்.

181. இவ்வுலக அறிவுகளெல்லாம் ஈஸ்வரர் ஒருவருக்குச் சொந்தமானது.

182. மனதிற்குச் சலனத்தையும் கவலையையும் உண்டு பண்ணுகிறதான உள்ளும் புறம்புமிருக்கும் சகல வஸ்துக்களையும் மனத்தால் விட்டு விட்டவன் உண்மையான சன்னியாசி யாகிறான். வீட்டைமட்டும் விட்டு வெளிப்பட்டவன் சன்னியாசியாகமாட்டான்.

183. மிருத்யுவை அடையும் வழியும் பிரஹ்மத்தைச் சேரும் மார்க்கமும் நம்முடைய மனத்திலேயே மறைந்திருக்கின்றன.

184. சரீர வியாதியால் மனோவியாதியும் மனோவியாதியால் சரீர வியாதியும் உண்டாகின்றன.

185. ஞான வுப்பரிக்கையின் மீதேறிப் பார்க்கிறவர்கள் கீழே யுள்ள ஜனங்களின் துக்கங்களைப் பார்த்துத் தாங்கள் தாபமடைய மாட்டார்கள்.

186. ஜனகாதி மஹரிஷிகள் ஸ்ரீ கிருஷ்ணர் புத்தர் ஜடகோ பர் முதலியவர்கள் காற்பங்கு ஞானத்தை மறைத்து வாழ்ந்தார்கள்.

187. வசிஷ்டர் தத்தாத்திரேயர் ஸ்வாயம்புமனு பிரஹஸ்பதி நந்தீஸ்வரர். அகஸ்தியர் முதலியவர் பாதி மறைத்து விட்டார்கள்.

188. ஜனகராஜன். ஸ்ரீ ராகவர் பகீரதன் இக்ஷ்வாகு யாக் ஞவல்கியர் பீஷ்யர் மஹாபலி இவர்கள் இடையிடையே மறைத் துக் காட்டினார்கள்.

189. சூர்யன் பராசரன் வாதராயணன் சுகர் காஸ்யபன் பிருகு. முதலானவர்கள் சிலசில காலங்களில் யதார்த்தத்தைக் காண்பித்தனர்.

190. சங்கரபகவத்பாதாசாரியர் எதிராஜமஹரிஷி மத்வமுனீந்திரர் வித்தியாரண்யர் வேதாந்ததேசிகர் முதலியவர்கள் முக்காற்பங்கு மறைத்துவிட்டார்கள்.

191. திருஞானசம்பந்தர் திருநாவுக்கரசர் சுந்தரமூர்த்திகள் மணிவாசகப்பெருமான் திருமங்கையாழ்வார் பெரியாழ்வார் திருமழிசையாழ்வார் முதலானவர்கள் பூராவும் மறைத்துக்கூறினார்கள்.

192. இதற்கெல்லாங்காரணம் காலம் தேசம் பக்குவம் இவைகளுக்கேற்றவாறுள்ள ஈஸ்வரநியதி.

193. எதையும் பரிகசியாதிருத்தல், இந்திரியங்களைப்போஷிக்குங்குணமுடையவர்களிடம் சமபுத்தி, தெளிந்தமனம் முகம் இவைகளை உடைத்தாயிருத்தல், பிறரிடம் சல்லாபமாடாமை, புருவங்கோணாத ஹிருதயம், எவனுடையமார்க்கங்களையும் கேளாதிருத்தல், எவனோடும் சேராதல், ஒன்றிலும் நியதியின்மை, குறித்த இடமில்லாமை, ஒருவஸ்துவையும் திரும்பிப்பாராமை, தியானத்துடன் நடந்துபோதல், ஸ்திரீவுருவத்தை மனதிலிருந்துவிலக்குதல், எண்ணப்படி கிடைத்தாலும் கிடைக்காவிட்டாலும் சமபுத்தி, இவைகளை உடைத்தாயிருப்பவன் அமிருதத்தை உண்ணுகிறான்.

194. மனது தான் பிரபஞ்சமும்தேவர்களும் மனமில்லையானால் பிரஹ்மந்தானுள்ளது.

195. உண்மைஞானத்தை உள்ளபடிபேசினால் உண்மையான நாஸ்திகம்போல அபக்குவர்களுக்குத்தோற்றும்.

196. சகுணம் நிர்க்குணம் அதீதம் என்ற மூன்றையும் முமுக்ஷுக்கள் முறையே அறியவேண்டும்.

197. சரீர பாவனையுடையவன் சகுணத்தையும், ஆத்மபாவனையுடையவன் நிர்க்குணத்தையும் தானே தானான தன்மையையுடையவன் அதீதத்தையும் அறியவேண்டிய அதிகாரி.

198. தாம்பிரவிக்ர ஹங்களிலும் கற்சிலைகளிலும் ஆலயங்களிலும்சாஸ்திரங்களிலும் கடவுளைத்தேடுகிறவன் பலனடைய மாட்டான்.

199. நினைக்கப்பட்டது பேசப்பட்டது கேட்கப்பட்டது பார்க்கப்பட்டது வாங்கப்பட்டது உருவப்பட்டது யூகிக்கப்பட்டது சந்திக்கப்பட்டது இவைகள் எதுவாயிருந்தாலும் பொய்.

200. வயிற்றையும் நாவையும் ஜெயித்தவன் சகல தத்துவங்களையும் ஜெயித்தவனாகிறான்.

201. தவம் புத்தி ஞானம். இம்மூன்றுமில்லாதவர்கள் பரமாத்மாவை அறியமுடியாது.

202. முன்னே பிரசன்னமாகிறவர் கடவுளல்ல.

203. பகிர்முகசாதனங்கள் ஒன்றுமில்லாதிருப்பதே உண்மைத்துறவியின் லக்ஷணம்.

204. பிக்ஷையேற்றுண்ணுந்தொழிலும் பந்தமுடையது.

205. உலகசிருஷ்டியின் உண்மையை உணர்ந்தவன் அதன்படி அநுஷ்டிக்க ஆரம்பித்தால் உயிரோடு உலகத்தில் சஞ்சரிக்கமுடியாது.

206. மனதிற் குடிகொண்டிருக்கிற கஷாயம் நீங்காமல் காஷாயம் தண்டுகமண்டலம் மொட்டை புஸ்தகம் பிக்ஷை இவைகளை உடையவர்கள் கடினமான பந்தத்திற்குட்படுகிறார்கள். வயிறுவளர்ப்பதற்கும் இவைகள் ஏதுவாகிறது.

207. வியபிசாரக்குற்றமுள்ளமனைவியை ஆகாரம் வஸ்திரம் முதலியனமட்டுங்கொடுத்து உடனுண்ணல், சேர்க்கை, பேச்சு, இவைகளை விலக்கி வைத்திருக்கவேண்டும்.

208. தனக்காவது பிறர்களுக்காவது குரு ஸ்திரீ இவர்களுக்காவது உயிரைக்காப்பாற்ற வேண்டிய நிமித்தம் பொய் சொல்லுவதாற்குற்றமில்லை.

209. உலகப்பொருள்கள் யாவும் உலகப்பிரஜைகளுக்குச் சொந்தமானவைகளல்ல. தேவர்களுக்கும் தேவாதிதேவனுக்கும் சொந்தமானது.

210. பிறருக்குத் துரோகஞ்செய்கிறவர்களுக்குத்தான் அதிகமான திரவியஞ்சேரும்.

211. உலக விஷயங்களின் ஆசையை விடுதல், தவஞ்செய்தல், கனி காய் கிழங்கு இவைகளை உண்ணல், காலந்தவறாமல் அக்கினியைத்திருப்தி செய்வித்தல், இரண்டு கால ஸ்நானம் செய்தல், சரீரம் இளைக்கப்பண்ணுதல், சொற்ப ஆகாரமுண்ணல், தோல் மரவுரி ஜடை இவைகளைத்தரித்தல், குளிர், காற்று, பனி, வெயில், இவைகளைப் பொறுத்தல், பசி தாகம் சரீரசிரமம் இவைகளைத்தாங்குதல், சாஸ்திரப்படி தவஞ்செய்து சரீரத்தை வாட்டுதல், மனதிற்கும் செவிக்கும் இனிமையான இயற்கையாகிய கீதங்களைக்கேட்டல், மலர்ந்தமரம் கொடி செடி இவைகளின் இயற்கை வாசனைகளை முகறல், சுதந்தர மிருகங்களைப் பார்வையிடல், இவைகளை அநுஷ்டிக்கிறவன் பகிர்முகத்துறவியாகிறான்.

212. எப்போது சகல காமங்களையும் தன்னிடம் அடக்கிக் கொள்ளுகிறானோ அப்போது பிரகாச ரூபமான பரமாத்மா பிரசன்னமாகிறது. நிலைபெற்ற திருப்தி உண்டாகிறது.

213. பிறர் தன்னிடமிருந்தும் பிறரிடமிருந்து தானும் எப்போது பயமடைகிறதில்லையோ, அப்போது ஆத்மதரிசன முண்டாகிறது.

214. எந்தப் பிராணிகளுக்கும் திரிவித காரணங்களால் அபகாரம் செய்யாதவன் ஞானாதிகார முடையவனாகிறான்.

215. ஒருவன் பொருளை மற்றொருவன் திருடினால் அவனது புகழ் புண்ணியம் தர்மம் நன்மை வாழ்வு இவைகளையெல்லாம் திருடினவனாகிறான்.

216. காலமல்லாத காலத்தில் புத்தியின் சக்தியினாலும், கல்வியாலும், சினேகிதர்களாலும், திரவியத்தினாலும், ஒரு விசேஷத்தையும் அடைய முடியாது.

217. ஆயிரக்கணக்கான துக்கங்களும் நூற்றுக்கணக்கான சுகங்களும் மூடனைத் தினந்தோறும் பற்றுகின்றன.

218. பிறர் துக்கத்தைக்கண்டு அதை நிவிர்த்திக்காமல் தானும் துக்கமடைபவன் ஒரு காலத்திலும் சுகமடையமாட்டான்.

219. பொருளில் அதிக ஆசையுடையவன் விலக்கக்கூடிய பாப கர்மங்களை விலக்குவது கடினம். பொருளில் நிற்கின்ற தீமையைக் காணுதவனுக்கு நற்காரியம் கிடைப்பது அரிது.

220. வேதாத்தியயனத்தால் பிராம்மணனுக்குச் சித்த சுத்தியுண்டாவதுபோல, இராஜ்யபரிபாலனத்தால் க்ஷத்திரியனுக்கும், ஒழுங்குள்ள வர்த்தகம் பசுககாத்தல், இவைகளால் வைஸ்யனுக்கும், விவசாய மொன்றினுல் சூத்திரனுக்கும், நாயக விரதத்தினுல் ஸ்திரீகளுக்கும் சித்த சுத்தியுண்டாகிறது.

221. எந்தவிதமான ஆபத்துவந்தபோதிலும் புண்ணிய முயற்சியை யன்றி வேறு எவ்விதமான முயற்சியும் செய்யக்கூடாது.

222 கடமைகளை முடித்துவிடாத மனிதனையும் தேவனையும் மற்றயாரையும் ஜென்ம ஜென்மங்களிலும் கடமைகள் தொடர்ந்தே வருகிறது.

223. கிரேதா திரேதா துவாபர யுககாலங்களிலுள்ள ராக்ஷசர்களெல்லாம் கலியுக காலத்தில் பிராம்மண ஜாதியில் பிறக்கிறார்கள். கெட்ட அகிர்த்தியங்களைச் செய்வார்கள். என்று தேவீ பாகவதத்தில் பரமேஸ்வரராலும் சாந்திபருவத்தில் பீஷ்மாசாரியராலும் கூறப்பட்டிருக்கிறது.

224. முன் மூன்று நாள் காலையிலும் பின்மூன்று நாள் மாலையிலும் அப்புறம் மூன்றுநாள் முயற்சியின்றிக்கிடைத்ததை யுண்டும், அதற்கப்பால் மூன்று நாள் ஒன்றுமே உண்ணுதிருத்தல் கிருச்சிர தபஸ்.

225. தான் செய்தபாபகர்மங்களை வெளியில் கூறுதிருந்தால் அதன் பலன் உண்மையில் அவனைச்சேருகிறது.

226. ஒருமாதகாலம்வரை தீர்த்தபானங்கூட இன்றிப்பிர ஹ்மத்தியானஞ்செய்பவனிடம் சகல பாபங்களும் அணுகுவதில்லை.

227. பசு பக்ஷிகள் இவைகளைக் கொன்றாலும் தெரியாமல் பரஸ்திரீகமனம் சம்பவித்தாலும், வளரக்கூடியமரங்களை வெட்டினாலும், மூன்று நாள் காற்றைப்புஜித்துக்கொண்டு தான் செய்த பாபத்தை வெளியிட்டுச்சொல்லிவிடுவதால் அந்தப்பாபம் விலகி விடுகிறது.

228. முதல் மூன்றுநாள் ஆறுபலம் வெந்நீர் பின்மூன்று நாள் மூன்றுபலம் காய்ந்தபால் அப்பால் மூன்று நாள் ஒருபலம் சூடுள்ளநெய். கடைசி மூன்று நாள் ஒன்றுமுண்ணாதிருந்து பகவத் யானஞ்செய்திருத்தல், இது தப்தகிருச்சிரவிருதம் அறியாமை யாலும் அகங்காரத்தாலுமுண்டாகிய பாபத்தைப் போக்கடித்து விடுகிறது.

229. யாதொரு பாப சமஸ்காரங்களுமில்லாத மனமுடைய வனை மஹேஸ்வரர் கொண்டாடுகிறார். ஆத்மஞானம் பிரதி பலிக்கிறது.

230. ஜீவேஸ்வரர்கள் மாயையினின்றுண்டானவர்கள்.

231. சரீரத்திற்கு மரணம் ஜரை ரோகம் வேதனை முதலியன இல்லாமற் செய்துவிடுவதால் யாதொருவுபயோகமுமின்றெனத் தெளிந்து கொண்டவன் மனுஷ்யாதீதவஸ்துவில் நிலைக்கிறான்.

232. எந்தக்காலத்திலும் எந்தக்காரணங்களைக் கொண்டும் அபாவஞானத்தை அடையக்கூடாது.

233. தெய்வமுயற்சி புருஷப்பிரயத்தனம் இவை இரண்டில் புருஷப்பிரயத்தனமே சிறந்தது.

234. வெற்றியானாலும் தோல்வியானாலும் விடா முயற்சி யுடனிருப்பவனிடம் தைர்ய லக்ஷ்மி சேருகிறாள்.

235. ஜனங்களிடம் பரிகாசமான வார்த்தைகளையோ மற்றெவ் வசனங்களையோ அளவுக்குமீறிப் பேசிவிடக்கூடாது.

236. உண்மையை அறிய விரும்புகிறவர்கள் எந்தவிதமான காரணங்களைமுன்னிட்டும் ஜனக்கூட்டத்தில் வசிக்கக்கூடாது.

237. எவ்வளவு குணமுள்ளவர்களையும் எப்போதும் நம்பி விடக்கூடாது.

238. பரமாத்மாவை அறியவிரும்புகிறவர்கள் காரணமில்லாமால் நினைத்தல் பேசுதல் பார்த்தல் நடத்தல் எடுத்தல் சாப்பிடல் எழுதல் சிரித்தல் இவைகளை அனுஷ்டிக்கக் கூடாது.

239. எவனுடைய காரியத்தில் ஆரம்பமும் முடிவும் வெளியாகத்தெரிகிறதோ அவன் அதிக்கிரமயோகி.

240. உலகப் பொருள்களின் இச்சையினிமித்தம் செய்யப்படுகிற எவ்விதக்கருமங்களும் பயனற்றதாகின்றன.

241. சரீரம் தானென்றிருக்கிறவரை கருமயோகத்தையும், ஜீவன் தானென்றிருக்கிறவரை பக்தியோகத்தையும், பிரஹ்மம் தானென்றிருக்கிறவரை ஞானயோகத்தையும் அனுஷ்டித்துவர வேண்டும்.

242. எந்தப்புருஷனிடம் எப்போதும் நற்குணங்கள் அழியாமலிருக்கிறதோ, அவ்வுத்தமபுருஷன் நான்குவருணம் நான்கு ஆஸ்ரமம் இவைகளின் பலனை ஒருங்கே அடைகிறான்.

243. ஒரே இடத்தில் வசிக்கக் கூடிய எவனும் சகலபாபங்களிலிருந்தும் விலகிவிட முடியாது.

244. எல்லாக்காரிய காரணங்களிலிருந்தும் விடுபடுகிறவன் முக்தனாகிறான்.

245. மனது ஸ்வாதந்தர்யம் இல்லாதது.

246. ஆபத்தில்லாத சமயத்தில் எந்த மனிதனும் எவனிடத்திலும் யாசித்தல் கூடாது.

247. கனி காய்களுள்ள மரங்களையும் குளிர்ச்சியுள்ள விருக்ஷங்களையும், வளர்ச்சி கொள்ளுகிற மரங்களையும், பெரிய காடுகளையும் மலைகளையும் வளர்ச்சி செய்து வைத்திருக்கிற உத்தம அரசர்களுள்ள நாட்டில் வனதெய்வங்களும் சித்தர்களும் ரிஷிகளும் ஞானிகளும் யோகிகளும் நிரம்பியிருப்பார்கள்.

248. புத்திசாலியானவர்கள் முதலில் தனக்குத்தானே உபதேசித்து தன்னை ஜெயித்துக்கொண்டு அப்பால் அன்னியர்களுக்கு உபதேசித்து உலகத்தை ஜெயிக்கவேண்டும்.

249. பிரஹ்மத்தை யுணர்ந்த பிராம்மணர்களும் நீதி சாந்தம் கோபம் உதாரம் இவைகள் நிறைந்த க்ஷத்திரியர்களுங்கூடி வாழ்கின்ற உலகம் சகல விதத்திலும் க்ஷேமமடைகிறது.

250. வைதீகப்பிராம்மணன் தீர்த்தத்தை எப்போதும் சமீபத்தில் வைத்துக் கொண்டிருக்கவேண்டும்

251. ஸ்திரீகளின் விபசாரத்தினாலும் அரசர்களின் அநீதியாலும் பிராம்மணர்களின் கெட்ட செய்கையாலும் உலகம் நடுங்குகிறது. பாபம் பெருகுகிறது. மிருத்யுதேவதை குடிகொள்ளுகிறது. கொடிய நோயுண்டாகிறது. மழை பெய்யாது. கொடிய பசியும் பஞ்சமும் உண்டாகின்றன.

252. சந்தேகமில்லாத சாஸ்திரவிதிகளை உள்ளவாறு அறிந்து கொண்டவர்களிடம் பேசலாம் பழகலாம்.

253. ஞானமில்லாதவர்களுக்கு நிஷ்காம கர்மமே ஆதரவு.

254 நமது விரோதிகளையும் நமது மதத்திற்குச் சத்துருவாயிருக்கப் பட்டவர்களையும் அவரவர்களுக்குத் தக்கபடி உபசரித்தல். மரியாதை செய்தல் இவைகளால் அவர்களைச் சாந்தப் படுத்தவேண்டும்.

255. அரசனை அடுத்தோ அரசாங்க உத்யோகத்தை வகித்தோ பிழைப்பதைவிடக் கேவலமான தொழில் உலகத்தில் வேறொன்று மில்லை.

256. கெட்ட குலத்தில் பிறந்தவர்கள். அதிக ஆசையுள்ளவர்கள். கொடுமையுள்ளவர்கள். லஜ்ஜை யில்லாதவர்கள். தாசிகள். கடமைகளை விட்ட வருணாஸ்ரமிகள். இவர்கள் பிரயோஜனத்தை அடைகிற வரையில் பிரியம்போல் காட்டுவார்கள்.

257. ஐந்துவகைக் கபடங்களில்லாத சிஷ்யனென்று தெரிந்து கொண்டபின் குரு வுபதேசிக்கலாம்.

258. பிரியமாக வசனித்தலென்கிற ஒரு விஷயத்தினாலேயே சகல பிராணிகளுடைய சம்மதத்தையும் பெறுகிறான்.

259. பிரியவசனம் கொண்டவனுக்கு ஹ்ருதயம் துடிப்பற்றுச் சாந்தமாயிருக்கும் சாந்தியுடைய மனம் தீவிர சங்கல்பமின்றி ஆத்ம சொரூபத்தில் நிலைபெற்றிருக்கும்.

260. பிரிய வசனங்களோடில்லாத தானம் தபஸ் தர்மம் யோகம் இராஜ்ய நீதி இவைகள் உண்மையான பலனைத் தருவதில்லை.

261. தன்மனதிலுள்ள பெரிய சக்தியின் வலிமையால் தன் மனத்தை தானே எவன் அடக்கி விடுகிறானோ அவன் சம்ப்ரதாய யோகி.

262. எவன் தன்னைப் பற்றினவரையில் எல்லா விஷயங்களிலும் யாதொரு குறைவுமின்றிச் செய்துகொண்டிருக்கிறானோ அவன் உலகத்தார்களுக்கு உபகாரஞ் செய்ய வல்லவனாகிறான்.

263. மதமுள்ளவன். அஜாக்கிரதை யுள்ளவன். அறிவில்லாதவன். சிறுவன். பித்தன். எல்லோராலும் நிந்திக்கப்பட்டவன் கெட்ட நடையுள்ளவன். சத்துருக்களுக்கு உண்மை சொல்பவன் அரசாங்கத்துரோகஞ்செய்பவன். குற்றமுள்ள உத்தியோகஸ்தன். பெண்கள். மலை. கடினமானகோட்டை. யானை. குதிரை. சர்ப்பம். இவைகளையும் இவர்களிடம் சேர்ந்தவர்களையும் உலக உண்மையை அறிந்தவர்கள் எப்போதும் சேர்க்கையை விலக்கியிருப்பார்கள்.

264. எவனிடம் தர்மம் நிலைத்திருக்கிறதோ அவன் பிராமணன், எவனிடம் தர்மம் நிலைத்திருக்கவில்லையோ, அவன் சூத்திரன்.

265. சரீரசுகத்தைவிரும்புகிறவர்கள் இராத்திரி காலசஞ்சாரத்தை விலக்கவேண்டும். ஏகாந்த யோகிகள் இரவில் சஞ்சரிப்பார்கள்.

266. அதிகமான ஆசை, கோபம், டம்பம் அபிமானம், இவைகள் குடிகொண்ட நாட்டில் ராக்ஷசர்கள், அலிகள், அங்கம் குறைந்தவர்கள், புத்தியில்லாதவர்கள், திருட்டுக்குணமுடையவர்கள், இவர்கள் பிறக்கிறார்கள்.

267. நித்திரைவருகிற இடத்தைக்கண்டு பிடிப்பவன் நிஷ்காரணயோகி.

268. மனத்தை மாத்திரம் அடக்குவது இராஜயோகம்.

269. அனுபவமில்லாத ஆஸ்திகர்களுக்கு வேத சாஸ்திரங்களே பெரிய ஆதரவு.

270. சந்தேகமுள்ள எந்தக்காரியங்களையும் செய்யக்கூடாது.

271. அறியாதபெண்கள், கன்னிகைகள், பிறர் மனைவி, பேடிகள், வியபிசாரிகள், இவர்களிடம் ஒழுங்குள்ள புருஷர்கள் சம்பந்தப்படக்கூடாது.

272. உண்மையான சத்துவகுண தைரியமுடையவனை எந்தவுலகத்திலும் எல்லாராலும் ஜெயிக்கமுடிகிறதில்லை.

273. உயிரைவிடுங்காலத்தில் சரீரமனோ துக்கங்களைப்பொறுத்துக்கொள்ளுகிற சக்தி வாய்ந்தவர்களைப் பெரிய தவமுடையவர்களாகக் கருதவேண்டும்.

274. உண்மை தெரியாதவர்களிடம் பழகக்கூடாது.

275. நம்பிக்கை இல்லாத இடத்திற்குப் போகக்கூடாது.

276. பலகாலங்களாக நிலைத்திருக்கக் கூடியனவென்று எந்த வஸ்துக்களை நினைத்திருக்கிறார்களோ அவற்றையும் பெருக்குள்ள திரவ்யங்களையும் மனத்திலிருந்து விலக்கிவிடக்கூடியவர்கள் ஆச்சரியப்படத்தக்க சூரர்கள்.

277. சர்வஜீவதயாபரக் கடவுளைபோன்ற ஞானிகளையும் பகவத் சொரூப யீஸ்வரனையுமன்றி மற்றயாரையும் நம்பாதிருப்பதே உத்தமமான விவேகிகளுக்கு அழகு.

278. தன் அளவுக்கு மிஞ்சிப் பொருட்செலவு செய்தால் தருமம் விட்டு விலகுகிறது. ஆஸ்ரமதேவதை கோபிக்கிறது. பரிவார தெய்வங்கள் பரிதபிக்கிறது. சரீர தெய்வம் வாடுகிறது.

279. ஒருவன் செய்கிற பாபபுண்ணிய கருமங்கள் மனத்தின் சூக்ஷ்மவாசனையின் வழியாகப் பிராரப்த யீஸ்வர ஆக்ஞையின் மார்க்கத்தினின்றும் பிறழாது அவனுக்கே உண்டாகிறது.

280. காணாத இடங்களில் குற்றங்களைச் சொல்வது, நற்குணங்களில் அசூயைப்படுவது, பிறர்களால் புகழப்படும்பொழுது முகத்தைத் திருப்பிக்கொண்டு பேசாதிருப்பது, காரணமில்லாமற் பேசுவது, பெருமூச்சுவிடுவது, உதட்டைக்கடிப்பது, தலையை அசைப்பது, அடிக்கடி நெருங்கி வருவது, சம்பந்தமில்லாதவனைப் போலப் பேசுவது, இல்லாத சம்பந்தங்களை ஆரோபித்துச் சொல்வது, காணாதவனைப்போலப் பேசுவது, கண்டாலும் பேசாமல் வேறாக வந்து உண்பது, இவைகளை உடையவர்கள் துஷ்டர்கள்.

281. பிரஹ்மம் ஒன்றைத் தவிர மற்றவையெல்லாம் நிலையற்றனவென்ற திடஞானத்தை அடைந்தவன் உத்தியோகம், விவசாயம், வர்த்தகம், வேதாத்தியயனம், இராஜ்ய பரிபாலனம், முதலிய எந்தக் காரியங்கள் செய்தபோதிலும் அவைகளிற் சம்பந்தப்படாமல் உலகம் அழிந்தபோதிலும் மயக்கமடையாமல் பிறவாத முக்தியை அடைகிறான்.

282. கெட்ட புத்தியுள்ள மனிதர்கள் தனது உலகபோகங்கள் இழந்துபோனதற்காக யீஸ்வரனை நிந்திக்கிறார்கள். சம்பத்துள்ளவன் மிலேச்சனானாலும் சிறந்தவனாக நினைக்கிறார்கள்.

283. ஆத்மஞானமில்லாமற் செய்யப்படுகிற எக்காரியங்களும் பிரயோஜனப்படுவதில்லை.

284. உலகத்தையும் மற்றவர்களையுங்கண்டு பொறாமைப்படுகிறவனை விட்டுச் சம்பத்து விலகுகிறது.

285. வெளிக்கு அகிர்த்தியம்போல் தோற்றினாலும் தனக்கும் கடவுளுக்கும் கிர்த்தியம்போல் படுகிற எக்காரியங்களையும் யாதொரு தடையுமின்றிச் செய்யலாம்.

286. உலக சம்பத்தில் மயங்கிக்கொண்டிருக்கிறவர்கள் வேறு சிரேயஸ் உண்டென்று நினைக்க இடமில்லையாகையால் உலக சம்பத்தை அந்தரங்கத்தில் விலக்கிவிட்டவனுக்கே ஞானசம்பத்து உண்டாகிறது.

287. இவ்வுலகப் பொருள்கள் எல்லாவற்றிலும் ஆசைபற்ற மனிதர்களையும் ஞானி யென்றெண்ணிவிடக்கூடாது.

288. இந்திரியங்களையும் வாக்கையும் மனத்தையும் அடக்கிக் கொள்ளாத மனிதன் சுக மடைகிறதில்லை.

289. ஓடெடுத்துப் பிக்ஷைவாங்கிப் பிழைப்பதைவிடக் கானகத்திலுள்ள யானை புலி கரடி இவைகளுடன் வாசஞ் செய்து கனி காய் கிழங்குகளை உண்டு வாழ்வது சிரேஷ்டம்.

290. தெய்வத்தை மட்டும் நம்பித் தனது முயற்சியை விட்டு விடுபவன் சீக்கிரத்தில் கெட்டு விடுகிறான்.

291. மாதா பிதா குரு இம் மூவரையும் பூஜித்தவன் மூன்றுலகத்தையும் பூஜித்தவனாகிறான்.

292. தாய் தந்தை ஆசாரியர். இம்மூவரும் அபகாரம் செய்த போதிலும் ஹிம்சிக்கக் கூடாது.

293. பிதுர்க்கள் திருப்தியடைந்தால் பிரம்மதேவரும் மாதா திருப்தியடைந்தால் பூமிதேவியும் ஆசாரியர் திருப்தியடைந்தால் பரமாத்மாவும் பிதா திருப்தி கொண்டால் மஹேஸ்வரரும் மனம் திருப்தி யடைந்தால் சாக்ஷி தேவதையும் திருப்தி அடைகிறது.

294. மயக்க வஸ்துக்கள், ஸ்திரீகள், ஆஸனங்கள், படுக்கைகள், பெரிய அழகிய மாளிகைகள், வாஹனங்கள், சகடங்கள், ரதங்கள், பக்ஷிகள், மிருகங்கள், பட்டாடைகள், ரஸங்கள், வாசனைத் திரவியங்கள், கனிகள், புஷ்பங்கள், சங்கீதம், அறுசுவை ஆகாரம், இவைகளிற்பற்று வைத்திருப்பவன். உன்னத நிலைமைக்கு வர முடியாது.

295. எந்த விஷயத்தில் உண்மை பொய் போலாய் விடுமோ அந்த விஷயத்தில் உண்மை சொல்வது கூடாது. எந்த விஷயத்தில் பொய் உண்மை போலாகுமோ அந்த விஷயத்தில் பொய் சொல்வதாற் குற்றமில்லை.

296. சத்திய அசத்தியங்களின் லக்ஷணங்களைத் தெரிந்து கொண்டவன் இரண்டின் உபயோக காலா காலங்களையும் தெரிந்து கொள்ளுவான்.

297. வேதத்திற் கூறப்படுகிற கொலையானது, யாகத்தின் மூலமாய் உலக ரக்ஷணத்தை உண்டாக்குவதால் உண்மையில் ஹிம்ஸையில்லாத பிரவிர்த்தி தர்மமாகிறது.

298. எவர்கள் எல்லாத் தேவர்களையும் நமஸ்கரிப்பவர்களும், எல்லாத் தர்மங்களையும் கேட்பவர்களும், தாமஸ ராஜஸ குணங்கள் விடுபட்டுச் சுத்த சத்துவமாய் நிலைபெற்றிருக்கிறார்களோ, அவர்கள் தாண்டுதற் கரிய பிறவிக் கடலைத் தாண்டிவிடுகிறார்கள்.

299. இந்திரனும் பிரம்மாவும் விஷ்ணுவும் மஹேஸ்வரனும் ருத்திரனும் சதாசிவனும் ஸ்தோத்தரிக்கக் கூடிய தெய்வத்தை எவர்கள் சூக்ஷ்மமனத்தாற் பூஜிக்கிறார்களோ அவர்கள் உத்தமமான அப்ராகிருத சொரூபத்தை அடைகிறார்கள்.

300. ஜனங்களுக்குப்போதிப்பதற்குமுன் தனக்குத்தானே போதித்துக் கொண்டவனுயிருக்கவேண்டும்.

301. பிறர்குற்றங்களை வெளியிற் சொல்பவனிடமும் அபகாரம் செய்தவனுக்குப்பதில் அபகாரம் செய்கிறவனிடமும் அடக்கம் வணக்கம் இல்லாதவனிடமும் தர்மந்தெரிந்தவர்கள் பழகக் கூடாது.

302. ஆத்மாவைப் பின்பற்றுகிறவர்கள் அந்தகாரத்தில் நடப்பதில்லை.

303. வேதம் ஆகமம் முழுமையும் அறிந்தும் சகலரிஷிகள் ஞானிகள் வாக்கியங்களை அறிந்தும் பகவானுடைய கிருபையும் மனநிரோதமுமில்லையானல் யாதொருபலனையும் அளிக்கமாட்டாது.

304. சிற்றின்பத்தில் மனதைச்செலுத்துகிறவர்கள் தங்கள் ஹிருதயத்தையும் அசுத்தப்படுத்தி யீஸ்வரனுடைய கிருபையையும் போக்கடித்துக்கொள்ளுகிறார்கள்.

305. உலகத்தை இகழ்ந்தால்தான் மோக்ஷ ஞானத்தில் பிரவிர்த்தியுண்டாகும்.

306. பிரஹ்மத்தை அடைவதும் அதற்கேற்ற காரியங்களைச் செய்வதும் தவிர மற்றவைகளெல்லாம் வீண்.

307. அற்பவிஷயத்தில் ஆசைப்படுவதும் அதிக ஆயுளை விரும்புவதும் தப்பு.

308. இந்திரியங்களும் மனமும் எக்காலத்திலும் திருப்தியடையப் போவதேயில்லை.

309. தன்னைத்தான் தாழ்ந்தவனுக எண்ணுவதால் மேல்முகமாகச் சொல்லுங்காரியங்களில் பிரவிர்த்தி உண்டாகிறது.

310. ஜடதத்துவ பூததத்துவ முதலிய பற்பல வியவகாரிக விஷய சாஸ்திரங்களைக்கற்ற பெரிய நகரங்களிலுள்ள அறிவாளிகளைக் காட்டிலும் மிகத்தாழ்ச்சியுள்ள கல்வியறிவில்லாத நாட்டுப்புறத்து ஆழியன் விசேஷமானவன்.

311. அதிகமான வசனங்கள் ஆத்மாவை அறியவிடாது.

312. மனிதர்களுடைய புகழ்ச்சிகளால் எவன் சந்தோஷமடைவதில்லையோ அவன் கடவுளை அறிய ஆவல் கொள்ளுகிறான்.

313. தன்னை ஞானி யென்றாவது புகழுவாவது உத்தமன் நினைப்பதில்லை.

314. எதையும் அறியவேண்டும் அடையவேண்டுமென்ற மிதமிஞ்சிய ஆசைக்கு இடங்கொடுத்தோமானால் வெகு கவலையும் மோசமும் வந்து குடிகொள்ளும்.

315. பிறரால் அறியப்படாததையும் தம்மால் அறியப்படாததையும் அறிய ஆவல் கொள்ளவேண்டும்.

316. நாம் ஒன்றுந்தெரியாதவனென்று பிறர் எண்ணும்படி நடந்துகொள்ளவேண்டும்.

317. நம்முடைய ஹிருதயத்தை எல்லோருக்குந்திறந்து காட்டக்கூடாது.

318. ஞானிகள் பக்தர்கள் சன்மார்க்கர்கள் தவிர ஏனைய வாலிபர்களிடத்திலும் அன்னியர்களிடத்திலும் சகவாஸஞ்செய்யக் கூடாது.

319. பிரபுக்கள் ஆஸ்திவந்தர்கள் கண்களில் வேண்டுமென்றே தென்படக்கூடாது.

320. எந்தஸ்திரீயோடும் எவ்விதக் காரணங்களைமுன்னிட்டும் சிநேகம் பண்ணக்கூடாது. ஆனால், ஸ்திரீகள் நல்ல ஸ்திதியிலிருக்கவேண்டுமென்று கடவுளைப் பிரார்த்திக்கலாம்.

321. ஈஸ்வரனோடும் ஞானியோடும் மட்டும் அன்யோன்யபாவமாயிருக்கலாம்.

322. உலக ஜனங்கள் நம்மையும் நமது செய்கைகளையும் பெருமையையும் அறியவேண்டுமென்கிற எண்ணத்தை அறிவுள்ளவன் விட்டுவிட வேண்டும்.

323. தூரத்திலிருக்கும்போது நன்மையுங் கீர்த்தியுமாய் விளங்கிய ஒருவன் நேரில் வந்து விட்டால் சிறிது மாறுபட்டுவிடும்.

324. சரீர வெறுப்புண்டானவன் ஞானாதிகாரி.

325. தன் சொந்த மனதின்படி நடப்பதைவிட வெகு தாழ்மையுடன் ஓர் மஹாபுருஷர் அதிகாரத்தின்கீழ் வசிப்பது நலம்.

326. எந்தக் காரியமும் கட்டாயமாகச் செய்யக்கூடாது.

327. எங்கு சென்று பார்த்தாலும் நமது மனச்சாந்திக்கு உற்ற இடம் நம்மிடத்திலும் சாதுக்களிடத்திலுமிருக்கிறது.

328. தன் மனதிற்குப் பொருந்தாத மனைவி இடம் தேசம் புத்திரன் மனிதன் இவைகளை விட்டுவிட வேண்டும்.

329. யோஜனை கொடுப்பதை விட யோஜனை வாங்குவது விசேஷம்.

330. சாந்தியையும் சக்தியையும் அடைவதற்குக் கீழ்ப்படிதலுக்குச் சரியான வழி வேறில்லை.

331. பிரயோஜனமற்ற எண்ணம் வார்த்தை பார்வை கேள்வி நடை இவைகளை அடியோடு விட்டுவிட வேண்டும்.

332. நம்மாற் கூடியமட்டும் உலக ஜனங்களின் சந்தடியினின்று விலகிவிட வேண்டும்.

333. உலக விஷயங்களைக் குறித்து விளையாட்டாகவும் சாதாரணமாகவும் பேசுவதாற் கூடக் குற்றமுண்டாகிறது.

334. பலதடவைகளில் மவுனமாயிருப்பதும் மனுஷர்களுடன் கலந்து சம்பாஷியாதிருப்பதும் நலம்.

335. காலமானது வீணிற்போகாதபடி, ஊர்த்வமுகமான மார்க்கத்திற் சென்று மனதை அதில் நாட்டியிருக்கவேண்டும்.

336. தன்னை மாறுபாடின்றி உண்மையாக அறிவதும் தனது கெட்ட குணங்களைக் கண்டுபிடித்து நிந்தித்துக் கொள்வதும் உத்தமமான பிரயோஜனம்.

337. தன்னைப் பற்றித் தானெவ்வாறிருப்பினும் பிறரைப் பற்றிநல்லெண்ணமாயிருக்க வேண்டும்.

338. மறைவும் ரகஸ்யமுமாயுள்ள வஸ்துவைப்பற்றி அறியாதவர்கள் தர்க்கமாடுகிறார்கள்.

339. ஞானத்திலும்யோகத்திலும் பக்தியிலும் இனங்களையும் வகுப்புகளையும்பற்றிப் பேதமாக எண்ணுவது தப்பு உத்தமமல்ல.

340. தமோகுண ஞானம் வந்தவர்களுக்குச் சாஸ்திர ஆராய்சிகூடப் பாரமாகத் தோற்றும்.

341. தன்மனதைத் தான் ஜெயிக்கப் பிரயத்நனப்படுகிறவன் போலப் பலமான யுத்தவீரன் எவ்வுலகத்திலுமில்லை.

342. அளவற்ற சாஸ்திரங்களின் ஆராய்ச்சியைவிட ஈஸ்வரனுக்கு அடிமையென்ற எண்ணம் சிரேஷ்டமானது.

343. சூர்யோபாசகர்கள் சூர்யனைவிலக்கிவிட்டு அவனுக்குள்ளிருக்கிற அந்தர்யாமியான பரமாத்ம ஜோதியை அறிகிறார்கள்.

344. வேதசாஸ்திரங்களைக் கற்பதைவிடச் சன்மார்க்கத்தில் நடப்பது பிரயோஜனமானது.

345. சாஸ்திரங்களை ஆராய்ச்சி செய்யும்பொருட்டு எடுத்துக் கொள்ளும் சுறுசுறுப்பான ரஜோகுண முயற்சியைவிட மனத்திலுள்ள பலஜென்மாந்தர வாசனைகளையும் துற்குணங்களையும் ஒழிக்கவும் புண்ணியங்களைச் சம்பாதித்துப் பரமாத்ம சொரூபத்திற்கு அர்ப்பணஞ்செய்யவும் செய்துவந்தால் வெகுவிசேஷமானது.

346. தெய்வ ஊழியமான ஞானமார்க்கத்தைத்தவிர வேறு காரியங்களை விசேஷமாக வேதபுருஷன் கூறவில்லை.

347. தாழ்ச்சியில் ஆசையின்றி மாட்சியில் விருப்பங்கொண்டவர்கள் வீணாகக் கெடுவார்கள்.

348. எவன் பரமாத்மாவில் அதிகமாகக் கிரீடித்துக்கொண்டிருக்கிறானோ, அவன் உத்தம பக்தன்.

349. செய்யுங்காரியங்களில் முன்பின் தீர்க்காலோசனை செய்து நிர்மானமாகச்செய்வது சத்துவகுண ஞானத்திற் சம்பந்தப்பட்டது.

350. மனதைச் சன்மார்க்கத்திற் செலுத்துவதாலேயே உடம்பின் நோயின்மையும் ஆரோக்கியமும் உண்டாகிறது.

351. ஒரே சத்தியத்தால் இருவகை உபதேசங்களையும் செய்ய வேண்டும்.

352. உலகத்தார் பேசும் எவ்விதப் பேச்சையும் நம்பலாகாது. எவ்வித அபிப்பிராயத்திற்கும் இணங்கலாகாது.

353. அன்னியர்களுடைய நன்மையைவிடத்தீமையே ஜனங்களுக்கு எளிதாய் மனத்தில் படுகிறது.

354. பதராமல் மெதுவாக எக்காரியங்களையும் செய்ய வேண்டும்.

355. ஞானமும் மனச்சாக்ஷியுமுள்ளவனிடத்தில் யாரும் யோஜனை கேட்கலாம்.

356. யாரிடத்திலும் மிதமிஞ்சின பழக்கத்தை வைத்துக்கொள்ளக் கூடாது.

357. ஈஸ்வரனுக்கு அருவருப்பான காரியங்களைச் செய்யாதிருப்பதால் வேதபுருஷன் பிரசன்னமாகிறான்.

358. தன்னை எல்லாரிலும் தாழ்ந்தவனாக நினைப்பதால் நன்மையும் மேலானவனாக நினைப்பதால் தீமையும் உண்டாகின்றன.

359. வஞ்சகமின்றிச் சக்திக்குத்தக்கபடி ஒவ்வொரு ஜீவாத்மாவும் பிரஹ்மத்தை அறிய முயற்சிக்கவேண்டும்.

360. சிருஷ்டியின் முடிவை ஆராய்கிறவன் பயக்கமடைகிறான்.

361. அழிந்துபோகிற வஸ்துக்களின் பேரிலும் சிருஷ்டிகளின் பேரிலும் நம்பிக்கை வைக்கிறவன் வீணாகிறான்.

362. ஒருகாலத்திலுண்டாகிற தெய்வங்களை நம்புவது தீர்க்க தரிசிகளுக்கு அழகல்ல.

363. நம்மைக்காட்டிலும் மேலானவனிடத்தில் நாம் பழக வேண்டும்.

364. சரிய இச்சையுள்ள மனிதனிடத்திலும் உலக காரியங் களுக்காகத்தன்னை அடகுவைத்தவனிடத்திலும் சமாதானம் நிலைத் திருக்க மாட்டாது.

365. பலவீனமான மனதுள்ளவனும் சிற்றின்ப ஆசையுடைய வனும் லௌகிக காரியங்களில் நாட்டமுடையவனும் ஞானமார்க் கத்திற் செல்வது கடினம்.

366. மனத்தில் ஏழையும் குணத்தில் பிரபுவும் புத்தியில் தாழ்மையும் உள்ளவனுக்குச் சமாதான ஹ்ருதயம் உண்டாகிறது.

367. அகங்காரமுடையவனும் உலோபியும் ஒருபோதும் ஒய்வடைகிறதில்லை.

368. நியாயமில்லாதவைகளை விரும்புகிறபோது மனிதனு டைய ஹ்ருதயம் தானே கலக்கமடையும்.

369. அதிவருணாஸ்ரமியையன்றி மற்றயாரும் கிரமந்தப்பின பற்றுதல்களை வைக்கக்கூடாது.

370. வேதவாக்கியங்களும் மேலோர்கள் சொற்களும் யா தொரு காரணமுமின்றி யிருதாகையால் அலக்ஷியம் செய்து விடக் கூடாது.

371. பண்டித னென்று பெயரெடுக்கவேண்டுமென்ற எண் ணத்தை விட்டு தாழ்மை கபடற்ற மனது உதாரம் ஞானம் இவை களோடு வித்தைகளைக் கற்கவேண்டும்.

372. வேதாகமங்களின் சாதாரண அர்த்தங்களை அறிய அதிகப் பேராசைப் படுவதும் அவைகளைப்பற்றித் தர்க்கிக்கவும் கூடாது.

373. இன்னின்ன சாஸ்திரங்களை. இன்னின்னார் சொன்னார்களென்று விசாரிக்காமல் சொல்லப்படுகிற விஷயங்களை மட்டும் கவனிக்கவேண்டும்.

374. அலங்காரமும் அதிசயமுமுள்ள சாஸ்திரங்களைக் கற்பதைவிட அறிவு அடக்கம் ஞானம் நிவிர்த்தி இவைகளைக் கொடுக்கக்கூடிய சாஸ்திரங்களைக் கற்கவேண்டும்.

375. பிரஹ்மத்தின் ஒரு சாமான்ய பாகம் ஜீவாத்மா.

376. சூர்யன் சந்திரன் அக்னி இம்மூன்றுங் கூடிக் கலந்து நின்ற இடத்தில் யோகிகள் ஆரம்பத்தில் மனதை நாட்டுகிறார்கள்.

377. வேதசாஸ்திரங்களின் அந்தரங்கக் கருத்தை அறிந்து கொண்டவனிடத்தில் அதைக் கற்கவேண்டும்.

378. நாம் அதிகாரஞ் செலுத்துவதைவிட ஒருவர் அதிகாரத்திற் குட்பட்டிருப்பது நன்மை

379. ஒரு சிஷ்யனுக்குக் குருவாயிருப்பதைக் காட்டிலும் ஆயிரம் குருவுக்குச் சிஷ்யனாயிருக்கலாம்.

380. ஞானத்தை விரும்புகிறவன் ஒருவித அபிப்பிராயங்களையும் உள்ளே வைத்துக்கொள்ளக்கூடாது.

381. தற்கால நிலைமையை மட்டுங் கவனித்து வருங்கால நிலைமையைக் கவனியாதிருப்பது எவ்விஷயத்திலும் புத்திமான்களுக்கு அழகல்ல.

382. எதையும் உள்ளே சகித்துக்கொண்டு வெளிக்குச் சொல்லாமலிருக்கவேண்டும்.

383. சகல பொறுப்புகளையும் சர்வேஸ்வரனிடம் ஒப்புவித்துவிட்டுப் பாபகாரியங்களின்றும் விலக்கிக்கொண்டு தியானத்தோடிருந்தால் காலமறிந்து கடவுள் மீட்டிக் கொள்ளுகிறார்.

384. முதலில் நம்முடைய வேலைகளை நாம் குறைவறச் செய்து முடித்துவிட்டால் ஆண்டவன் தன்வேலையை அப்போதே முடித்து விடுகிறான்.

385. உலகப்பற்று விடாத காரணத்தினாலேயே பிரபஞ்ச வஸ்துக்களில் சில நன்மையாகவும் சில தீமையாகவும் வேண்டுவன சில வேண்டாதன சில வென்றும் தோன்றுகின்றன.

386. வெளிக் காரியங்களைப் பற்றி எவ்வளவு கவலையுண்டாகிறதோ அவ்வளவும் ஞானத்திற்குச் சத்துருவாகிறது.

387. கருமானுஷ்டானம் பூர்த்தியானபின் ஞானசாதனங்களைத் தேடிப் பழகவேண்டும்.

388. முடிந்த ஞானியும் பிராரத்த சேஷத்தால் யோகத்தை அப்பியாசிக்கிறான்.

389. சத்சாஸ்திரங்களும் சத்கருமங்களும் சத்குணங்களும் சகுணயீஸ்வர த்யானமும் பிரஹ்மத்தை அறிவதற்குச் சகாயமானவை.

390. தபசிக்குக் கமண்டலமும், யோகிக்குத்தண்டமும், சந்நியாசிக்குப் பிக்ஷையும், ஞானிக்கு நிஷ்டையும், கடைசிவரை மாறாதிருக்கவேண்டும்.

391. நல்ல புத்தியும் கிரமமுமுடையவன் மனிதர்களுடைய நலம் தீங்கு இவைகளைக் கவனிக்கிறதேயில்லை.

392. நமது நம்பிக்கை முழுமையும் ஒவ்வொரு உலக வஸ்துக்களினுமிருந்து மீட்டி ஒன்றுகூட்டிப் பரமாத்மாவினிடத்தில் வைக்க வேண்டும்.

393. உலக ஜனங்கள் இன்றைக்கு விரோதமாகவும் நாளைக், குச் சிநேகமாகவும் காற்றுப்போல மாறிவிடுவார்களாதலால் இவர்களைப்பற்றி உபேக்ஷையோடிருக்கவேண்டும்.

394. பிரம்மசரியம், கிருஹஸ்தம், வானப்பிரஸ்தம், சன்னியாஸம், என்ற நான்கு ஆஸ்ரமங்கள். பிராம்மண க்ஷத்திரிய வைஸ்ய சூத்திரரென்ற நான்கு வருணங்கள் இவ்வெட்டையுங்கடந்து நின்று யாதொரு சட்டுப்பாடும் யாதானுமில்லாத அதிவருணாஸ்ரமம் என்னப் படுகிற ஓர் பெரிய ஸ்தானம் இருப்பதாக வேதத்திற்கூறப்படுகிறது.

395. அழிகிறவர்களாலுண்டாகிற நன்மை தீமைகளும் அழிந்துபோவதால் அதைப்பற்றி அறிவாளிகள் கவனிப்பதில்லை.

396. ஹ்ருதயத்தைப் புத்திக்குக் காவலாகவைத்து ஒருவரையும் உள்ளே விடாமல் ஞானசொரூபத்தை மட்டும் விடவேண்டும்.

397. பேதபுத்தியுள்ளதும் ஆழ்ந்த கருத்தில்லாததுமான மதங்கள் ஞானயோகத்தைமட்டும் போதிக்கின்றன.

398. தனி ஞானிகளுக்குள்ள பிரஹ்மசுகம் மதாசிரியர்களில் ஒருவருக்கும் ஒருக்காலும் வாய்க்கிறதில்லை.

399. இவ்வுலக நன்மைகளையும் நமக்கு அந்த நன்மைகளைச் செய்கிறவர்களையும் வெறுத்து ஞான நன்மைகளைத் தேடவேண்டும்.

400. அற்பக் குற்றங்கள் எம்மாத்திரமென்று அசட்டையாயிருக்கிறவன். பெருத்த குற்றங்களுக்கு ஆளாகிறான்.

401. இவ்வுலகத்தில் சுகத்தோடிருக்கிற காரியம் சரீரம் இவைகள் வேறுலகங்களில் துக்கத்தோடிருக்கிறது.

402. ஞானத்தையடைய விரும்புகிறவர்கள் தாழ்மையான உடை, நடை, ஆகாரம், படுக்கை, வீடு, பேச்சு, நினைப்பு, இவைகளை அனுஷ்டிக்கிறார்கள்.

403. பாபிகளுக்கு எமனுலகிலிருக்கிற ஒரு முகூர்த்த கால தண்டனையானது. இவ்வுலகத்தில் ஆயிரவருஷகாலத் தபசின் பெரிய கஷ்டங்களுக்கு மேலாயிருக்கிறது.

404. வேதவாக்கியங்களும் சாஸ்திர அபிப்பிராயங்களும். நாளடைவில் ஆதிகால உற்பத்தியின் படியின்றி மாறுபட்டு விடுகின்றன.

405. ஆத்மாவில் அன்பின்றிச் சரீரத்தில் மட்டும் வைத்திருக்கிற பக்ஷத்தினால் ஞானத்திற்கு விரோதமான பல மோசங்களுண்டாகின்றன.

406. தான் செய்த பாபங்களுக்கு உள்ளபடி பயந்தவன் பெரியவர்களிடஞ்சென்று அவர்கள் கூறுகிற வேத சாஸ்திர சம்மதப்படி பாபத்திற்குத்தக்க பிராயச்சித்தத்தை யோஜியாமல் சீக்கிரத்தில் செய்து கொள்ளவேண்டும்.

407. கண்ணீர் விடுவது ஒன்றாயிருந்தாலும் கருத்தையொட்டிப் பலவிதமாகப் பிறிகின்றன.

408. சகல காரியங்களிலும் அததன் முடிவு என்னவென்று பார்த்துச் செய்யவேண்டும்.

409. யாராயிருந்தாலும் யாரையும் கண்ணீர் சிந்தும்படி செய்வதால் கண்ணீரின் சொரூபம் அவர்களை மீண்டும் அடைகிறது.

410. ஆழ்ந்த அறிவுள்ளவன் தெய்வத்தின் பாபதண்டனைக்கு உட்பட இடங்கொடுக்க மாட்டான்.

411. பிரஹ்மத்தையன்றி ஜீவாத்மாக்களுக்கு நிலையுள்ள இடமில்லை.

412. சக்கரவர்த்தி முதல் யாவரும் உலக காரியங்களில் ஒன்றிலும் யாதொரு தொந்தமுமில்லாமல் யாத்திரைக்காரன்போலிருந்து கொள்ளவேண்டும்.

413. மரணமானவர்களைப்பற்றிப் பின்னுள்ளவர்கள் ஆண்டவனிடம் ஸ்தோத்திரம் செய்தல், புண்ணிய காரியங்கள் செய்தல் யாத்திரை செய்தல், சிராத்தம், ஹோமம் தர்ப்பணம். தானம். இவைகள் செய்தல் இவற்றின் பலன்கள் எந்தலோகத்தில் எந்த வடிவத்தோடிருந்தாலும் அந்த ஜீவனைச் சேருகிறது.

414. தபசினால் சரீரத்தையும் தியானத்தினால் மனத்தையும் ஞானத்தினால் ஜீவனையும் அடக்கி நடத்தவேண்டும்.

415. தன்னைப்பற்றித்தனக்கே கவலையில்லாதவன் பிறரால் ஒரு லாபமும் அடையப் போவதில்லை.

416. மரணத்திற்குப் பயப்படுவதை விடப் பாபத்திற்கு அஞ்சி நடப்பது உத்தமம்.

417. உடல்போய் விடுமென்ற எண்ணம் எப்போதும் மாறக் கூடாது.

418. உலகமானது அஞ்ஞானத்தில் அனித்தியச் சத்தாக வும் அப்பியாஸ காலத்தில் அசத்தாகவும் ஞானகாலத்தில் நித்தி யச்சத்தாகவும் தோன்றுகின்றன.

419. சிருஷ்டிக்குட்பட்ட எந்த வஸ்துவின்மீதும் சொற்பப் பற்றுதல் கூட இல்லாத காலத்தில் பரமாத்ம தரிசனம் உண்டாகிறது.

420. மயக்கமும் மறைப்புமின்றி ஒருவரும் ஒரு சாஸ்திரத் தையும் எழுதமுடியாது. உபநிஷத்துக்கள், ஆகமஸ்மிருதிகள் கூட அவ்வாறில்லை.

421. ஞானத்திலுண்டாகிற ஆகாரத்தை அருந்துகிறவர்கள் உலக உணவுகளையும் நித்திரை படுக்கை ஆஸனம் வாகனம் இவை களின் சுகங்களை நினைப்பதில்லை.

422. சோம்பல் நித்திரை மயக்கம் அஜாக்ரதை முதலிய தாமஸ்குணங்களுக்கு இடங் கொடாதபடி இருந்து கொண்டு ஜெபம் பிராணாயாமம் பாராயணம் ஸ்தோத்திரம் தியானம் இவ்வ களை அனுஷ்டிக்கவேண்டும்.

423. துற்நாற்றமுள்ள பலவீனமான உடம்பை நானென்று தரித்திருக்கிறவரையில் ஒருவரும் பாபம் செய்யாதிருக்கமுடியாது.

424. ஞானப்பியாஸத்திற்குமுன் உஷ்ணத்தையும் குளிர்ச் சியையும் தாண்டிப்போயிருக்கவேண்டும்.

425. ஞானோதயமாவதற்கு நாழிகையும் காலமுமிருப்பதால் அதில் நம்பிக்கையை விட்டுவிடக்கூடாது.

426. சரீரத்திற்குரிய ஆகாரம் நித்திரை பானம் ஸ்நானம் விழிப்பு இளைப்பாறுவது மலஜலாதிகளைக் கழிப்பது, இவைகளே பரிசுத்த ஞானிகளுக்குப் பெரிய பாரமாகத் தெரிகிறது.

427. தனது இச்சைப்படி சகலமும் கைக்கொண்டிருக்கிறவன் பரமேஸ்வரன் ஒருவனே யாதலால், நமது இச்சைப்படி காரியங்கள் கைகூடாததற்கு வருத்தப் படக்கூடாது.

428. எங்கு சென்றாலும் எப்படியிருந்தபோதிலும் பரமாத்மாவின் கிருபையைப் பெற்றாலன்றி அழிவற்ற பாக்கியவானாக முடியாது.

429. அன்னியர்கள் காரியங்களில் நாம் வலியப் பிரவேசிக்கக் கூடாது.

430. உண்மையான பரிசுத்தத்தை நாடுகிறவன் உலகத்தை விட்டுவிட எண்ணுகிறான்.

431. சகல பற்றுதல்களையும் விட்டுப்பிறிகிறவனோடு பரமேஸ்வரர் வாசஞ் செய்கிறார்.

432. மனிதர்களுடைய துக்கங்களையும் நிர்ப்பாக்கியங்களையும் அடிக்கடி ஒவ்வொருவனும் நினைத்து நினைத்துவந்தால் பிரஹ்மஞான இச்சை தீவிரமாயுண்டாகிறது.

433. எவ்வளவு சூக்ஷ்மமாய்த் தன்னைப்பற்றி ஆராய்ச்சி செய்கிறானோ அவ்வளவு உண்மையான உலக வெறுப்பு உண்டாகும்.

434. வருத்தப் படுவதற்கும் அழுவதற்கும் உண்மையான பக்தன் காரணங் கண்டுபிடிக்கிறான்.

435. உண்மையான பக்தியும் ஞானமும் உதயமாகிறபோது உலகம் முழுமையும் அருவருப்பும் கசப்புமாகத் தோற்றும்.

436. நம்மை ஒருவரும் சட்டைபண்ணாத மாதிரியிருந்துகொண்டால் நமது அந்தர்முக பகிர்முக காரியங்களைத் தடையின்றிச் சாதித்துக்கொள்ள முடியும்.

437. சிற்றின்பப் பிரியமுள்ளவர்களுக்கு ஞானம் போதித்தால் ஆண்டவனிடம் பயமின்றிக் கெட்டுவிடுவார்கள்.

438. எவனுடைய மனதில் தான் செய்கிற பாபங்களைப்பற்றி வருத்த முண்டாகிறதோ அவனுக்கு உண்மையான பக்தி உதயமாகும்.

439. தீவிரமோக்ஷ ஆசையில்லாதவன் பற்பல யாத்திரைகளிலும் சாஸ்திர ஆராய்ச்சியிலும் மதசித்தாந்தங்களை அறிவதிலும் மனதைச் செலுத்துகிறான்.

440. இரவில் கண்விழித்து இன்பம் அனுபவித்தவன் காலையில் துன்பத்தை அனுபவிக்கிறான். சந்தோஷமாய் வெளியே புறப்பட்டவன் கஷ்டத்துடன் திரும்பிவருகிறான்,

441. கண்களை மூடிக்கொண்டிருந்தும் விழித்துக்கொண்டிருந்தும் உண்மையை அறிய முடியாது. இரண்டுமின்றியிருந்தால் சத்திய சொரூபத்தை அடையலாம்.

442. மனதை யாதொரு சேர்க்கையுமின்றி வைத்துக்கொண்டு தபசு செய்யவேண்டும்.

443. இந்திரியங்களில் ஆசையுள்ளவன் அடிக்கடி அங்குமிங்கும் அலையவேண்டி யிருக்கிறது.

444. பிறரைப் பார்க்க எண்ணுதிருத்தல் பிறர் கண்ணுக்குப் புலப்படாமற் போதல் அருமையாய் மெதுவாகப் பேசுதல் அபூருபமாய் வெளியில் புறப்படல் இவைகள் ஞானப்பியாசிக்குரிய லக்ஷணங்கள்.

445. ஏகாந்த வாசத்திலிருந்துகொண்டிருக்கிற உத்தம புருஷன் வேதாகமங்களில் மறைந்து கிடக்கிற ரஹஸ்யங்களையும் மஹரிஷிகளின் ஆராய்ச்சி அனுபவங்களையும் அறிய ஆரம்பிக்கலாம்.

446. ஜீவர்கள் செய்கிற கருமங்களைக் காட்டிலும் ஆசைகளையும் அன்பையும் எண்ணங்களையும் கடவுள் அளந்து பார்க்கிறார்.

447. பிறர் செய்த குற்றங்களை எத்தனைதாம் சகித்துக் கொண்டாலும் சூக்ஷுமத்தில் பார்க்கும்போது நமக்கு பூரண நன்மையே உண்டாகிறது.

448. நமது எண்ணப்படி நாமே நம்மைச் சீர்திருத்த முடியாதபோது பிறரைச் சீர்திருத்த முயல்வது வெட்கமான காரியம்.

449. சாஸ்திர கர்த்தாக்கள் அவர்கள் கூறிய சாஸ்திரங்களின்படி நடப்பார்களென்றெண்ணிவிட முடியாது.

450. பிறரை அடக்கியாள ஆரம்பிக்கிற நாம் நம்மை அடக்கியாள நாம் சம்மதிப்பதில்லை.

451. அளவு கடந்த துன்பகாலங்களிலும் மரணகாலத்திலும் பூர்வ புண்ணியசாலி யென்பது தெரியும்.

452. உண்மையான துறவி உலகத்தில் பைத்தியக்காரன் போல் சஞ்சரிக்கவேண்டும்.

453. ஞானியானவன் சிருஷ்டிக்கேதுவான நினைப்புகளை விட்டுவிடுகிறான்

454. வறுமை நஷ்டம் குளிர் காற்று பனி மழை வெயில் பசி தாகம் இவைகள் வந்த காலத்திலும் ஞானப்பியாசி பிரஹ்மத்தியானத்தில் நின்றும் நழுவக்கூடாது.

455. ஈஸ்வர தண்டனைக்குரிய செய்கைகள், பிறர்களுக்குத் தீமையான காரியங்கள், அநாசாரமான செயல்கள், வேதசாஸ்திரங்களுக்கு மீறின பாபங்கள், நம்மாற் செய்யப்பட்டனவா வென்று தனித்து ஆராய்ந்து பார்த்து உத்தமமான புருஷன் துக்கப்படுகிறான்.

456. போஜனப்பிரியத்தை அடக்குகிறவன் சரீரசம்பந்தத்தால் வரக்கூடிய எல்லாத் துராசைகளும் அடக்கி விடுகிறான்.

457. எல்லோருக்கும் பொதுவானதாயிராத காரியங்களை வெளியிடுவது குற்றம்.

458. சர்வேஸ்வரனது சிருஷ்டியின் ரஹஸ்யங்களையும் நன்மைகளையும் தனித்திருந்து ஆராயவேண்டும்.

459. ஏகாந்தமாயும் மவுனமாயு மிருந்துகொண்டு தன்னை ஆராய்ந்து சூக்ஷ்மமாய்க் கவனிக்கவேண்டும்.

460. விரோதமான விசாரணைகளையும் பயனற்றவைகளான ஆராய்ச்சிகளையும் விட்டுவிடவேண்டும்.

461. சகலவிஷயங்களிலும் சந்தேகந்தெளியாமலும் மனதைத்தெளிவுபடுத்தாமலும் கண்மூடித்தியானித்தும் யாதொரு பலனுமில்லை.

462. மனதிற்கு அனுதாபத்தையும் திடத்தையும் உருக்கத்தையும் கொடுக்கிற சாஸ்திரங்களை அப்பியாசிக்கவேண்டும்.

463. மட்டுத்திட்டமின்றிப் பேசுவதையும் ஆத்திரமாய் அங்குமிங்குமின்றிப் அலைவதையும் வீணான பிரஸ்தாபங்களைக் கேட்பதையும் நன்மையை விரும்புகிறவர்கள் விட்டுவிடவேண்டும்.

464. நான் குறைந்தவன் என்ற எண்ணம் யாரைக்கண்டபோதிலும் இருக்கவேண்டும்.

465. அந்தரங்கபக்தனும் யோகியும் மனதை ஏகாக்கிரப்படுத்த ஆரம்பித்திருக்கிறவர்களும் பிரஜைகளின் கூட்டங்களை விட்டு விலகியிருப்பார்கள்.

466. பல ஜனங்கள் மத்தியில் தன்னையோக்கியனென்று ஸ்தாபிக்கிறதை விடத்தானே தனித்திருந்து தன்னையோக்கியனென்று கண்டு கொள்வது விசேஷம்.

467. மவுனத்திற் பிரியமாயிருதவன் ஆபத்துள்ள வார்த்தைகளைப் பேசுவான்.

468. தனக்குள்ளிருக்கிற பரமாத்மாவைப்பார்த்துக் கொண்டு ஏவ்விதவிக்காரியங்களையும் செய்கிறவர்கள் மாறாத சந்தோஷமடைகிறார்கள்.

469. ஒரு நிமிஷ காலத்திற்குள் வந்து வந்து மாறுகிற இன்பங்களில்ஆசைகொள்ளாதவனும் உலக காரியங்களைப்பற்றி ஒருபோதுங்கவலை கொள்ளாதவனும் பரிசுத்தமான மனதை உடையவன்.

470. அன்னியர்களுடைய வார்த்தைகளையும் செய்கைகளையும் நம்மைச் சேராத காரியங்களைப்பற்றியும் கவனியாதிருப்பதால் ஹிருதயம் சாந்தமடைகிறது.

471. பேசுவதில் நன்மையுண்டாகுமென்று தெரிந்தால் பேசலாம்.

472. பரமாத்மாவைக் குறித்துச் செய்யப்படாத உள்காரியங்களும் வெளிக் காரியங்களும் பிரயோஜனப் படுவதில்லை.

473. சகல ஜீவர்களுடைய மனத்தையும் காரியங்களையும் விசாரிக்கவேண்டிய பாத்திய முடையவன் சர்வேஸ்வரனுகையால் நாம் அதைப்பற்றி விசாரிக்க அதிகாரமே யில்லை.

474. ஒவ்வொருவர்களுடைய மனதிலும் சூக்ஷ்மமான ஒரு காரணம் மறைந்திருந்து புறப்படுகிறது. புறத்திலிருந்து வருகின்றது. போகின்றது

475. அனுத்ம விசாரணை செய்வதை விட்டு ஆத்ம விசாரணை செய்வதால் ஹிருதயம் இல்லாத தாகிறது.

476. பிறருடைய எந்தக் காரியங்களையும் குற்றமென்று தீர்மானித்து விடலாகாது.

477. வேண்டாதவைகளை ஆரம்பத்திலேயே தடை செய்வது சிரேஷ்டம்.

478. எந்த விஷயத்திலும் முதலில் புத்தியில் லேசான நினைவு பின்பு தோற்றம் பிரியம் கெட்டஉணர்ச்சி சம்மதம் இவைகளுண்டாகிறது.

479. உட்காரணக் குற்றங்களை அகற்றுமல் புறக்காரணக் குற்றங்களை மட்டும் விலக்குகிறவன் அற்பமான பலனை அடைகிறுன்.

480. காலத்தையும் கருமத்தையும் கடவுளையும் நம்புகிறவன் எதற்கும் பின்னடையாமல் எதிர்த்துப் போகிறுன்.

481. உயிரோடு உலகத்திலிருக்கிற வரையில் தந்திரமும் துன்பமுமின்றி யிருக்கமுடியாது.

482. அளவற்ற துன்பத்தை அடைந்தவர்கள் துன்பத்தின் மூலத்தைக் கண்டு பிடிக்க ஆரம்பிக்கிறார்கள். கண்டுபிடிக்கிறார்கள். விலக்குகிறார்கள்.

483. மனிதர்கள் பகிரங்கமாய் நம்மை நிந்திக்கும் போது ஜெகதீஸ்வரனை நாடியிருப்பது நல்லது.

484. நாம் யாதொன்றை நன்றாய்ச் செய்தாலும் நல்லெண்ணங் கொண்டிருந்தாலும் மற்றவர்கள் கெடுதலாயும் குறைவாயும் அவமதிப்பாயும் எண்ணுவது நமக்கு நன்மை.

485. நமக்குண்டாகிற துன்பங்களும் துரிதங்களும் விரோதங்களும் காலக்கிரமத்தில் நன்மையைத் தருகின்றன.

486. பழைய வழக்கங்களைவிடுவது கடினம். மனத்தின் இயற்கைக்குணங்களை விடுவது அதிலுங்கடினம்.

487. வெகுகாலம் கஷ்டப்பட்டாகிலும் ஒரு துற்குணத்தை ஜெயிக்கவேண்டும் ஒரு சத்குணத்தை அடையவேண்டும்.

488. நல்ல குணங்களில் பழகியவன் புண்ணிய சொரூபமான தேவர்களுடைய பதவிகளை அடைகிறான்.

489. ஞானயோக மார்க்கத்திற் சென்று தடைகளாகிற துற் சைன்யங்களோடு போராடுகிறவனுக்குச் சர்வேஸ்வரன் சகாயமாயிருக்கிறார்.

490. பராக்கிரம சாலிகளான யுத்தவீரர்களைப் போல ஞானயோகியானவன் வருகிற தடைகளையும் தீமைகளையும் எதிர்த்து நிற்கவேண்டும்.

491. பிறருடைய கவலைகளில் கலந்து கொண்டவனிடத்திலும் வீணைகப் புத்தியை உலகத்திற் செலுத்துகிறவனிடத்திலும் சாந்தியும் சமாதானமும் நிலைத்திருக்க மாட்டாது.

492. அந்தக்கரணத்திலுள்ள சூக்ஷுமமான அஞ்ஞானத்தைப் போக்கமுயற்சிக்காமல் மற்றெந்தக் காரியங்கள் செய்தாலும் பரிசுத்தமான பலனை அளிக்கமாட்டாது.

493. வீணான உலகப்பெருமைகளை விட்டு விடவேண்டும்.

494. எல்லோரும் புண்ணியகருமங்களைச் செய்யாமலே விட்டு விடும்படி சாங்கியர்கள் சொல்வது யுக்திக்குப் பொருத்தமான தல்ல. சித்தசுத்தியானவர்கள் விட்டு விடலாம்.

495. சாங்கிய மதத்தில் வேதப்பிரமாணங்களிருந்த போதிலும் சத்காரியவாதத்தில் வைதீசர்களான மஹரிஷிகள் ஒப்புக்கொள்ளவில்லை. பரத்வவாதத்தில் பரமேஸ்வரரும் அங்கீகரிக்கவில்லை.

496. ஞான மோக்ஷங்களுக்குச் சாதனமான தர்க்கங்களைச் சாதுக்களான மஹரிஷிகள் அங்கீகரிக்கிறார்கள்.

497. சத்துவ ரஜஸ் தமோ குணங்கள் பிரளய காலத்தில் சமமாக இருந்து சிருஷ்டி காலத்தில் ஏற்றக்குறைச்சலாகிறது.

498. பால் ஜலம் இலுமிச்சம்பழம் இளநீர் தேன் இவ்வஸ்துக்களிலும் பரமாத்மா அந்தர்யாமியாயிருந்து அதனதன் குணங்களையும் ரஸங்களையும் அளிக்கிறார்.

499. ஜீவர்களுடைய கர்மாவை எதுவரை ஆதியென்று நிச்சயிக்கிறோமோ அதற்கு முந்தியும் கர்மா இருக்கிறது.

500. ஜீவனும் ஈஸ்வரனும் உற்பத்தியில்லாதவர்களென்று வேதத்திற் பல இடங்களில் கூறப்பட்டிருக்கிறது.

501. பாரமார்த்திக காலத்திலுள்ள அனுபவங்களை வியாவகாரிகத்திலும் வியாவகாரிக காலங்களிலுள்ளவைகளைப் பாரமார்த்திகத்திலும் பொருத்திக் கூறுதல் பிசகு.

502. சத்துவ குணப்பிரவிர்த்தியைக் காட்டிலும் தமோகுண நிவிர்த்தி விசேஷமென்று அஞ்ஞானிகள் கருதுகின்றனர்.

503. ஓரிடத்திலும் யுக்திக்கு நிலையில்லாததான சில மதங்கள் உலகத்திலிருக்கின்றன.

504. சுருதியை மட்டும் நம்பின மதங்களும் யுக்தியை மாத்திரங் கொண்ட மதங்களும் அனுபவத்தை மட்டும் அங்கீகரிக்கிற மதங்களும் அனுஷ்டானத்தை நம்பிய மதங்களும், பிரபஞ்ச சிருஷ்டியில் தோன்றியிருக்கின்றன.

505. வேதம் மந்திரம் யுக்தி அனுபவம் ஆரூடம் அனுஷ்டானம் ஆராய்ச்சி. இவைகளை ஒருங்கேயுடைய மதம் விசேஷமானது.

506. யோக சாஸ்திரத்தில் எந்த அம்ஸம் வேதத்தோடொத்திருக்கிறதோ அதைமட்டும் பிரஹ்மவித்யாயோகிகள் ஒப்புகிறார்கள்.

507. பாதஞ்சலம் பாஞ்சராத்திரம் பாசுபதம் இந்த மதங்களை வேதத்திற் சில பாகங்களிற் கூறப்பட்டிருக்கிறது. சாங்கிய மதத்தை அவ்வளவு அதிகமாகச் சுருதியிற் கூறப்படவில்லை.

508. வேதத்திற் கூறப்படாத மதத்தைப் பரமேஸ்வரரும் மஹரிஷிகளும் அங்கீகரிப்பதில்லை.

509. சாங்கிய மத கர்த்தாவான கபிலாசாரியர் வாசுதேவர் அவதாரம் அக்கினி அவதாரம் என்று இரண்டு வடிவமான உருவங்களாக இருக்கிறார்கள்.

510. ஈரம் காத்திருக்கிற வீட்டில் வசிப்பதால் யோகாப்பியாசத்திற்குத் தடையுண்டாகிறது. சரீர ஆரோக்கியமும் உண்டாவதில்லை.

511. பசியைக் கைவசப் படுத்திவிட்டவன் காமக்குரோத குணங்களை ஜெயிக்கிறான்.

512. நடப்பது சரீரத்திற்கு நல்ல பலத்தைக் கொடுக்கிறது. மனத்தின் வீர்யத்தை அதிகமாக்குகிறது.

513. பசு நெய்யை உண்பதால் சரீரகாந்தி புத்திபலம் இவைகள் விருத்தியாகிறது.

514. நமது நடவடிக்கைகள் பூருதிருப்தி யுடையதென்று நாமே எண்ணுதல் தப்பு.

515. சூத்திரர்களுக்கு வேதாத்தியயனத்தில் அதிகாரமில்லையே யன்றிப் பிரஹ்மஞானத்தில் அதிகாரமுண்டு.

516. அசத்திலிருந்தும் சத்திலிருந்தும் ஜகத்துண்டாயிருக்கிறதென்று சொல்லுகிற இரண்டு மதவாதிகளுண்டு.

517. சம்சாரபந்தத்திலிருக்கும் வரை ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் பேத முண்டு. முக்தி தசையில் இல்லை.

518. அவ்யக்தத்தை அறிதலே மோக்ஷ சாதகமென்றும் அதை உபாஸனம் செய்தலே அணிமாதி சித்திகளை அடைகிற மார்க்கமென்றும் சாங்கியமதம் சொல்லுகிறது.

519. பிரஹ்மஞானத்தில் தனக்கு அதிகாரமில்லை யென்று துக்கப்படுகிறவனைச் சூத்திரனென்று பிரஹ்மசூத்திரம் கூறுகிறது.

520. விசேஷகஷ்டங்கள் நேர்ந்தபோதும், இஷ்டஜனங்கள் இறந்தபோதும், ராஜ்பத்திற்கு அபாயம் நேர்ந்த காலத்திலும். யுத்த பூமியிலும். சுயம்வரகாலத்திலும். விவாக காலத்திலும். யாகசாலையிலும். புண்ணியக்ஷேத்திரங்களிலும். சமுத்திரஸ்நானத்திலும். எவ்லா ஸ்திரீகளையும் எல்லோரும் பார்க்கலாம். தோஷமில்லை.

521. எல்லோருடைய குணங்களையும் ஒருவழிப்படுத்த முயலுதல். அற்பவிஷயங்களுக்குக்கூட இணங்காதிருத்தல். இவைகள் எப்போதும் கூடாது.

522. கண்ணுக்கும் செவிக்கும் கொடுக்கும் ஓய்வை விட நாவிற்கு அதிகம் கொடுக்க வேண்டும்.

523. நம்முடைய சாமர்த்தியங்களை நாமே கூறிப்புகழ்வதிலும் நமது குற்றங்களை ஒப்புக் கொள்வது கௌரவம்.

524. உலகத்தில் எந்த விஷயத்திலும் எல்லோருடைய அபிப்பிராயமும் ஒன்றாயிருக்கவேண்டுமென்று எதிர்பார்க்கக்கூடாது.

525. பிரபஞ்சத்திலுள்ள சகலவிஷயங்களையும் பார்க்கும்போது ஒவ்வொன்றிலும் வெறுப்புற்று நிவிர்த்திமார்க்கத்திற் செலுத்துவதற்காகவே யென்று தெரிகிறது.

526. சுகதுக்காதி போகங்களில் எல்லோரும் நம்மைப் போல வே இருக்கிறார்களென்றெண்ணி விடக்கூடாது.

527. நாமே ஒருவிஷயத்தைப்பற்றி இதுசரி இதுதப்பு என்று தீர்மானித்துக் கொண்டு அதன்படியே மற்றவர்களையும் ஒப்புக் கொள்ளவேண்டுமென் றெதிர்பார்க்க நினைப்பது குற்றம்.

528. யாரிடத்திலும் தாழ்வாகப் பேசவேண்டும்.

529. எந்தக் காரியங்களும் உலகத்தில் ஜெயம் பெறவேண்டு மானால் வைராக்கியமே பிரதான நண்பனாகவும், அனுபவமே மந்திரி யாகவும், முன் ஜாக்ரதையே மூத்தசகோதரனாகவும், நம்பிக்கையே பாதுகாப்பவனாகவும், கொள்ளவேண்டும்.

530. வாழ்வை விரும்பியவர்கள் யாரிடத்திலும் தாழ்வாக இருக்கவேண்டும்.

531. முயற்சிசெய்தால் பலிதமாகாதது உலகத்திலொன்று மில்லை.

532. சூர்யோபாஸனையில் தேவர்களுக்கு அதிகாரமில்லா விட்டாலும் பிரஹ்ம வித்தையில் அதிகாரமுண்டு.

533. துக்க நாசத்தின் சுகஸ்வரூபமும் சுகநாசத்தின் துக்க சொரூபமும் எப்போதும் நிலைத்து நிற்கிறதில்லை.

534. இவ்வுலகத்திலிருந்து நேரே பிரஹ்மத்தை அடைவ தென்றும் ஒவ்வொரு தேவர்களின் பதவிகளை வகித்துக் கடைசி யில் பிரஹ்மத்தை அடைவதென்றும் இரண்டுவகை மார்க்கங்க ளிருக்கின்றன,

535. வேதத்திற் சொல்லப்படுகிற ரகஸ்ய தத்துவங்களை ஆதாரமாகக் கொண்டே பிரம்மதேவர் சகலதேவர்களையும் உலகங் களையும் சிருஷ்டி செய்கிறார்.

536. சரீர சம்பந்தமான அனாத்ம விஷயங்களிலேயே அபி- யோடு மனத்தைச் செலுத்தி ஞான சம்பந்தமான ஆத்மாவையும் பிரஹ்மத்தையும் மறந்திருக்கப் பட்டவர்கள் நாஸ்திகர்கள்.

537. மனுஷ்யர்களுக்குள்ள உடம்புபோலத் தேவர்களுக்கு இல்லையே தவிர வேறொரு ஜோதி வடிவமான சரீரமிருத்தலைக் கொண்டு அவர்களுக்கும் பரமாத்ம உபாஸனையில் அதிகாரமுண் டென்று கிருஷ்ணத்வைபாயனர் சொல்லுகிறார்.

538. மனிதர்களும் யோக மஹிமையால் அணிமாதி அஷ்ட மாசித்திகளின் உதவியைக் கொண்டு ஒரேகாலத்தில் பல சரீரங் களை இஷ்டம்போல் எடுத்துக்கொள்ளலாம்.

539. தேவர்களுக்கு தாபத்திரய துக்கமும் பரமாத்ம ஞா னமும் உண்டாயினும் பிரஹ்மத்தை உபாஸிப்பதற்கேற்ற சரீரம் அவர்களுக்கில்லை.

540. தமக்குப் பொருத்தமல்லாதவைகளை ஈஸ்வரன் செய்த போதிலும் அவரிடம் துவேஷங்கொண்டு எதிர்ப்பதற்காக மிருத் யுவின் வசப்பட்டிருக்கிற தேவ மனுஷ்ய பிதுர்க்கள் தயாரா யிருக்கிறார்கள்.

541. மனுஷர்கள் தேவர்கள் இவர்களுடைய ஹ்ருதய கோ சம் அங்குஷ்டப் பிரமாணமுள்ள மாம்ஸ பிண்டங்களால் சூழப்பட் டிருக்கிறபடியால் அவற்றிற் சம்பந்தப்பட்டிருக்கிற ஜீவனையும் அங் குஷ்டப்பிரமாண முடையவனென்று ஸ்ருதி கூறுகிறது.

542. பரமாத்மத்தியானாதிகாரம் மனுஷ்யர்களுக்கேயன்றித் தேவர்களுக்குக்கிடையாதென்று வேதங்களிற் சில பாகங்களிற் சொல்லப்பட்டிருக்கிறது.

543. மிருத்யுவின் வச மடைந்தவர்கள் கூறுகிற வசனங்களை உதாசீனமாக விட்டுவிடுவதே மிருத்யுவினின்றும் விலகியவர்களு க்கும் விலக ஆரம்பிக்கிறவர்களுக்கும் லக்ஷணம்.

544. மஹாத்துக்களின் கேள்வியினாலும் வேதசாஸ்திர அனு பவத்தினாலும் சொந்தயுக்தியினாலுமுண்டாவது பரோக்ஷ ஞானம். அதற்குமாறு பாடில்லாத உண்மை ஞானத்தைத்தானே அனுபவித் தது அபரோக்ஷஞானம்.

545. பாபம் போலவே புண்ணியமும் பிரவிர்த்திக்கு ஏது வாகித் துக்கத்தைக் கொடுக்கிறபடியால் தீர்க்க திருஷ்டியுடையவர்கள் பாபபுண்ணிய மிரண்டையும் அடியோடு விட்டு விடவேண்டும்.

546. புண்ணிய பாபரூபமுடைய அஞ்ஞான பந்தங்கழிந்த ஜீவன் பிரஹ்மமாகிறுன்.

547. அனுபவரூபமாய் பிரஹ்மவஸ்து பிரகாசிக்கிற காலத்தில் ஜெகத் பிரகாசமான சூர்யன் சந்திரன் அச்னி மின்னல் நக்ஷத்திரங்கள் பிரகாசிக்கிறதில்லை.

548. உண்ணும்போது ஏகாக்கிரபுத்தியுடன் பேசாமல் உண்ணவேண்டும். உணவுகளின் குணதோஷங்களைப் பகுத்தறியக் கூடாது.

549. அன்னத்தைப் பரமாத்மாவாக நினைத்து உண்பதால் அமிர்தத்திற்குச்சமமான பலனைக் கொடுக்கிறது.

550. சகலதேசாதிபதியான ஸ்ரீராகவனை அயோத்தியாதிபதியென்று சொல்வதுபோல, சர்வ வியாபியான பரமாத்மாவை ஹ்ருதயகுகையில் வசிக்கப்பட்டவனென்று வேதம் சொல்லுகிறது.

551. முதலில் வேதவாக்கியங்களான சப்தப்பிரமாணத்தை அறிந்து கொண்டுபின் அதன் தாத்பர்யங்களாகிற அர்த்தப்பிரமாணத்தைத் தெரிந்து அதற்கப்பால் அனுபவப்பிரமாணத்தைத் தெரிந்து கொள்ள முயற்சிக்கவேண்டும்.

552. பரமாத்மா நேரே ஜெகத்தைச் சிருஷ்டிக்கிறபோது பிரகிருதியின் சகாயத்தைத் தேடுவதில்லை. பிரம்மா ரிஷிகள் ஜீவர்கள் இவர்கள் பிரகிருதியின் உதவியால் சிருஷ்டிக்கிறுர்கள்.

553. உலகம் உடல் இந்திரியம் பிராணன் மனம் புத்தி விக்ஞானம் அவித்தை மாயை பிரகிருதி முதலிய தத்துவங்களிலும் சகல ஜோதிஷ் தேவர்களிலும் பிரஹ்மமே அங்கங்கு பிரகாசித்து அதனதன் செயல்களை நிறைவேற்றிவிட்டுத் தனித்து நிற்கிறது.

554. மோக்ஷமடைந்த முக்தனுக்கும் தான் நினைத்த காரியத்தைக் குறைவின்றித்தானே நிறைவேற்றவல்ல சக்தியாகிய சத்திய சங்கல்பத்துவம் கிடையாது.

555. யாகாதி யக்ஞங்களால் உண்டாகக்கூடிய ஐஸ்வர்யமும் ஸ்வர்ககாதி போகங்களும் அனித்திய மென்றறிந்து சமதமாதி குணங்களையுடையவனும் மோக்ஷத்தில் தீவிர ஆசையுள்ளவன் ஞான யோக அதிகாரியாகிறான்.

556. சத்தியம் அசத்தியம் இரண்டுஞ் சேர்ந்தே மனுஷ்ய ஜென்மமாய் வருகிறது.

557. அஞ்ஞானத்தை நரகமாகவும் பிரகாசத்தை ஸ்வர்க்க மாகவும் ஆதிதேவர்கள் சொல்லுகிறார்கள்.

558. ஆசையையும் கோபத்தையும் விடுவது எல்லாஜாதிகளுக் கும் பொதுவான தர்மம்.

559. வேதமானது பரமாத்மாவின் பிராணன். தவம் புத்தி ரன்.

560. அதிகமாகப் பேசாதவனிடம் நிரம்பப்பாபம் சேருகிற தில்லை.

561. நீண்ட ஆலோசனையும் காலத்திற்குத்தக்க அறிவும் ஒன்றோடொன்று பொருந்தியிருக்கமுடியாது.

562. எவன் எந்த முயற்சிகளை ஆரம்பித்தாலும் மூச்சடங்கு கிற வரை முயற்சிசெய்யவேண்டும்.

563. கடனின்மிச்சம் தீயின் மிச்சம் வியாதியின் மிச்சம் சத்துருக்களின் மிச்சம் இவைகள் திரும்பவும் வளர்ச்சியடையு மாத லால் இவைகளில் மிச்சம் வைத்து விடக்கூடாது.

564. வேகமாகக் காரியத்தைச்செய்து முடிக்கிறவனைக்காட் டிலும் மெதுவாக முடிப்பவன் விசேஷமாகிறான்.

565. ஆபத்துக்காலத்தில் புஜிக்கத்தகாததைப்புஜித்தாவது உயிரைக்காப்பாற்றிக் கொள்வதால் தோஷமில்லை.

566. ஆசையும் பசியும் கோபமும் உள்ளவன் வெட்கத்தை வெளியில் காட்டாமல் முடியாது.

567. புருஷர்கள் ஆத்மஞானிகளாவதைக்காட்டிலும் ஸ்திரீகளா ஞானிகளாவதைக்கண்டு தேவர்கள் திருப்தியடைகிறார்கள்.

568. உடலின் அருமையையும் உயிரின் பெருமையையும் தெரிந்து கொண்டவர்கள் உலகத்தின் அருமை பெருமைகளை அறிந்து கொள்ளுகிறார்கள்.

569. எல்லா ஜனங்களையும் திருப்திசெய்து கொண்டு உலகத்தை ஆளவும். உத்தியோகம் செய்யவும். சன் மார்க்கப்படி நடக்கவும். மோக்ஷமார்க்கத்திற் செல்லவும் முடியாது.

570. ஒரே செய்கையானது ஒருகாலத்தில் புண்ணியமும் ஒருகாலத்தில் பாபமும் ஆகிறது.

571. தர்மத்திற்கு விரோதிகளாயிருப்பவர்கள் சாஸ்திரங்களைக் குறைத்துப் பேசுகிறார்கள்.

572. அதனை தன் நம்மையைக்கருதியே யாகத்தில் ஆடுமுதலிய ஜீவப்பிராணிகளைக் கொல்லப்படுகிறதென்று கூறப்படுகிற சுருதியின் கர்மகாண்டவசனம் யுக்திக்குப் பொருந்தவில்லை.

573. ஸ்திரீகளுடைய புருஷன் தனது ஸ்திரீகளால் திருப்தியடைந்தால் சகல தேவர்களும் திருப்தி அடைகிறார்கள்.

574. எவளிடத்தில் பர்த்தா சந்தோஷப்படுகிற தில்லையோ அவள் உருவத்தில் ஸ்திரீயே யன்றி உண்மையில் ஸ்திரீயல்ல.

575. உண்மையான பிராம்மணர்களிடம் எவனுக்கு வீணை துவேஷமிருக்கிறதோ அவன் நாசமடைகிறான்.

576. துன்பங்களோடு ஜீவிப்பதைக் காட்டிலும் மரணம் விசேஷமானது.

577. ஒரு நிமிஷகோபத்திற்கு இடங்கொடுத்து விட்டால் நூறு வருஷத்தபசையும் கெடுத்து விடுகிறது.

578. ஒருதரம் ஸ்திரீ சேர்க்கையால் ரேதஸை வெளியில் விட்டால் அளவிருந்தகாலம் செய்த யோக சக்தி வெளியிற்சென்று விடுகின்றன.

579. யாதொரு விஷயங்களிலும் வஞ்சகமும் சந்தேகமில்லாதவர்கள் ஆசார்யஸ்தானத்திற்கு அதிகாரிகளாகிறார்கள்.

580. ஆசை யென்பவனுக்கு இடங்கொடுத்துவிட்டால் துக்கமென்னும் மிருத்யு மெல்லவந்து சேர்ந்துவிடுகிறான்

581. உருவம் குணம் ஞானம் இம்மூன்றின் தம்மையை அனுசரித்த சாதுக்கள் காணப்பட்டாலும் உருவ சாதுக்களே கலியில் அதிமாகக் காணப்படுகிறார்கள்.

582. எந்தக் கருமங்களால் ஒழுக்கமுண்டாகிறதோ, புகழ் பெருகிறதோ, மனநிலை சரியாயிருக்கிறதோ, சாந்தமுண்டாகிறதோ அந்தக் கருமம் செய்பவனை உயர்ந்த குலத்தானென்று தேவர்கள் எண்ணுகிறார்கள்.

583. தேவாலயங்களிலுள்ள தெய்வப் பிரதிபிம்பங்களான அர்ச்சாவதாரங்களுக்குச் செய்யப்படுகிற ரஸமுள்ள அபிஷேக ஆராதனைகள் பிரயோஜனமற்றவை யென்று எண்ணியிருக்கிற விஷயந் தெரியாத அற்ப அறிவுள்ள ஆஸ்திக ஹிந்துக்கள் கலியுக காலத்தில் குறைவாக இருக்கமாட்டார்கள்.

584. வேற்றுமையுள்ளவஸ்து சேராது. சேர்ந்த வஸ்து வேற்றுமைப்படாது. வேற்றுமைப் பட்டபின் சேர்ந்தால் உண்மையில் சேர்ந்ததல்ல.

585. இருந்த இடத்திலிருந்துகொண்டு புத்தியால் செய்யப்படுங் காரியம் உத்தமம். சரீரத்தாற் செய்யப்படுங் காரியம் மத்திபம் சஞ்சாரத்தால் செய்யுங்காரியம் அதமம் மூட்டை தூக்கிச் செய்யுங் காரியம் அதமாதமம்.

586. பிறர் தூஷிப்பதைப் பொறுத்துக் கொள்ளுகிற மனிதன் தூஷிக்கிறவனுடைய புண்ணியத்தைப் பெற்றுக்கொண்டு

தன்து பாபத்தை அவனிடம் கொடுத்துவிட்டுத் தன்னைச் சுத்தம் செய்து கொள்ளுகிறான்.

587. வெளியிடத்தகாத தன் அங்கம் வெளியாகிற தென்கிற லஜ்ஜையை விட்டுக் கூத்தாடுவதில் சந்தோஷப்படுகிற மயில்போலப் பிறரை நிந்திப்பதால் தனக்குத் தோஷம் வருமென்பதறியாமல் மூர்க்கர்கள் நிந்தித்துச் சந்தோஷப்படுகிறார்கள்.

588. சூர்யன் அக்னி ஆகாயம் பூமி பசு ஜலம் காற்று அதிதி தனதுசரீரம் ஞானி ஜீவராசிகள் மனம் இந்தப் பன்னிரண்டிடங்களில் செய்யப்படுகிற பூஜையைப் பரமாத்மா ஏற்றுக்கொள்ளுகிறார்.

589. ஈஸ்வரனும் ஞானிகளும் புகழக்கூடிய செய்கைகளை உத்தம திருஷ்டியுள்ளவன் செய்யவேண்டும்.

590. கெட்டகுலத்திற் பிறந்த புருஷர்களையும் ஸ்திரீகளையும் காக்கை நாய் பூனை சர்ப்பம் இவைகளுக்குச் சமானமாக எண்ணி லோகபாலர்களும் பயப்படுகிறார்கள்.

591. சுத்தமான நடை செய்கை எண்ணம் இவைகளையுடையவன் கருத்த நிறமுடைய சண்டாளனாயிருந்தாலும் அவனைப் பிராம்மணனென்றும், கெட்டசெய்கை புத்தி நடை இவைகளை உடையவன் சிவந்த நிறமுடைய மறையோனாயிருந்தாலும் அவனைச் சண்டாளனென்றும் வேதோபநிஷத்துக்கள் கூறுகிறது.

592. பலபிராணிகளின் நன்மையை உத்தேசித்து ஓர் பிராணியைக் கொல்வது தீமையாகமாட்டாது.

593. நன்மையை யோஜியாமலும் தீமையை யோஜித்தும் செய்யவேண்டும்.

594. பகிர்முக வஸ்துக்களில் ஆசையை விட்டவர்கள் அதிக நினைப்பையும் பேச்சையும் விட்டு விடுகிறார்கள்.

595. சங்கல்பம் எதினாலுண்டாகிற தென்கிற விசாரணையை ஆரம்பிக்கிறவர்கள் நிவிர்த்தி ஞானத்தைப் பெற்று விடுகிறார்கள்.

596. நினைப்பை அடக்குகிறவர்களிடம் எமனும் காமனும் மிருத்யுவும் அணுகுவதில்லை.

597. அக்கினியால் பாகஞ்செய்யப்பட்ட உணவுப் பொருள்களின் சக்தியை அக்னி கிரகித்து விடுகிறது.

598. காற்றையும் ஜலத்தையும் மற்றும் இயற்கையான ஆகாரங்களையே உண்பவர்களிடம் மிருத்யுதேவதையும் அதன் சைன்யங்களான வியாதிகளும் அணுகுவதில்லை.

599. மாதம் இரண்டுமூன்று முறை ஒவ்வொருநாள் ஒன்றுமுண்ணுமல் ஜலத்தைமட்டும் உபயோகிப்பவர்களிடம் கெட்டரத்தம் உண்டாவதில்லை. விரதாக்னியானது கெட்டரத்தங்களை பானம் செய்துவிடுகிறது.

600. பரிசுத்தவாணயிருந்தால் மிலேச்சணயிருந்தாலும் நல்லவன் அசுத்தனுல் பிராம்மணயிருந்தாலும் கெட்டவன்.

601. சந்நியாசிகளும் அரசர்களும் மழைகாலத்தில் உலக சஞ்சாரஞ்செய்யாமல் ஓரிடத்தில் வசிக்கவேண்டும்.

602. நன்மையை விரும்புகிற மனிதன் சிறுவர்கள் நீசர்கள் அறிவற்றவர்கள் கெட்ட குலத்திற் பிறந்தவர்கள் இந்திரியங்களை அடக்காதவர்கள் இவர்களைச் சமீபத்தில் வைத்துக்கொள்ளக் கூடாது.

603. முதலில் கடினமாக ஆத்மாவில் திரும்பிய மனது அப்பால்தானே செல்ல ஆரம்பிக்கிறது.

604. மனது எந்த மார்க்கத்தில் திருப்பினுலும் வரும்.

605. ஞானியைக் காட்டிலும் அஞ்ஞானி நல்லவன்.

606. மனதை ஆத்மாவில் நிலைக்கச் செய்கிற வேலைபோல மற்றொரு வேலை எவ்வுலகத்திலும் கிடையாது.

607. விஷயங்களை நினைத்துத் தீவிரமாக ஓடுகிற மனத்தை உடனே நிறுத்துதல் பிசகு.

608. மனது போகிற வழியே விட்டுப் பின்னாலே அனுப்பி மனது ஓய்ந்தபின் கூட்டிவருவது நலம்.

609. மாயையைக்காட்டிலும் அவித்தை பலமுடையது.

610. யோகிகளைக்காட்டிலும் சாங்கியர் சிரேஷ்டம்.

611. மாயாசம்பந்த புருஷனை யோகமஸ்தர்களுக்குத் தெய்வம்.

612. பிரகிருதி சம்பந்த புருஷனையே சாங்கியர்கள் தெய்வமென்கிறார்கள்.

613. ஆசை கோபம் லோபம் குரோதம் இந்திரியம் பிராணம் மனம் அகங்காரம் மாயை பிரகிருதி ஜீவன் அஞ்ஞானம் ஜன்ம மரணம் இவைகளைச் சுட்டுப் பஸ்பமாக்கிய தற்கடையாளமாக மஹாதேவன் ருத்ரன் மாதவன் ரிஷிகள் எல்லோரும் பஸ்பத்தை நெற்றியில் தரிக்கிறார்கள்.

614. கெட்டகுணங்களையும் பிரகிருதி தத்துவங்களையும் எரித்துச் சாம்பலாக்காமல் அர்த்தந்தெரியாமல் அளவுக்கு மிஞ்சிய பக்தியோடு அஞ்ஞானிகள் நிறையச் சாம்பலைப்பூசி வருவதிலும் பலனுண்டு.

615. எவரையும் எப்போதும் அலக்ஷியமாக நினைத்தல். பேசுதல். முகத்தாற் காட்டுதல். முதலியன செய்யக்கூடாது.

616. புத்தியும் பிராணனும் ஜீவனும் அனவரதமும் மேல்முகமாகவே சென்று கொண்டிருக்கவேண்டுமென்றதை அறிவிக்கும் பொருட்டு வாசுதேவர் மாறாத ஊர்த்துவ புண்டரதாரியாயிருக்கிறார்.

617. பிரஹ்மஞானி யானபின் மலை குகை காடு சமுத்திரக்கரை ஆற்றோரங்கள் சோலைகள் முதலான ஏகாந்த இடங்களிலிருந்துகொண்டு தான் மட்டும் ஞான சுகத்தை அனுபவிக்கிறவன் **உத்தமஞானி.** உலகவுபகாரத்தோடு ஜனங்களுக்கு ஞானோபதே

சஞ்செய்து கொண்டிருப்பவன் மத்திமஞானி விவசாயம் வர்த்தகம் உத்தியோகம். ராஜ்யபரிபாலனம் இவைகளைச் செய்கிறவன் அதம ஞானி.

617 இந்திரன் அக்கினி விஷ்ணு ருத்திரன் சரஸ்வதி லக்ஷ்மி முதலிய தேவர்களும் மற்றும் பூததேவதைகளும் ஒவ்வொருவர்களுடைய சரீரத்திலும் குடிகொண்டிருக்கின்றனவாகையால் யாரும் சரீரத்தை அலக்ஷியம் செய்தல் கூடாது.

618. பேராசையுள்ளவன் தோஷமில்லாதவனாக இருக்க முடியாது.

619. சகல சங்கல்பத்திலிருந்தும் விலகிநிற்பது முக்தி யென்று பிரஹ்மரிஷிகள் கூறுகிறார்கள்.

620. ஞானமோக்ஷ மார்க்கத்தை அடைவதற்குச் சாதகமாகவே உலகம் சரீரம் கர்மம் பொருள் காமம் தர்மம் ஆகாரம் புத்திரன் மனைவி வீடு வசனம் எண்ணம் யோகம் சஞ்சாரம் பாக்கியம் மலை நதி கடல் ஒளி இருள் பசி நோய் முதலியன உண்டாகின்றன.

621. பிறவியும் அதன் மூலகாரணமும் எதுவென்று ஆராய ஆரம்பிப்பவனே சித்த சுத்தியானவனென்று கண்டு கொள்ள வேண்டும்.

622. தோஷமில்லாதவர்களிடம் தோஷத்தைக்காணும் மனிதனை விட்டு லக்ஷ்மிதேவி சம்பத்துதேவதை கீர்த்தி பொருள் தைரியம் முதலியன ஓடிவிடுகிறது.

623. பொருளாலேயே தர்மம் தர்மத்தாலேயே பொருள் என்று ஆசையாலும் அறியாமையாலும் தாழ்ந்த புத்திபுள்ளவர்கள் கருதுகிறார்கள்.

624. செய்கை வாக்கு மனம் இவைகளால் எல்லாப் பிராணிகளுக்கும் துரோகமில்லாமை கருணை தானம் ஆக இந்த மூன்றும்

சீலமென்று ரிஷிகள் கூட்டத்திற்குத் தலைவராகிய மஹாதேவர் சொல்லுகிறார்.

625. பெற்றோர்களுக்குப் பணிவிடை செய்வதால் அவர்களுடைய கடமையை நிவிர்த்தி செய்ததாகிறது.

626. பாபங்களை எரித்துவிடுவதற்குத் தவத்தைக்காட்டிலும் உயர்ந்த வழியிருப்பதாக வேதமும் ரிஷிகளும் சொல்லவில்லை.

627. மனிதன் எப்படி எப்படி எண்ணத்துடன் சாஸ்திரங்களைப் படிக்கிறானோ அப்படி அப்படியுள்ள அறிவாளியாகிறான்.

628. நியாயப்படியுள்ள தர்மத்தை அடைந்தவன் பலசாலியாயிருக்கமுடியாது.

629. உலகத்திலுள்ள எவ்வித மனிதனும் ஹிம்சையின்றி ஜீவிக்கமுடியாது.

630. சத்தியலோகம் வைகுண்டம் கைலாசம் முதலிய உலகங்களிற்கூடப் பூர்ண திருப்தியுடையவர்கள் இருக்கமுடியாது.

631. மோக்ஷமடைய முயற்சிப்பவர்களுக்கும் சன்மார்க்கமுடையவர்களுக்கும் உலகத்திற் காணப்படும் பொருள்கள் யாவும் தோன்றியிருக்கிறதென்பது தேவாதிதேவனுடைய மதம்.

632. சகல ஜனங்களுக்கும் பேதமின்றி மறியாதை செய்தால் இருவர்களுடைய மனமும் தெளிவடைகிறது.

633. உலக மனிதர்களிடம் ஆகாரத்திற்காகவும் மற்றெவ்விதத்திற்காகவும் அடங்கி வணங்கி அடிமையாவதைவிட ஆரண்யத்தில் பல மிருகக்கூட்டங்களுடன் சஞ்சரித்துக்கொண்டு காய் கனி கிழங்குகளைப்புசித்துக் கொண்டிருப்பதும் தவத்தால் உயிரை விட்டு விடுவதும் விசேஷமானது.

634. சந்தேகப்பட்ட விஷயமாயிருந்தால் இயற்கையில் முயற்சி செய்யலாம்;

635. உலகத்திலுள்ள எந்தக்காரியங்களையும் மிஞ்சவிடாமல் வைத்துக்கொள்ளவேண்டும். மிச்சமின்றி முடித்துவிடக்கூடாது.

636. சரீரமானது சாமுத்ரிக சாஸ்திரப்படி உத்தம யோகிக்கும் சார்வபௌமனுக்கும் ஒரேவித லக்ஷணமாயிருக்கும்.

637. யாராயிருந்தாலும் ஒருவருக்கொருவர் பார்த்துச் சாப்பிடாதிருந்தால் மிகுந்த சிரேயஸ் உண்டாகிறதென்று பிரஹஸ்பதி பகவான் சொல்லியிருக்கிறார்.

638. ஹிருதயம் சுத்தமடைவதற்கு ஈஸ்வரநாமோச்சாரணம் போலுள்ள வேறு மேலான சாதனம் வேதத்திற் கூறப்படவில்லை.

639. நிருவிகல்ப சமாதி வாய்ப்பதற்குச் சில நாளைக்கு முன் மனது பிரமிக்கும் தத்தளிக்கும், பதரும் திடீரென்று ஓடும் மறையும் மயங்கும் தெளியும் அடங்கும் மீறும் உலக விஷயங்களை அதிகமாக நாடும் வரும் போகும் மீளும் பயங்கரமான தோற்றங்களுண்டாகும் திமிரும் இருளும் ஒளியும் மாறிமாறி வரும் இவைகளெல்லாம் தோற்றித் தோற்றி அப்பால் ஒன்றுமின்றிச் சாந்தமடையும்

640. ஞானாப்பியாஸமில்லாதவர்கள் சகுணத்தியானமும் நிஷ்காம கர்மமும் செய்யவேண்டும்.

641. வேதாகம சாஸ்திரங்களை எவ்வளவு கற்றபோதிலும் பூருமனச் சந்தேகமும் விபரீத பாவனையும் போக மாட்டாது

642. கிரம முக்தியையும் மனோவிசுத்தியையுங் கொடுக்கிறவன் பிரத்யகாத்மன்.

643. சர்வ வஸ்துக்களும் அழியும்வரை அநாதி.

644. ஞானாப்பியாசிகள் உலகத்திலுள்ள யாரையும் விஷம் போலக் கருதி விலகவேண்டும்.

645. முக்குணங்களின் ஒற்றுமையே பிரகிருதி.

646. காமிய போகத்தையும் நிஷ்காமிய போகத்தையும் கொடுப்பவன் ஜெகதீஸ்வரன்.

647. திரிவித கரணங்களால் யாதொரு பாபமும் செய்யாதவர்கள் யாதொரு வருணாஸ்ரம கருமங்களையும் அனுஷ்டிக்க வேண்டியதில்லை.

648. கிரஹஸ்தாஸ்ரமமானது பலதுன்பங்களுக்கும் மனோ சலனத்திற்கும் ஏதுவாவதுடன் நிவிர்த்தி மார்க்கத்திற்குத் தடையாயுமிருக்கிறதென்று பலரிஷிகளும் பிராம்மணர்களும் அரசர்களும் அரசிளங்குமாரர்களும் துறவு பெற்றார்கள்.

649. அவமதிப்போடு ஜீவிப்பது மரணத்திற்குச் சரியானது. அவமதிப்பால் கொடுக்கப்பட்ட அன்னம் விஷத்தைக் கொடுக்கிறது.

650. திருடனாயிருந்தாலும் தர்ம சாஸ்திர மரியாதையை அனுசரித்துக் காபஸ்யனைப்போல் சன்மார்க்கத்தை விடாமல் திருடுபவன் பரலோகத்தை அடைகிறான்.

651. யாதொரு ஜீவப்பிராணிகளுக்கும் ஹிம்ஸை கொலை இரண்டுமில்லாத யாகத்தைச் சொல்கிறபடி செய்யலாமென்று அந்தரங்கவேதம் கூறுகிறது.

652. ஆசையின் காரியா காரியங்களின் காரணத்தை முன்னிட்டு ஒருவருக்கொருவர் சத்துரு மித்துருக்களை யன்றி உண்மையில் இல்லை.

653. மறுபிறப்பற்ற கடைசி ஜென்ம முடையவர்களுக்கே எவரிடத்திலும் குற்றங்குறைகளை எண்ணாததும் சொல்லாததுமான ஹிருதயம் வாக்கு இவைகளுண்டாகும்.

654. பிராக்ஞனுக்கும் கூடஸ்தனுக்கும் பிரகாசமே வடிவம்.

655. புண்ணிய தேசங்களுக்குச் செல்வது ஓர்விதமான தவம்.

656. சிநேகிதர்கள் சத்துருக்களைப்போலவும் சத்துருக்கள் சிநேகிதர்களைப் போலவும் இருப்பார்கள். சூக்ஷ்மபுருஷர்கள் புத்தியினாலறிந்து விலகவேண்டும்.

657. சம்பத்துள்ளவன் தாதாவாயிருப்பதையும் தரித்திரன் தபசிபோலிருப்பதையுங்கண்டு சத்தியதேவதை ஆச்சரியப்படுவ தில்லை.

658. பாபஞ்செய்தவன் நான் கெட்டகாரியஞ்செய்து விட்டேனேயென்று உண்மையாக வருத்தப்பட்டால் ஓர்தடவை பாபத்திலிருந்து விடுபடுகிறான்.

659. அதர்மமும் பாபமும் லோபத்திலிருந்துண்டாகின்றன.

660. பிறர் பொருளை அபகரிப்பது. பிறர்தாரங்களைத் தொடர்வது. வேகமாய்ப்பேசுவது. துரிதமான நினைப்பு. பசியால் வயற்றின்வேகம். பிறரை நிந்திப்பதில் வேகம். நாவால் ருசிவேகம் கெட்டசெய்கைகளை வேகமாகச் செய்வது. இவைகளெல்லாம் லோபத்தாலுண்டாகின்றன.

661. மறைவாகச் செய்யாத காரியங்களெல்லாம் தர்மமென்றும் மறைத்துச்செய்கிறவைகளெல்லாம் அதர்மமென்றும் ரிஷிகள் ஆதியில் சொல்லியிருக்கிறார்கள்.

662. காரியாகாரியங்களின் வேற்றுமை தெரியாதிருப்பது அறியாமை. அதுவே அஞ்ஞானம்.

663. அனித்தியவஸ்துக்களை ஆராய்ச்சி செய்து கொண்டிருப்பது ஞானமார்க்கத்திற்குப் பிரயோஜன மற்றதாகிறது.

664. தவத்தால் திருப்தியடைந்தவன் பிரம்மலோகத்தையும் விரும்பமாட்டான்.

665. இந்திரிய அடக்கத்துடன் கூடின மனிதனை அறியாமையுலகம் சக்தியற்றவனென்று நினைக்கிறது. அவன் வாசஞ் செய்கிற இடம் நிர்மானுஷ்யமான ஆரண்யம்.

666. லோபம் போய்விட்டால் அஞ்ஞானம் போய்விடும்.

667. லோபம் நாசமடையும்போது அஞ்ஞானம், அறியாமை ஆசை வேற்றுமை இவைகளுங்கூடவே நசிக்கிறது.

668. இந்திரியங்களின் அடக்கமான தவமே தர்மத்திற்கு முக்கியகாரணமென்று பிரஹஸ்பதிமதம் சொல்லுகிறது.

669. மோக்ஷமார்க்கத்தை அடையவேண்டியவன் சநாதன தர்மப்படி நடக்கவேண்டும்.

670. இவ்வுலகத்திலுள்ள எந்த வஸ்துக்களிடத்திலும் எவன் பயமடைகிறதில்லையோ அவன் பரலோகத்திலும் ஒன்றிலும் பய மடைகிறதில்லை.

671. பிரம்மதேவருடைய தபோ மஹிமையால் உண்டுபண் ணப்பட்ட அன்னம் கனி கிழங்கு தானியம் முதலியவைகளை வீண் உபயோகப் படுத்தவும் அளவுக்கு மீறி உண்ணவும் கூடாது.

672. அஹிம்ஸை, சத்தியவசனம் தானம் இந்திரியங்களின் அடக்கம் இவைகளைவிடத் தபஸ் மேலானதென்று மஹேஸ்வரர் கூறுகிறார்.

673. தவத்தால் தெய்வத்தன்மையை அடையலாம்.

674. ஒரு ஜாதிக்கு விதித்திருக்கிற தர்மத்தை மற்றொரு ஜாதிக்காரர் செய்வது அசத்தியமும் அதர்மமுமாகிறது.

675. அசத்தியமும் சத்தியத்தில் சத்தியமும் என்ற இரண் டில் சத்தியத்தில் சத்தியமே சநாதன தர்மமும் யதார்த்தமும் ஆகு மென்று வாலகில்லியர்கள் சொல்லுகிறார்கள்.

676. வேதத்திற்கு விரோதமான சாஸ்திரங்களைக் கற்பவர்க ளுக்கு அதிகமான ஜென்ம மரணப் பிரவிர்த்தி உண்டாகிறது.

677. எந்த வஸ்துக்களிடத்திலும் பிரீதிவைப்பது சோகத்தி ற்குக் காரணமாயிருப்பதால் ஒன்றிலும் பிரீதிவைப்பது கூடாது.

678. தெய்வ கிருபை புருஷமுயற்சி இரண்டிலும் தைரியமில் லாதவர்கள் தெய்வ கிருபையை மட்டுங் கொண்டாடுகிறார்கள்.

679. பனிரெண்டு வருஷங்கள்வரை சூத்திரஸ்திரீயுடன் கூடி யிருந்த பிராம்மணன் சூத்திரனே ஆய்விடுகிறான்.

680. விளையாட்டைப்போலவே வருகிற வினைகளை விதியாளி விழிந்திருந்து விலக்கிக் கொள்ளுகிறான்.

681. ஸ்திரீகளிடத்திலும், விளையாட்டுக் காலத்திலும், விவாக சமயத்திலும், உயிருக்கு அபாயம் நேர்ந்த சமயத்திலும், திருடர்களிடத்திலும், சொல்லப்படுகிற பொய்யால் குற்றமில்லை.

682. திருடனைத் திருடனென்று சொல்பவன் திருட்டுக்குள்ள பாபத்தையும், திருடனல்லாதவனைத் திருடனென்று சொல்பவன் அதில் இரண்டு பங்கு பாபத்தையும் அடைகிறான்.

683. நல்லவனை நல்லவனென்று சொல்லலாம் கெட்டவனைக் கெட்டவனென்று சொல்வது கூடாது.

684. நாய் பன்றி கழுதை பூனை காக்கை தவளை பாம்பு எலி இவைகளைக் கொன்றால் ஒருவருஷம் தீர்த்த யாத்திரை செய்ய வேண்டும்.

685. எலும்பில்லாத பிராணிகளைக் கொன்றுவிட்டால் கோஜலத்தை ஓர் தரம் பானம் பண்ணவேண்டுமென்று பார்வதி சொல்லுகிறாள்.

686. பெண்வேஷந்தரித்து நாடகத்தில் நடிக்கும் பிராம்மணன் மண் பாத்திரத்தை எடுத்துக்கொண்டு ஏழுவீடுகளில் பிக்ஷையெடுத்துண்டு பனிரெண்டு நாளிருந்தால் புனிதனாகிறான்.

687. மனோபலமில்லாதவர்களை விசாலமான அறிவுடைய ரிஷிகளும் தேஜசுள்ள தேவர்களும் விரும்புகிறதில்லை.

688. ஆயுதங்களிலெல்லாம் தீக்ஷண்யமுடையது கத்தி அதுவல்லாஆயுதங்களும் உண்டாவதற்கு முன்பு மஹேஸ்வரராலுண்டாக்கப்பட்டது.

689. காமத்தாலும் சிநேகத்தாலும் கட்டுப்பட்டவனுக்கு மோக்ஷம் சித்திக்கிறதில்லை.

690. பிரஹ்மஞானிகள் எதை இச்சிக்கிறார்களோ அது உடனே சித்திக்கிறது.

691. அறம் பொருள் காமம் இம்மூன்றும் சமமாக அனுபவியாமல் ஒவ்வொன்றை மட்டும் தனித்தனியே அனுபவிக்கிறவன் அவிவேக அதமனாகிறான்.

692. சாந்தம் பொறுமை முதலிய சற்குணங்கள் எவனுக்கு வலுவில் வந்து சேருகிறதோ சோம்பல் நித்திரை முதலிய துற்குணங்கள் எவனுக்குத்தானே விலகுகிறதோ அவன் மறுபிறப்பில்லாதவன்.

693. சந்தேகமுள்ள வஸ்துவினிடமிருந்து சந்தேகமில்லாத வஸ்து வுண்டாகுமோ வென்ற சந்தேகமுள்ளவனைச் சந்தேகமுள்ள காலத்தில் சந்தேகமுள்ளவர்களால் கர்ப்பந்தரித்தவ னென்று சந்தேக மஹரிஷி சொல்லுகிறார்.

694. நன்றி கெட்ட மனிதர்களுடைய மாம்ஸத்தை மாம்ஸந் தின்னும் பிராணிகளும் புழுக்களும் பக்ஷிகளுங் கூடத்தின்ன மறுத்துவிடுகின்றன.

695. எந்த மனிதன் எந்த விஷயத்தை எந்த இடத்தில் ஆரம்பித்தபோதிலும் அந்த விஷயங்களின் முடிவை யுக்தியினால் பரோக்ஷமாகத் தெரிந்து கொள்ளவேண்டும்.

696. உலகமானது பலதோஷங்களையுடையதென்று நிச்சயமாய்த் தெரிந்துகொண்டபின் மோக்ஷமார்க்கத்திற்கு முயற்சி செய்யவேண்டும்.

697. உலகஞானந் தெரியாமல் பிரஹ்மஞானம் மட்டுந் தெரிந்தவர்களைப் பிரயோஜனமில்லாதவர்களென்று பிடிவாத தேவதைகள் சொல்லுகிறார்கள்.

698. மோக்ஷமும் அதை அடைகிற ஞானங்களும் மதங்களும் அநேகம்.

699. ஜீவனையும் ஈஸ்வரனையும் ஐக்கியமாக்க முடியாது.

700. மனஸையும் பிராக்ஞனையும் சேர்ப்பதாலுண்டாவது சக்ஷ்டி.

701. மனஸையும் பிராக்ஞனையும் ஒன்றுபடுத்துவதாலுண்டாவது பௌர்மை.

702. நற்குலத்தில் பிறந்தவர்கள். இன்சொல் கூறுகிறவர்கள் நல்ல ரூபமுள்ளவர்கள். பிரஹ்மஞானம் சாஸ்திரஞானம் அர்த்த ஞானம் இவைகளை உடையவர்கள். நற்குணமுடையவர்கள் ஆசையற்றவர்கள், சிரமத்தை ஜெயித்தவர்கள். நல்ல மித்திரர்களை உடையவர்கள். நன்றியறிவுள்ளவர்கள் எல்லாமறிந்தவர்கள் கோபமில்லாதவர்கள். இனிய குணமுடையவர்கள். சத்தியவசனஞ் சொல்லுகிறவர்கள். இந்திரியங்களை வென்றவர்கள் எப்போதும் முயற்சியைச் செய்பவர்கள் குலத்தின் தலைவர். யாதொரு தோஷங்களுமில்லாதவர்கள். கீர்த்தி பெற்றவர்கள். இவர்களை எவ்விதத்திலாவது சினேகிக்கவேண்டும்.

703. பேராசை கொண்டவன். குரூரமாயிருப்பவன். தர்வத்தை விட்டவன். ஹிம்ஸை செய்கிறவன். நீசன் பாபநடையுள்ளவன். எல்லாரிடத்திலும் சந்தேகப்படுகிறவன். யாதொரு முயற்சியுமில்லாதவன். தாமசசுபாவமுள்ளவன். கோணலாயிருப்பவன். நிந்திக்கப்பட்டவன், தூரஸ்திரீகளை அணைபவன், குருதாரத்தினிடம் செல்லத்துணிபவன், துன்பமுள்ள சமயத்தில் விலகிப்போகிறவன் கெட்டயுக்தியுள்ளவன். வெட்கமில்லாதவன். எல்லாரிடத்திலும் பாபத்தைப்பார்க்கிறவன், வேதத்தை நிந்திக்கிறவன், நாஸ்திகன், பலவிதமான நிந்தனையுடையவன். காமத்தில் பற்றுதலுடன் சஞ்சரிப்பவன், சபைக்குதவாதவன், உலகத்தாரால் பகைக்கப்பட்டவன் பிரதிக்ஞையில் உறுதியில்லாதவன் கோட் சொல்லுகிறவன். கல்வி அறிவில்லாதவன். மாத்ஸர்யமுள்ளவன். கெட்ட எண்ணமுடையவன். தீமைகுடிகொண்டவன். கெட்ட இயற்கையுள்ளவன். நல்லமனமில்லாதவன். அன்னியமதங்களையும் ஆசாரியர்களையும் தூஷிக்கிறவன், ஞானிகளையும் பக்தர்களையும் ஏசுகிறவன், கபடன். சினேகிதர்களுடன் விரோதிப்பவன். எப்போதும்

பொருளைக் குறித்தே சஞ்சரிப்பவன், சக்திக்குத் தகுந்தபடி கொடுப்பவர்களிடம் சந்தோஷமடையாத அற்பபுத்தியுடையவன், மித்திரனுக்கு அதைரியத்தை உண்டுபண்ணுகிறவன், காரணமில்லாதபடி கோபித்துக்கொள்ளுகிறவன், காரணமின்றி வெறுத்துக் கொள்ளுகிறவன், சிநேகிதர்களையும் உபகாரியங்களையும் வேகமாக விலக்குபவன் அறியாமற் செய்த அற்ப அபகாரத்தால் முன்செய்த பெரிய உபகாரத்தை நினையாதிருப்பவன், காரியத்திற்காக மித்திரர்களை விரும்புகிற மித்திரத்துவேஷி, மித்திரனுக்கொப்பான முகங்கொண்ட சத்துரு. கோணலான பார்வையுள்ளவன், திடுக்கிடும்படி பேசுகிறவன், நடக்கிறவன் பிராணிகளைக் கொல்வதில் விருப்பமுடையவன், மாறுன பார்வையுடையவன், க்ஷேமலாபத்திற் சந்தோஷமடையாதவன், இவர்களை முன்பின் ஆலோசியாமல் அடியோடு விலக்கிவிடவேண்டும்.

704. பொருள் நஷ்டமானாலும் தாயம் மாதா பிதா புத்திரன் முதலியவர்கள் மரணமடைந்தாலும் சோகம் வாராத பூரிதந்திரயோகம் வாய்ந்தவனைத் தெய்வ சக்தியுள்ள மனிதனென்றறியவேண்டும்.

705. ஜீவர்கள் மனிதவடிவமாய்ப் பிரகாசிக்கின்ற காலங்களில் சுகதுக்கங்கள் தேருருளையைப் போலச் சுற்றிச் சுற்றி வருகின்றன.

706. சுகத்தின் முடிவில் துக்கமும் துக்கத்தின் முடிவில் சுகமும் வருவதை அறிந்தவர்கள் பாப புண்ணியங்களைச் செய்வதில்லை.

707. ஆரம்பத்தில் சுகம் துக்கம் போலவும் துக்கம் சுகம் போலவும் தோன்றும்.

708. சுக துக்கங்கள் எவன் மனதை அசைக்கவில்லையோ அவனைத் தேவர்கள் சிநேகிக்க வருகிறார்கள்.

709. சுக துக்கங்களும் அதன் அனுபவங்களும் பிரயோஜனங்களும் சரீரத்திற்கா, இந்திரியங்களுக்கா, பிராணனுக்கா, ஜீவனுக்கா, என்பதை முதலில் நன்றாகத் தெரிந்துகொள்ளவேண்டும்.

710. உண்மையாய் ஞானமடைய முயற்சி செய்கிறவர்களுக்கு அஷ்டதிக் பாலகர்களும் சகாயஞ் செய்கிறார்கள். மறைவாகவே பின்னால் வந்து கொண்டேயிருக்கிறார்கள்.

711. நல்ல அறிவை அடையாமலும் மூடத்தன்மையி லு மிருந்து விலகியவர்கள் அளவுகடந்து சந்தோஷிப்பார்கள் எல்லை யின்றித் துக்கிப்பார்கள்.

712. பிரபஞ்ச லௌகீக திருஷ்டி உடையவர்களுடன் சகவா சஞ்செய்வது யோக ஞானப்பியாசிகளுக்குப் பெரிய ஆபத்து.

713. பெரிய பட்டணங்களையும் பெரிய வனாந்தரங்களையும் சமமாகப் பார்க்கிறவன் பெரிய ஞானி.

714. ஆத்மவிஷயத்திலும் சரீரவிஷயத்திலும் ஸ்திரீ புருஷ பேதம் பார்க்காதவன் அதி சூக்ஷ்ம அபேத ஞானி.

715. யாதொரு முயற்சியும் யோஜனையு மில்லாமல் நிருவி கல்பசமாதி வந்து விடுவது சகஜ நிஷ்டர்களின் சுபாவம்.

716. வாக்கு மாத்திரம் வசனியாமல் சகல இந்திரியங்களும் மனதும் அலைந்துகொண்டிருப்பதைக் கைக்கொண்ட மவுனிகள் கர் மேந்திரிய கபட யோகிகள்.

717. உள்ளதை உள்ளபடி சொல்வதால் பாரமார்த்திக விரோதமில்லாவிட்டாலும் வியாவகாரிக விரோதமுண்டு.

718. உண்மை ஞானிகளின் நிலைமையை இன்னபடியென்று யாராலும் உறுதியாக நிச்சயித்து விடமுடியாது.

719. பற்றைவிடுவதும் பற்றை அடைவதும் பந்தம்.

720. சகலலோக கர்த்தாவாகிய பரவாசுதேவர். சகலஞான கர்த்தாவாகிய மஹாதேவர். சகலயோககர்த்தாவான ஹிரண்யகர்ப் பர். சகலதர்மகர்த்தாவாகிய மாஹேஸ்வரர். சகலவீர்யகர்த்தா வாகிய லக்ஷ்மீ. சகலபராக்கிரமகர்த்தாவாகிய மாஹேஸ்வரி. 'சக லவித்யாகர்த்தாவாகிய சரஸ்வதீ. சகலசாங்கிய கர்த்தாவாகிய சாங்கியமஹரிஷி. சகலதேஜோகர்த்தாவாகிய சதாசிவன். இவர் களெல்லோருடைய அந்தரங்க அனுபவம் ஒன்றே.

721. எந்த விஷயத்திற்கும் எக்காலத்திலும் எவரிடத்திலும் உயர்வு தாழ்வு உற்பத்தியாகாத மனத்தில் உண்மை ஞானம் பிரதி பலிக்கிறது.

722. ஆத்மாவாகிய நமக்குத்தெரியாமல் யாதொரு சங்கல்பமும் உதிக்கக்கூடாதென்று கட்டுப்பாடு செய்து கொண்டு அதன்படி அனுஷ்டித்து வந்தால் சிலவருஷங்களில் மனோலய சமாதிஸ்திதி வந்து விடுகிறது.

723. சதா ஆடிக்கொண்டிருக்கிற வஸ்துவை ஆடாது நிறுத்திவிடலாம் ஒருக்காலும் ஆடாத வஸ்துவை ஆட்டி வைக்கமுடியாது.

724. நிர்மானுஷ்யமான பரம ஏகாந்தஸ்தானத்தில் தனிமையில் ஆத்மவிசாரம் செய்து கொண்டிருப்பதினாலுண்டாகிற சக்தியில் பதினாயிரத்தில் ஒரு பங்குகூட வேதசாஸ்திரங்களைக் கற்பதனாலும் உபந்நியாஸம், தீர்த்தயாத்திரை, ஆலய தரிசனம், இவைகளாலும் உண்டாகிறதில்லை.

725. பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்கும் மத்தியில் ஒன்றுமேயில்லையென்று நினைக்கிறவஸ்து ஒன்றுமட்டும் இருக்கிறதென்று மஹாபுருஷராகிய ஸ்ரீ சங்கரர் சொல்லுகிறார்.

726. எல்லாவற்றையும் வெறுத்தவர்களுக்கு உலகத்தில் என்ன வேலையென்று சாமான்ய பாமரஜனங்கள் சொல்வது வேதத்தின் ரஹஸ்யம்.

727. போன நினைப்புகள் இப்போது உண்டாகிற ஆசைகள் இனிமேல் வரக்கூடிய சங்கல்பங்கள். இவைகளை யெல்லாம் அவ்வப்போது தடை செய்து கொண்டுவந்தால் பலஜென்மாந்தர மனோவேகமும் வாசனைகளுங் குறைவுபட்டுப் பிரத்யகாத்ம சொரூபத்தில் மனம் கறைந்து விடுகிறது.

728. நாமே நம்முடைய மாயா சங்கல்பத்தினால் நம்மை மறைத்துக் கொண்டிருக்கிறோம்.

729. சித்தர்மதகர்த்தாவான அஸ்வினீ தேவர்களுடைய அந்தரங்கமதமே இனிமேல் உலகத்தில் பரவப்போகிறது.

730. பிரபஞ்சத் தோற்றங்கள் மறைந்து விடுவதனால் மட்டும் பிரஹ்மஞானி யென்று சொல்லிவிட முடியாது,

731. மனச்சந்தேகமும் அஞ்ஞானமும் ஆசையும் உடையவர்களுக்கு மட்டும் சாஸ்திரங்கள் பிரயோஜனப்படும்.

732. ஆத்மஞானரேசகம் இரண்டுநாளிகை பரியந்தம் சித்தியானவர்களுக்குச் சூக்ஷ்ம சரீரத்துடன் ஆகாயத்திற் சஞ்சரிக்கிற மஹான்கள் பிரசன்னமாகிறார்கள்.

733. பிரஹ்மரந்திரத்தின்மேல் பூரணரேசகத்தால் பிராணவாயு அசையாது நின்றுவிடுகிற காலத்தில் பரகாயப்பிரவேசசித்தி உண்டாகிறது.

734. வெளிக்கும்பகமும் உள்பூரகமும் மத்திய ரேசகமும் ஒன்றுகூடி நின்றகாலத்தில் ஸ்தூல சரீரத்தை ஆகாயத்திற் சஞ்சரிக்கச் செய்யும்.

735. தான் செய்கிற பாப புண்ணியங்களெல்லாம் காலக்கிரமத்தில் தன்னையே தவறாது வந்தடைகின்றன.

736. சில கெட்டவஸ்துக்கள் மோக்ஷ சாதனமாகவும் சில நல்லவஸ்துக்கள் பந்த சாதனமாகவும் ஆகின்றன.

737. உலகத்திலுள்ள சகல ஜனங்களையும் பொதுவாகப் பாவித்து உபதேசிப்பது உத்தம ஞானிக்கு லக்ஷணம்.

738. ஒவ்வொரு சங்கல்பத்திலும் ஒவ்வொரு சூக்ஷ்மசிருஷ்டியும் பல ஜென்ம சமஸ்காரங்களும் அடங்கியிருக்கிறதென்று மஹாத்மாவாகிய பிரஹஸ்பதி பகவான் சொல்லுகிறார்.

739. உலக மயக்க வஸ்துக்களும் காலாந்தரத்தில் ஞானசாதனமாக முடிகிறது.

740. அதிகக்காரமும் புளிப்பும் உப்புங்கலந்த பதார்த்தங்கள் சம்பந்தப் படுவதால் மனோசலனமும் காமக்குரோத விருத்திகளும் சரீரத்திற்கு நோயும் உண்டாகின்றன.

741. மதாபிமானம் சாஸ்திராபிமானம் தேசாபிமானம் குலாபிமானம் சரீராபிமானம் அஞ்ஞானஜீவகாருண்யம். இவைகளுங் கூட உத்தமஞானத்திற்குத் தடையாயிருக்கின்றன.

742. நான்கு ஜாதிகள் நான்கு ஆஸ்ரமங்கள் அவற்றின் கட்டுப்பாடுகள் இவற்றையெல்லாம் வெகுகாலங்களுக்கு முன் உத்தம ரிஷிகளால் நல்லெண்ணத்துடன் உற்பத்தி செய்யப்பட்டதாயிருந்தாலும் சுதந்தர ஆத்மஞானத்திற்குத் தடையாயும் சரீரத்தை மட்டும் பொருந்திய கற்பனுவடிவமாயும் ஆத்ம மனோதர்மங்களுக்கு யாதொரு சம்பந்தமு மில்லாதிருக்கின்றது.

743. இஷ்டப்பட்ட வஸ்துக்களில் இச்சையும் இஷ்டப்படாத வஸ்துக்களில் இச்சையின்மையும் இல்லாதவர்களுடைய ஹிருதயத்தில் உலக இன்ப துன்பங்கள் பதிவதில்லை.

744. பரமாத்மா ஒன்றைத்தவிர மற்ற வஸ்துக்களையெல்லாம் துரும்பாக நினைப்பது நிராசையை அடைவதற்கு ஓர் சிறந்தவழி.

745. பேசாதிருந்து கொண்டு வாக்கை ஜெபிப்பதைவிடப் பேசிப் பேசிஜெபிப்பது ரிஷிகளது சித்தாந்தம்.

746. திருப்பாற்கடல் ஸ்வேதகிரி வைஜயந்தி இம்மூன்றிடங்களில் ஏகாந்தஸ்தானங்களை ஏற்படுத்திக்கொண்டு முறையே நாராயணன் சங்கரன் நான்முகன் மூவரும் வாசஞ்செய்து கொண்டு பாரமார்த்தீக விசாரணையிலிருந்து வருகிறார்கள்.

747. குண்டலினீ சக்தியும் ஞானசக்தியும் சம்பந்தப்பட ஆரம்பிக்கும்போது கூர்மநாடி பிரம்மரந்திரத்தில் செல்லும் அப்போதே அஷ்டமாசித்திகளின் அறுபத்து நான்கு தெய்வீக வடிவங்கள் பிரசன்னமாகிறது.

748. உலக மயக்க அனித்திய வஸ்துக்களை விரும்பி உலகாதீத உத்தமனிடத்திலும் முற்றுதெரிந்த முதியோர்களிடத்திலும் முறையிடுவது நியாயமல்ல.

749. அபூர்வ அஷ்டமாசித்திகளின் ஆசையால் பிரயத்தன யோகாப்பியாஸஞ் செய்பவர்களுக்குச் சித்திகள் பிரசன்னமானாலும் மீண்டும் பல ஜென்மங்களுக்கு ஆளாகிறார்கள்.

750. பிரஹ்மத்தை நோக்கிச் சென்றுகொண்டிருக்கிற ஞானாப்பியாசிகளுக்கு அந்தர்முகத்தில் தடைகளுண்டாகுமானால் பகிர்

முகக்கடமைகளில் பாக்கியிருக்கிறதென்று தெரிந்து கொள்ளவேண்டும்.

751. பரமாத்ம உணர்ச்சியுடன் அபேதமாக சகுணத்தியானஞ்செய்வது நிர்க்குணத்தியானமென்றே வேதபுருஷன் கூறுகிறான்.

752. சகுணத்தியானஞ் செய்துவரப்பிரயத்னலக்ஷ்மியின் பிரசன்னமும் முயற்சியில்லாமலே நிர்க்குணத்திலும் சேர்த்து விடுகிறது.

753. யோகமும் ஞானமும் ஒன்றைவிட்டொன்றைப்பிறிக்க முடியாத தத்துவங்கள்.

754. இப்போதிருக்கிற விஷ்ணு பிரம்மா சிவன் இம்மூவருக்குப்பின் அந்தஸ்தானங்களுக்கு முறையே நாரதர் ஹனுமார் நந்திதேவர் இம்மூவரும் தயாராயிருக்கிறார்கள்.

755. சிங்கம் புலி கரடி யானை இவைகள் வசிக்கக்கூடிய மஹா பயங்கரமான நிர்மானுஷ்ய வனாந்தரத்தில் தனிமையாக வசித்துக் கொண்டு உலக ஆசையை ஜெயிப்பதைக் காட்டிலும் பிரபஞ்ச மயக்க அனித்திய வஸ்துக்கள் நிறைந்த பெரிய பட்டணங்களின் நடுவில் பல ஜனங்கள் மத்தியிலிருந்து கொண்டு ஜெயிப்பது மஹா விசேஷம்.

756. மனச்சாக்ஷிக்குத் சம்மதமில்லாமல் கட்டுப்பாட்டுக்காகச் செய்யப்படுகிற காரியங்களும் நிலையானதும் உத்தமமானதுமல்ல.

757. ஆரம்பித்த எந்தக்காரியங்களும் பூர்த்தி பெறவில்லையானால் அதினின்றும் விலகிவிடவேண்டும், அல்லது பிரயோபப்பிரவேசம் செய்துவிடவேண்டும்.

758. தெய்வத்தை நம்பித் தெய்வ சம்மதமாகச் செய்யப்படுங் காரியங்களையன்றி மனுஷ்யர்களை நம்பி மனுஷ்ய சம்மதமாகச் செய்யப்படுங் காரியங்கள் நிலைபெற மாட்டாது.

759. உத்தமமான தெய்வீகத் தன்மை பொருந்திய உண்மையுள்ள உறுதியான யாதொரு பிரதிப் பிரயோஜனத்தையுங் கருதாத மஹத்தை யுணர்ந்த உபதேச கர்த்தாக்களான பிரஹ்மஞானிகள் சஞ்சரிக்காத தேசங்களில் அசுர சம்பத்தோடு கூடியவர்களும் குதர்க்க மார்க்கங்களிற் செல்பவர்களுமான பிரஜைகள் நிரம்பியிருப்பார்கள்.

760. உள்ளதை இல்லாததாகவும் இல்லாததை உள்ளதாகவும் செய்துவிடக்கூடிய மஹா மாயையின் சொரூபத்தை இன்னபடியென்று கண்டுபிடிப்பதற்குப் பிரஹ்ம விசாரமே தகுந்த உபாயமென்று பத்ரீ நாராயண மஹரிஷி உபதேசிக்கிறார்.

761. இச்சையும் இச்சையின்மையும் இரண்டு முள்ளதும் இரண்டுமில்லாததும் ஆகநான்கும் இந்த நான்கையுந் தாண்டியதும் இவ்வைந்துமில்லாத ஹிருதயத்தை யுடையவர்கள் நிர்விகார நிர்விகல்ப ஞானிகள்.

762. மனத்தோடு மட்டும் அனுஷ்டிக்கக்கூடியது. இந்திரியங்களோடு மாத்திரம் செய்யக் கூடியது. சரீரத்திற்குட்பட்ட விவகாரங்களோடும் சிலர்களோடும் பலர்களோடும் சில தூரங்களோடும் அனுஷ்டிக்கக்கூடிய அனுஷ்டான முறைகள் ஈஸ்வர சம்மதமானது. நியாயமானது.

763. வெளியில் மட்டும் பற்றைவிட்டு உள்ளே பற்றை வைத்துக்கொண்டிருப்பதும் உள்ளே பற்றைவிட்டு வெளியில் பற்றை வைத்திருப்பதுமான துறவிகளில் அகத்துறவிக்கு ஆத்மஞானமும் புறத்துறவிக்குப் புண்ணியமும் கிடைக்கிறது.

764. ஒன்றையுங்கருதாத உள்ளத்தில் ஒன்று கருதப்படுமானால் அது சவிகல்ப சமாதி.

765. மனத்தாலும் கண்களாலும் பார்க்கக்கூடிய வஸ்துக்களையெல்லாம் பரமாத்மாவாகப்பார்க்காவிட்டாலும் பார்க்கமுடியாமற்போனாலும் பரம குருவாகப்பார்க்கிறதினால் பரம பாக்கியஸ்தானம் பலிதமாகிறது.

766. சர்வல்லமையுள்ள வஸ்துவும் ஒருவல்லமையுமில்லாத வஸ்துவும் பிரஹ்மம்.

767. வேகமாக எழும்பப்படுகிற மனோசங்கல்பங்களைமெது வாக எழும்பும்படி சாந்த மடையச் செய்து அதையும் உபசாந்தப் படுத்தி அதிரகஸ்ய வஸ்துவில் கறைந்து விடும்படி செய்வது ஆத் மப்பிரஹ்மயோகம்.

768. ஏழாயிரந்தரம் பிரணவமுச்சரிக்கிறவரை பிராணவாயு வைப் பிரம்மரந்திரத்தில் நிலைபெறச் செய்துவிட்டால் பரகாயப்பிர வேசசித்தியும் ஆகாயகமன ஆரம்பமும் உண்டாகின்றன.

769. எந்தக்காரணங்களைக் கொண்டாவது பிரபஞ்சஜீவர் களைப் பிரம்மிக்கும்படி செய்து ஏமாற்றி விடும்பக்ஷத்தில் சிலகாலங் களுக்குப்பின் அந்த ஏமாற்றம் ஏமாற்றியவர்களையே வந்தடை கின்றன.

770. உண்ணும்போது சூரியகலையின் அக்கினி அம்சத்தி லும். உடுக்கும்போது சந்திரகலையின் பூமி அம்சத்திலும். பே சும் போது பூர்ணகலையின் ஜலாம்சத்திலும். உறங்கும்போது சூரியகலையின் ஆகாச அம்சத்திலும். ஆத்ம விசாரஞ் செய்யும் போது அதி சூக்ஷ்மகலையிலும். பிராணவாயுவை நிறுத்துகின்ற வர்களுக்கு உத்தம புருஷராகிய எமதருமராஜனுடைய பயமில்லை.

771. அன்பு அறிவு அடக்கம் அமைதி ஆதி உயர்வு உபாயம் உறுதி உத்தமம் உதாரம் சாந்தம் சமம் சகஜம் சித்தி சத்தியம் சத்தி ஞானம் தைர்யம் தருமம் நிராசை பரிசுத்தம் தானம் முக்தி மௌனம் வீர்யம் வேதம் மாறுத ஆனந்தம் தேஜஸ் இவைகளெல்லாம் ஒருங்கே அமையப் பெற்றுள்ளவர்கள் மஹாத்மாக்கள்.

772. உத்தமஞானி உத்தமயோகி உத்தம பக்தன் இம்மூவ ருடைய அந்தக்கரண விருத்தியானது ஒரே சத்துவகுணத்தை மீறி அப்பாற் செல்லவில்லை.

773. இன்ப துன்பங்களின் முடிவான எல்லை கண்டவர்கள் இவ்வுடம்போடு இந்தவுலகத்தில் வசிக்க ஆசைப்படுவதில்லை.

774. கிருதயுகத்தில் சத்தியத்தினுல் திரேதாயுகத்தில் அன்பினுல் துவாபரயுகத்தில் அறிவினுல் கலியுகத்தில் அதிகாரத்தினுல் மட்டும் அந்தந்த யுக காலங்களிலுள்ள அரசர்களால் ராஜ்ய பரிபாலனம் நடந்து வருகிறது.

775. சத்தியத்தில் அசத்தியத்தையும் அசத்தியத்தில் சத்தியத்தையும் கற்பிப்பவர்கள் நாஸ்திகர்கள்.

776. தெய்வீகத்தன்மைவாய்ந்த ஈஸ்வரசக்தி பொருந்திய சர்வ மதங்களுக்கும் உலகங்களுக்கும் பொதுவான சமரஸசுபாவமுள்ள தேஜோமய வடிவரான ஓர் அவதாரபுருஷன் தோன்றியிருக்கிறுன். ரகஸ்யஸ்தானத்தில் வசித்துவருகிறுன். கூடிய காலத்தில் தோன்றப்போகிறுன்.

777. பக்தியோகத்தால் வசப்படாத மனத்தை மற்ற எந்த யோகத்தாலும் வசப்படுத்தமுடியாது.

778. புண்ணிய தீர்த்தங்களில் அடிக்கடி ஸ்நானம் செய்வதால் நாடிசுத்தி இரத்தசுத்தி சரீரஆரோக்கியம் இவைகளுண்டாகின்றன.

779. எல்லாம் வல்ல இறைவனுகிய எம்பெருமானது பாதாரவிந்தத்தை இடைவிடாது தியானித்துக்கொண்டிருக்கிற மஹாபக்தர்களது பாததூளியைச்சிரமேற்றுங்கியிருப்பவர்களுக்குச்செய்யுங் கைங்கரியமே பரமமோக்ஷசாதனமென்று உண்மைத் தொண்டர்களுக்குத்தலைவரான நாரதமஹரிஷி பாஞ்சராத்திரத்தில் கூறியிருக்கிறுர்.

780. சுதந்தர கர்மயோக அகங்கார நிச்சயத்தால் கர்மயோகப் பிரயோஜனப் பிராப்தியின் அனுபவமும் பரதந்திரகைங்கரிய நிஷ்காம நிச்சயத்தால் சாந்தகுணஞான பலப்பிராப்தியின் அனுபவமும் சித்திக்கின்றன.

781. அஞ்ஞான அனுபவ குணமும் சத்துவவித்தியா அகங்காரமும் எதார்த்தமான ராஜச விருத்தியும அதன் அனுபவங்களும் அவதார புருஷர்களுக்குங்கூட உண்டாகின்றன.

782. தான் பூர்ணஞானியானபின் தன்னைப்போல் சகலரும் ஆகவேண்டுமென்றும், தான் அஞ்ஞானியாயிருப்பதால் தனக்குச் சித்த சுத்தியும் ஞானமும் உதயமாக வேண்டுமென்றும் இந்த இரண்டுவித உலக உபகாரிகளும் உத்தமமானவர்கள்.

783. மெய்யான விஷயங்களைப் பொய்யாகவும் பொய்யான விஷயங்களை மெய்யாகவும் பிரயோஜனமில்லாத காரியங்களில் விருப்பமும் பிரயோஜனமுள்ள காரியங்களில் வெறுப்பும் வேத வாக்கியங்களில் அவநம்பிக்கையும் அசிரத்தையுங்கொண்டவர்களுடைய ஹிருதயத்தில் பூர்வ ஜென்மாந்தர பாபங்களும் அழுக்குகளும் படிந்திருக்கிறதென்று தெரிந்து கொள்ளவேண்டும்.

784. ஒன்றில் ஒன்றற்ற வாதமும் இரண்டில் ஒன்றில்லாத வாதமும் பயனற்றது.

785. மனமுள்ளவரையில் மதமும் மதமுள்ளவரையில் மனமும் இருக்கிறது. இரண்டுமில்லாத போது உண்மை இருக்கிறது.

786. கலப்பில்லாத உத்தமஞானேதயத்தை யடைந்தவர்கள் நிருவிகல்ப சமாதியைத்தவிர வேறு ஒன்றுக்கும் உபயோகப்படமாட்டார்கள்.

787. சமஸ்தவஸ்துக்களையும் பிரஹ்மமாகவாவது தானாகவாவது பார்ப்பதால் காமக்குரோதாதி பதின்மூன்று குணங்களும் ராகத்வேஷாதி விருத்திகளும் உண்டாவதில்லை.

788. சமஸ்த உலகசுகங்கள் நவரசங்களின் சூக்ஷ்மசுகம் அறுசுவை உணவுகளின் சுகம் ரூபங்களின் சகல சுகம். சர்வவாசனைகளின் சுகம் சயனமாதர்களது சமஸ்த ஸ்பர்ஸசுகங்கள் வித்யாசுகம் சஞ்சாரசுகம் அஞ்ஞான அபேதசுகம் இவைகளையெல்லாம் வெறுத்தவர்களது ஹிருதயத்தை யோகசுகம் மெல்ல வந்து எட்டிப்பார்க்க ஆரம்பிக்கிறது.

789. கர்மத்தை மட்டும் ஸ்தாபிக்க வந்த அவதாரபுருஷர்களுக்கும். மதத்தை மட்டும் நிலைநிறுத்தவந்த ஆசாரியர்களுக்கும். துஷ்டர்களை மட்டும் அடக்க வந்த ஹம்ஸ பூதர்களுக்கும், உள்ள

பிரஹ்ம சுகத்தைக் காட்டிலும் ஒன்றையுங் கருதாததை ஸ்தாபிக்க வந்த உத்தமோத்தமர்களுக்கு அதிகம்.

790. எந்தக்காலத்திலும் மாற்றமடையாத மஹான்களது ஹிருதயத்தில் ஏதாவது மாற்றமுண்டாகுமானால் அது சத்தியசங்கல்பமென்று நிச்சயிக்கவேண்டும்.

791. அதிக ஜனங்களுக்கு அவாந்தரஞானத்தை உபதேசிக்கலாமேயன்றிச் சாக்ஷாத் ஞானத்தை ஏகதேச ஜீவர்களுக்கு மட்டும் உபதேசிக்க முடியும்.

792. உற்பத்தி நாசமில்லாத வஸ்துவினிடமிருந்து உற்பத்தி நாசமுள்ள வஸ்துக்கள் உண்டாயிருக்கக் காரணமில்லையென்று விசிஷ்டாத்வைதம் கூறுகிறது.

793. ஒரே தத்துவ சொரூபத்தில் ஒன்றையும் இரண்டையும் மூன்றையும் அத்வைத த்வைத விசிஷ்டாத்வைத ஆசாரியர்கள் கற்பிக்கிறார்கள்.

794. எப்போதும் நம்மை விட்டுப் பிரியாத வஸ்துவில் பிரியம் வைப்பது ஞானயோகமென்றும் பிரிகிற வஸ்துவில் பிரியம் வைப்பது பக்தியோகமென்றும் பெயர்.

795. நம்மால் ஆகக்கூடாத காரியம் பாரமார்த்தீகம் வியாவகாரிகம் என்ற இரண்டிலுமில்லையென்று ஒவ்வொரு ஜீவர்களும் எண்ண வேண்டும்.

796. பிரம்மதேவரிடத்திலும் பிராம்மணன் பறையன் கழுதை புழு நாய் இவைகளிடத்திலும் ஒரே பரமாத்மாவைப் பார்க்கிறவன் உத்தமஞானி.

797. பற்றும் பற்றில்லாததும் இல்லாத ஹிருதயத்தில் உண்மையான தேஜோஞானம் உதயமாகிறது.

798. நமக்கு ஞானோதயம் ஆகுமோ ஆகாதோவென்ற சந்தேகமுடைய அபாவஞானிகளிடமிருந்து ஞானசக்தி வீர்ய சக்தி இரண்டும் விலக ஆரம்பிக்கிறது.

799. ஜன்மமரணநாசம் மனோதுக்கநிவிர்த்தி உண்மை ஞானத்தோற்றம் மனோலய சமாதி சர்வசந்தேக தீரம், பரமாத்ம தரிசனம் இவைகள் பொருந்தியுள்ள மதமே வைதீகம்.

800. எல்லா யோகங்களும் ஹிருதயத்தோடு முடிகிறபடி யால் ஹிருதயமுந் தாண்டிய யோகத்தை அடைய வேண்டுமென்று அவதார புருஷராகிய புத்தர் கூறுகிறார்.

801. அகண்டமான ஒரு வஸ்துவினிடத்தில் அகண்டமல் லாத பல வஸ்துக்கள் தோற்றுவது சகஜம்.

802. பரமேஸ்வரரது கிருபையாலும் குருவின் காருண்யத் தினாலும் புருஷப் பிரயத்தனத்தினாலும் பல இடையூறுகளைத் தாண்டிப் பரமாத்மப் பலனை அடையப் போகுந் தருவாயில் பல மான புதிய ஓர் பிரதிபந்தம் வெகு நளினமாக வந்து பொருந்தும்.

803. வைதீக ஞானமதத்தின் அனுஷ்டானத்தையே ஏகாந்த சாங்கிய மதம் கற்பிக்கிறது.

804. நாம் நினைக்கிற ஒவ்வொரு நினைப்புகளும் ஒவ்வொரு ஜென்மங்களென்று மனத்தின் நிஜ சொரூபத்தை உணர்ந்தவர்களும் ஜன்ம மரணங்களின் எதார்த்தத்தை அறிந்தவர்களும் கூறுகிறார்கள்.

805. பிரபஞ்ச சிருஷ்டிகளில் உண்மை ஞானிகள் ஆச்சரியப் படத்தக்க வஸ்துக்களும் செய்கைகளும் இல்லவே யில்லை.

806. நிவிர்த்தி மார்க்கத்தைப் போதித்துக்கொண்டு வருபவர் களுக்குப் பிரவிர்த்திமார்க்க போதகர்கள் தடை செய்வது எக்கா லத்திலும் தேவ அசுர மனுஷவர்க்கங்களி லிருக்கின்றன.

807. மதம் தேசம் வேதம் ஸ்திரீகளின் கற்பு இவைகளுக்கு அபாயமான ஆபத்து உண்டாகுங் காலங்களில் உயிரைக் கொடுத் துக் காப்பாற்றக்கூடிய ஆற்றலுள்ள தீவிரதர ஹிருதயமுடையவன் தேவாம்சமுடைய பரமபாக்கியசாலி

808. மதஸ்தாபனமும் கக்ஷிப்பிரதி கக்ஷிகளும் அகங்காரமும் வீண் எண்ணங்களும் அறியாமையிலிருந் துண்டாகின்றன.

809. பிரஹஸ்பதிபகவான் சிறந்த மஹரிஷிகளது கூட்டத்தில் யாதொரு ஜீவ ஹிம்ஸையுமில்லாத பூஜை, யாகம், ஹோமம், புண்ணிய காரியம், யோகம், ஆஸனம், செய்கை, சிகிச்சை, இவைகளைச் செய்வதுதான் உத்தமமென்று வற்புறுத்தி உபந்நியாஸம் செய்திருக்கிறார்.

810. உலக சுகதுக்கங்கள் செவிக்குக்கூட வராத நிலைமையிலிருந்து கொள்வது ஒரு பெரிய யோகமென்று ஜாபாலமஹரிஷி கூறுகிறார்.

811. அதிரமணியமான ஆச்சரியமுள்ள அபுரூபமுடைய அறுசுவை உணவாதிகளைக் கண்டபோது எவன் மனது பிரமித்து ஆனந்தமடைந்து நாவில் ஜலம் ஊறுகிறதோ அவன் யோகம் ஞானம் மோக்ஷம் என்ற வார்த்தைகளையே விட்டுவிடவேண்டும்.

812. சாதாரணமான நித்திரையினின்றும் விலகியவர்களுக்கு அதன் மயக்கந்தீரச்சில விநாடிகள் செல்லுகின்றது. பரமாத்ம ஞான நிஷ்டையாகிய நனவில்சுழுப்தி நிலைமையினின்றும் விலகியவர்களுக்கு அதன் மயக்கம் தீருவதேயில்லை.

813. வாக்கு மனம் சரீரம் என்ற மூன்று கரணத்தையும் பற்றிநிற்பது கருமயோக அனுஷ்டானம். மனம் வாக்கு என்ற இரண்டையும் பற்றி நிற்பது பக்தியோக அனுஷ்டானம்.

814. அதிசூக்ஷ்ம யதார்த்த அந்தரங்க அனுபவமே இன்னதென்று தெரியாதவர்களது கண்களுக்குப் பகிரங்கஸ்தூல சரீர கரும பேதத்தின் தோற்றங்களே அபரிமிதமாகப் புலப்படுகின்றன.

815. பாபத்தைப் போலவே புண்ணியத்தையும் அதர்மத்தைப்போலவே தர்மத்தையும் ஞானயோகிகள் விட்டு விடவேண்டும்.

816. பிராம்மண க்ஷத்திரிய வைஸ்ய சூத்திர பிரம்மசாரிய கிருஹஸ்த வானப்ரஸ்த சன்னியாசமென்று சொல்லப்படுகிற வருணாஸ்ரமங்களையும் அவற்றின் தர்மங்களையும் கட்டுப்பாடுகளையும், உலகத்திலுள்ள சகலமதங்களின் பந்தங்களையும் கர்ம யோக பக்தி

யோக ஞானயோக மென்று மூவகை யோகங்களின் நிபந்தனைகளை யும், வேதாகம புராண இதிகாச ஸ்மிருதிகளிற் கூறப்படுகிற எல்லா விதக்கட்டுப்பாடுகளையும் ஒருங்கே கடந்தவர்கள் சர்வ சங்க பரித்யாகிகள்.

817. ஒரேகடவுள் ஒரேஜாதி ஒரேமதம் என்றதத்துவத்தை உலகை முழுவதும் பரவச் செய்யவேண்டுமென்று எண்ணங்கொண்டதீவிர மஹரிஷிகள் கிரேதா திரேதா துவாபர கலி முதலிய நான்கு காலங்களிலுமிருக்கிறார்கள்.

818. சத்தியசொரூபமான பரமாத்மாவை அறியாதவர்கள் சத்தியமென்று எதை நிச்சயித்திருக்கிறார்களோ அதை உண்மை ஞானிகள் நிச்சயமல்லாததென்று நிச்சயப்படுத்திவிட்டார்கள்.

819. உண்மையை மறைத்து விடக்கூடிய கற்பனைசாஸ்திரங்களையும் வாக்கியங்களையும் நம்புவது கூடாது.

820. எதார்த்தஞானம் சாஸ்திர ஆராய்ச்சி போதனைசக்தி ஆகர்ஷணசக்தி இந்த நான்கும் உள்ளவாறு ஒருங்கே அமையப்பெற்றுள்ளவர்கள் போதிக்கத்தகுந்த அதிகார அவதாரபுருஷர்கள்.

821. மனுஷ்யர்களுக்குள் ஒருவருக்கொருவர் அடங்கி நடக்க வேண்டுமென்ற எண்ணமும் அடிமை யென்ற சங்கல்பமும் உண்மைஞான விருத்திக்கு விரோத மாயிருக்கிறது. ஈஸ்வரசம்மதமு மல்ல.

822. இராத்திரி காலங்களில் அன்னியர்களுடைய பிராண வாயுவைச்சுவாசிப்பதால் பலவிதமான கனவுகளுண்டாகும்.

823. ஞானப்பியாசிகள் ஆத்மாவிற்கும் மனதிற்கும் மத்தியில் யாதொன்றையும் வைத்துக்கொள்ளாத நிலைமையிலிருந்து கொள்ளவேண்டும்.

824. ஸ்திரீகளுக்குப்பதிவிரதா தர்மமிருப்பதுபோலப் புருஷர்களுக்கும் பத்தினிவிரதா தர்மமிருக்கிறது.

825. மனமானது நித்தியமான ஆத்ம சொரூபத்தை அண்டாமல் அநித்தியமான இந்திரிய விஷயங்களில் செல்வதைச் சூக்ஷ்ம வியபிசாரமென்று மஹான்கள் சொல்லுகிறார்கள்.

826. இந்திரியங்களுக்கும் மனதிற்கும் அறிவுக்கும் ஆத்மாவிற்கும் சமீபத்திலேயே அதிக தூரமிருக்கிறது.

827. அனுஷ்டானங்களுக்கும் சாஸ்திரங்களுக்கும் உபந்நியாஸங்களுக்கும் அனுபவத்திற்கும் ஒன்றுக்கொன்று தொடர்ந்த சம்பந்தமும் அதிக வித்தியாசங்களுமிருக்கின்றன.

828. இளஞ்சூடுள்ள வென்னீரில் ஸ்நானம் செய்து வருவதால் இந்திரிய ஜெய சாதனமும், குளிர்ந்தஜல ஸ்நானம் செய்து வருவதால் இந்திரியங்களுக்கு அடங்கியிருக்கும் சாதனமும் ஏற்படுகிறது.

829. வைதீக மதங்களிலுள்ள வெளிச்சின்னங்களுங் கூடக் கடைசியில் ஆத்மஞான சாதனமாக முடிகிறதென்று சில வைதீக மஹரிஷிகள் கூறியிருக்கிறார்கள்.

830. உண்மை ஞானத்திற்கும் உண்மையல்லாத ஞானத்திற்கும் இடையே சில வுண்மைகளும் பல வுண்மைகளல்லாததும் பலவுண்மையும் சிலவுண்மைகளல்லாததும் கொண்ட ஞானங்களிருக்கின்றன.

831. சரீரத்திற்குப் புறம்பான வெளி ஆசாரங்களும் உள் சரீர ஆசாரங்களும் ஹிருதய சுத்திக்கும் பிரஹ்ம ஞானத்திற்கும் காரணமாக முடிகிறது.

832. வெளித் தோற்றங்கள் உள்தோற்றங்கள் இரண்டின் வாசனைத் தோற்றங்கள் இவைகளில்லாத காலம் நிருவிகல் சமாதி.

833. எந்தவிதத்திலாவது உலகம் கெட ஆரம்பிக்கும்போது தெய்வத்தின் ஆக்ஞைபால் காலம் தேசம் சக்தி மதம் இவைகளுக்கு ஏற்றவாறு பிரபல சக்திகளைக் கொண்டு நித்தியசூரியர்களும் ரிஷிகளும் அவதாரமாகிறார்கள்.

834. விஷ்ணு பிரம்மா சிவன் ருத்ரன் மஹேஸ்வரன் சதா சிவன் கணபதி முருகன் இவர்களைக் காட்டிலும் வீர்யமுள்ள மஹ ரிஷிகள் சிலரிருக்கிறார்கள்.

835. உலக ஞானத்தை விருத்தி செய்துகொண்டு போகப் போகச் சலன ஞானத்திற்கு விருத்தியும் சாந்த ஞானத்திற்கு நாச மும் உண்டாகிறது.

836. அன்பு துவைதத்தையும் அறிவு அத்வைதத்தையும் நோக் கிச் சொல்லுகிறது.

837. பிரபஞ்சத்திலுள்ள சகல பருவதங்களுக்கும் அதிபதி ஸ்தானமாகிய பருவதத்தில் மனுஷ்யர்கள் சென்று வரக்கூடாத ரகஸ்ய இடங்களில் பரத கண்டத்தின் சகலவித க்ஷேமங்களையும் உத்தேசித்துக் கடுமையான தபஸ் செய்துகொண்டு பல யோகிகள் தங்கியிருக்கிறார்கள்.

838. பிரபஞ்ச அனித்திய விஷயங்களில் இழுத்துவிடுகின்ற சாதனங்கள் எதுவாயிருந்தாலும் அடியோடு விட்டுவிடுவது பக்த யோக ஞான அப்பியாசிகளுக்கு அழகு.

839. பேதஞானத்தின் சகுண சொரூபத்தையும் அபேத ஞானத்தின் நிர்க்குண சொரூபத்தையும் முறையே அப்பியாசித்து அனுபவத்திலறிய ஆரம்பித்தவர்களுக்கு அந்தர்முக ஞானப்பிரதி பந்தங்கள் யாதொன்றும் வருவதில்லை.

840. தாதுபுஷ்டி காமவிருத்தி இரண்டுக்குமாக ஸ்நானம் செய்வது தாமஸம்.

841. சரீர ஆரோக்கியம் சரீரசுத்தி இரண்டுக்குமாக ஸ்நா னம் செய்வது இராஜஸம்.

842. நாடிசுத்தி காயசித்தி சித்தசுத்தி இம்மூன்றுக்குமாக ஸ்நானம் செய்வது சாத்வீகம்.

843. இராஜசதாமஸகுண சம்பந்தப்பட்ட சங்கல்பம் அனுஷ் டானம் கொள்கை மதம் வார்த்தை சமம் சாந்தம் உதாரம் பார்வை

கேள்வி ஆதாரம் தைரியம் கருமம் பக்தி ஞானம் யோகம் ஆசை அன்பு அறிவு அடக்கம் ஆராய்ச்சி சாஸ்திரம் தெய்வம் குரு தேசம் வாதம் பிரயாணம் நடை உடை பாவனை பிரசாரம் உபந்நியாஸம் நிதானம் தந்திரம் காக்ஷி ஆலயம் தரிசனம் சேர்க்கை உண்மை உறுதி ஆராதனை ஸ்நானம் இவைகளை விலக்கிவிட்டு சுத்த சாத்வீக குணமாய் அனுஷ்டித்துவரச் சீக்கிரத்தில் பிரஹ்மஞானம் பிரசன்னமாகிறது.

844. கிரியாநிஷ்டை யோகநிஷ்டை ஞான நிஷ்டை பிரஹ்ம நிஷ்டை இந்த நான்கும் முறையே படிப்படியான தத்துவங்கள்.

845. பஞ்சகோசங்கள் மூன்று சரீரங்கள் மூன்றவஸ்தைகள் இவைகளை மனோவிருத்தியால் கடந்து அப்பாலுள்ள சூன்ய தரிசனத்தினால் மாத்திரம் திருப்தியடைந்தவன் மனுஷ்யர்கள் அணுக முடியாத சந்திரமண்டலத்தின் பின்பாகத்தை அடைகிறான்.

846. சித்தம் மனம் பிராணன் இம்மூன்றும் அடங்கக்கூடிய ஓர் அப்பியாசத்தையே சித்தர்மதம் கூறுகிறது.

847. பிரபஞ்சத்திலுள்ள பிரஜைகளுக்குப் பிரஹ்ம ஞானத்தைப் போதிப்பதைக் காட்டிலும் சித்தசுத்தியின் சாதனங்களைப் போதிப்பது சிரேஷ்டம்.

848. இகலோக வாழ்வு பரலோக வாழ்வு என்ற இரண்டுக்கும் தனித்திருத்தல் போன்ற உத்க்ருஷ்டமான சாதனம் வேறொன்றில்லை.

849. பற்றுதலும் பற்றைவிட்டு விடுவதுமாகிய இரண்டையும் விட்டவர்கள் ஞானிகள்.

850. ஆசைக் குறையக் குறைய ஆத்மசக்தி வளருகிறது.

851. தசேந்திரியங்களின் வெளி இச்சைகள் தானே விலக ஆரம்பிக்கும்போது சித்தசுத்தி வந்துவிட்டதென்று தெரிந்து கொள்ளவேண்டும்.

852. ஹிருதயம் சுத்தமாக ஆகும்போது திவ்ய திவ்யென்று பற்பல ஆச்சரியமான தோற்றங்களும் பற்பல ரகஸ்யச் செய்கைகளும் தெரியாத வேதசாஸ்திர வுண்மைகளும் தோற்ற ஆரம்பிக்கும்.

853. எந்த ஹ்ருதயத்தைப் பிரஹ்ம சக்தி வலுவில் தேடி வருகிறதோ அந்த ஹிருதயத்தில் உலகமும் அதன் தோற்றங்களும் அநுபவங்களும் வாஸ்தவத்திலில்லையென்று மாறுபடாதபடி தோற்றும்

854. அந்தரங்கத்தில் ஒருவரையும் நம்பாமல் பகிரங்கத்தில் எல்லோரையும் நம்புவதுபோலக் கொண்டு ஞானயோகிகள் உலகத்திற் சஞ்சரிப்பார்கள்.

855. ஜடகோபர் மவுனத்திலும், திருமூலர் நிஷ்டையிலும், புத்தர் ஞானத்திலும், இராமானுஜர் காருண்யத்திலும், திருஞானசம்பந்தர் தீவிரத்திலும், சங்கரர் பிரசாரத்திலும்; வேதாந்ததேசிகர் வினய புத்தியிலும், மத்வர் வார்த்தையிலும், வித்தியாரண்யர் பாண்டித்தியத்திலும், ஜெயதேவர் அடக்கத்திலும், மாணிக்கவாசகர் மாதுர்யத்திலும், இந்தக் கலியுக காலங்களில் ஆச்சரியப்படத்தகுந்தவர்கள்.

856. அறிவில் எவ்வளவு ஞானனுபவம் உதயமாகிறதோ அவ்வளவு மனதிற்குத் தோன்றமாட்டாது. மனதிற்குத் தோன்றுகிற அளவு வாக்கால் வசனிக்க முடியாது. வாக்கால் வசனிக்கிறவரை எழுத்தால் முடியாது. எழுதுகிறவரை அநுஷ்டிக்கமுடியாது.

857. குற்றவாளிகளுக்குத் தக்க தண்டனையை உண்மையாக நீதி பரிபாலனம் செய்துவருகிற அரசர்கள் விதித்து விட்டால் ஈஸ்வரப் பிரதிநிதியான எமதருமராஜனது தண்டனை அவர்களுக்கு உண்டாகிறதில்லை.

858. ஆதியில்லாத வஸ்துவைப் பற்றிக்கேள்விகள் கேட்பது வேத சம்மதமுமல்ல. மஹாத்மாக்களின் முறையுமல்ல.



விலக்ஷணானந்தர்

யோகநித்திரையின் லக்ஷியத்தைக் காண்பிக்கிற சமயம்

859. எந்த விதங்களிலும் தீர்க்கமுடியாத மஹா பாபங்களைச் செய்தவர்கள் அப்பாபங்களினின்றும் விலகவேண்டுமென்றெண்ணி ஞல் பரமாத்மத் தியானத்துடன் பச்சாத்தாபத்தோடு யதார்த்த மான பிரயோபப் பிரவேசமாவது அக்கினிப் பிரவேசமாவது செய்து விடவேண்டும்.

860. பொய் கலப்பில்லாத மெய்யையும் துக்கங் கலப்பில்லாத சுகத்தையும், நஷ்டங் கலப்பில்லாத லாபத்தையும் அசைவு கலப்பில் லாத மனத்தையும் அறிவு கலப்பில்லாத அன்பையும் உலகத்தில் ஒருவரும் எதிர்பார்க்கமுடியாது.

861. பத்து இந்திரியங்களும் மனதும் எப்போது பரமாத் மாவை நோக்கிச்செல்ல ஆரம்பிக்கிறதோ அப்போது பாப சமஸ்கா ரங்கள் மிகவும் குறைவுபட்டுத் தேய்ந்து ஒய்ந்திருக்கிறதென்று தெரிந்துகொள்ள வேண்டும்.

862. உவமானப்பிரமாணம் அனுமானப் பிரமாணம் வேதப் பிரமாணம் தெய்வப்பிரமாணம் பிரத்யக்ஷப்பிரமாணம் இவைக ளெல்லாவற்றிலும் அனுபவப்பிரமாணமே வாஸ்தவமானது.

863. உண்மைகள் தெரிந்துகொள்ளாத மதத்தைப் பற்றிக் குற்றமாவது குணமாவது கூறுவது கூடாது.

864. உலகத்திலுள்ள ஒவ்வொரு மதத்திலும் புகுந்து அத னதன் உண்மைகளை அறிவதைக்காட்டிலும் நம்பிக்கையுள்ள ஓர் மதத்தின் உண்மையை உள்ளவாறு அறிந்துகொள்வதேவிசேஷம்.

865. எந்த மந்திரங்களையும் ஸ்வானுபவம் வாய்ந்துள்ள ஆசாரி யரிடம் முறையே உபதேசம் பெற்றுக்கொண்டாலன்றிப் பலிதமா கிறதில்லை.

866. பொய்யைப் பொய்யாலும் மெய்யை மெய்யாலும் இரண் டுங்கலந்ததை இரண்டுங்கலந்ததாலும் வெல்ல முயற்சிக்க வேண்டும்.

867. துலாம் மகரம் மீனம் இந்த லக்னங்களிற்பிறந்து பிரஹஸ்பதி சுக்கிரன் புதன் செவ்வாய் இந்த நால்வரும் ஒருவருக்

கொருவர் பார்த்துக் கொண்டு மிருக்கின்ற கிரகசாரநிலைமையுடைய வர்களுக்கு மறுபிறப்பில்லாத தன்மையும் குருஸ்தானமும் பிரயத் தனமில்லாமலே வனுவில் ஞானோபதேசமும் வாய்க்கிறதென்று மச்சேந் திர நாதர் கூறுகிறார்.

868. ஓம் என்னும் பிரணவத்தை மெதுவாகப் பதினாறு தரம் உச்சரிக்கும்வரை வலது மூக்கால் பிராணவாயுவை இழுத்து அறு பத்துநான்கு தரம் ஜெபிக்கும் வரை அடக்கி எட்டுத்தரம் சொல்லு கிறவரை இடது மூக்கால் விடுவதைத் தினந்தோறும் காலையில் பதி னாறும் மாலையில் முப்பத்திரண்டுமாக அப்பியாசித்துக் கொண்டுவர மூன்று வருஷத்தில் ஸ்தூல சரீரத்திலுள்ள எழுபத்திரண்டாயிரம் நாடிகளும் பரிசுத்தமாய்விடுகின்றன. மரணபரியந்தம் எந்த வியாதி யும் அணுகுவதில்லை.

869. இச்சையும் பந்தமும் செல்வமும் செறுக்கும் கோப மும் கொரேமும் ஒரே இடத்தில் ஒன்றைவிட்டு ஒன்றுபிரியாது குடிகொண்டிருக்கின்றன.

870. முக்தியில் மயங்குபவர்களுக்குச் சித்தியும் சித்தியில் மயங்குபவர்களுக்கு முக்தியும் விரோதத்தை விளைவிக்கின்றன.

871. பிரம்மா முதல் சகல ஜீவப்பிராணிகளிடத்திலும்உயர்வு தாழ்வு தோற்றாத மனோநிலைமை வாய்ந்துள்ள மஹாபாக்கியசாலிக ளிடம் தெய்வீக சக்தி தானே குடிகொள்ளுகின்றன.

872. சர்வ சங்க பரித்தியாகிகளான துறவிகள் கிருஹஸ்தர் களிடம் ஆழ்ந்திப்பழகுவது குற்றம்.

873. மனோநாசம் பஞ்சகோசநாசம் மூன்றவஸ்தைகளின் நாசம் மூன்றுசரீர நாசம் சங்கல்ப நாசம் மாயா நாசம் இவைகளில் எதாவது ஒன்று சித்தித்தால் மற்றெல்லாந் தானே சித்திக்கின்றன.

874. பிறப்பிறப்பு வேண்டாதவர்கள் துரும்புமுதல் ஸ்வர் ணம் வரையுள்ள பதார்த்தங்களில் இன்பமிருக்கிறதென்று நம்பி விடக்கூடாது.

875. எல்லாந் தெரிந்து ஒன்றுமட்டுந் தெரியவில்லையானால் அது பிரஹ்மமென்று தெரிந்துகொள்ளவேண்டும்.

876. பிரபஞ்ச வஸ்துக்களில் சிறிது இன்பமாகத் தோற்று மானால் ஜன்ம மரண விருத்திக்கு ஏதுவான சக்தியும் துன்பமாகத் தோற்றுமானால் நிவிர்த்திக்கு ஏதுவான சக்தியும் வளருகிறது.

877. ஆத்ம சமரஸம் அனாத்மசமரஸம் என்ற இரண்டில் ஆத்மசமரஸம் ஒன்றையே மஹரிஷிகளால் அங்கீரிக்கப்பட்டிருக்கிறது.

878. விசாலபுத்தியில்லாதவர்களான க்ஷேமதர்சிகள் தன்னை அறிய விரும்புகிறார்கள்.

879. உலக சிருஷ்டியின் உண்மையைத்தெரிந்து கொண்டவன் ஒரு சாஸ்திரமும் கற்கவேண்டியதில்லை.

880. ரேதஸ் என்ற சுக்கிலமே மனிதர்களுக்கும் தேவர்களுக்கும் மோக்ஷத்திற்குக் காரணமாகிறது.

881. ஆசைப்படத்தக்க விஷயங்களுள் எதை எதை விலக்கிக்கொள்ளுகிறானோ அவன் பூர்ண சுகத்தை அடைகிறான்.

882. வெளியிலுண்டாகிற மிருத்புவைக்காட்டிலும் மனத்திலுண்டாகிற கோபமென்னும் மிருத்புவே பெரியது.

883. மனுஷ உலகத்திலுள்ள விஷயசுகமும் தேவலோகத்திலுள்ள பெரிய சுகமும் சத்தியலோகம் வைகுண்டம் கைலாயம் முதலிய உலகங்களிலுள்ள அபார சுகங்களும் ஆசையை விட்டதினாலுண்டாகும் சுகத்தில் ஆயிரத்தில் ஒரு பங்குகூட ஆகமாட்டாதென்று உமாசங்கரர் கூறுகிறார்.

884. உலகத்திலுண்டாகிற ஆசைகளையெல்லாம் வெளிக்கு வராமல் அடக்கிக்கொள்ளுகிறபோது தானாக விளங்குகிற ஆத்மப்பிரகாசமானது இவ்வுலகத்திலேயே தெளிவாக விளங்கும்.

885 முன்பிறப்புகளிலுள்ள சரீரங்களாற் செய்யப்பட்ட கர்மமானது சுபமோ, அசுபமோ, அவற்றின் பலன்கள் சூரனாலும் மூடனாலும் அறிவுள்ளவனாலும் பயந்தவனாலு

சார்வபௌமனுலும் தரித்திரனுலும் செய்தவினை வந்தடைகின்றன.

886. எல்லாவற்றையும் கடந்துசெல்கிற காலசக்தியானது அதிசீக்கிரம் விரைந்து செல்வதால் எவ்வளவு சீக்கிரத்தில் எதைச் செய்துகொள்ளவேண்டுமோ அதை அவ்வளவு சீக்கிரத்தில் செய்து முடித்துவிட வேண்டும்.

887. காலசக்தியானது திரிமூர்த்திகள் பஞ்சமூர்த்திகளையுந் தாண்டிச் செல்லுகிறது.

888. விகாரமுள்ள மனத்தையுடைய ஜீவர்கள் விகாரமில்லாத பரமாத்மாவை வெகுகாலம் மறைத்து வைத்துக்கொண்டிருக்கிருர்கள்.

889. ஆரண்யங்களிலுள்ள மரத்தடிகளில் தங்கியிருப்பது பிசகு.

890. தனக்கருகிலுள்ள நாதன ஆத்ம நாயகனை அறியாத ஜீவ நாயகிகள் உலகநாயகர்களை நாடிவிடுகிருர்கள்.

891. எமனெனவன் கர்மபலன்களைத் தேடுகிறவனும் வேறிடத்திற்குச் சென்ற மனமுள்ளவர்களை எடுத்துக்கொண்டு போகிறவனுமாயிருக்கிருன்.

892. அதிக சுந்தரமும் யௌவனமுமுள்ள ஸ்திரீகளைக்கண்டு எவன் மனது ஒன்றும் நினையாமலிருக்கிறதோ அவன் சமதமாதி சாதனங்களை அனுஷ்டிக்க வேண்டியதில்லை.

893. விட்ட விஷயங்களை மீண்டும் வராமற் செய்துகொண்டவன் விதியையும் வெல்லும் சாமர்த்தியமுடையவன்.

894. ஸ்வாதீனமுள்ள சந்நியாசிகளிடம் ஸ்வாதீன மில்லாத துறவிகள் பழகமாட்டார்கள்.

895. நேரில் பார்த்துப் பழகாதவனைப்பற்றி யாரார் எந்தவிதமான நன்மை தீமையுள்ள குணங்களைச் சொன்னபோதிலும் ஒன்றையும் நிச்சயஞ் செய்துவிடக் கூடாது.

896. தானே நேரில் வெளியிற் கண்டவிஷயத்தையும் பிறர் கூறக்கேட்டதையும் அன்னியர்களிடம் கூறுவது குற்றம்.

897. எந்தப்பிராணிகளுக்கும் யாதொருமுயற்சியும் பிரயாசையுமின்றிக் காமஇச்சை நித்திரை பசி இவைகளுண்டாவதைப் போல, எவனுக்குப் பரிசுத்தமார்க்கப் பிரவிர்த்தி ஞான இச்சை பற்றற்ற நினைவு இவைகளுண்டாகுமானால் தெய்வாம்சபூத யோகப் பிரஷ்டன் என்றறியவேண்டும்.

898. கண்ணை விரும்புகிறவன் ஞானத்தையும் தவம் வேண்டியவன் சத்தியத்தையும் சுகம் வேண்டுபவன் தியாகத்தையும் அடையவேண்டும்.

899. துக்கம் வேண்டாதவன் ஆசையையும் கோபம் வேண்டாதவன் லோபத்தையும் ஆசையை விரும்பாதவன் அறியாமையையும் விட்டுவிடவேண்டும்.

900. ஆசையற்றவனிடத்திலும் பொருளில்லாதவனிடத்திலும் மிருத்யுதேவதையின் பலம் செல்லுகிறதில்லை. தீ திருடர் பிரவேசிக்கிறதில்லை.

901. உலகம் முழுவதையும் அரசாக்ஷிசெய்கிற சக்கிரவர்த்தியையும் பரம ஏழையாகிய தரித்திரனையும் இரண்டு தராசில் தூக்கிப் பார்த்தால் ஏழைக்குள்ள சுகமும் சுதந்தரமும் வியாதியின்மையும் அரசனுக்கில்லை.

902. உலகத்திலுள்ள எல்லாக் காமங்களின் வஸ்துக்களை அடைபவனைவிட விடுபவன் சிறந்த விசேஷமுடையவன்.

903. ஆசைப்படத்தக்க உலகப்பொருள்கள் தொழில் இவைகளின் எல்லையை அடைந்தவன் இதுவரை ஒருவனுமில்லை.

904. அன்னமயம் பிராணமயம் மனோமயம் விக்ஞானமயம் ஆனந்தமயம் சதானந்தமயம் மஹதத்துவம் இவற்றின் முடிவிலிருந்து பிராணிகளுக்குக் காமமுண்டாகிறது.

905. ஆசாரியர் சிஷ்யனுக்கு நேரே பிரஹ்மத்தைக் காட்ட முடியாது.

906. உலக மயக்க விழிப்பில் வேதாந்தம் பேசுபவன் சுத்த பாமரன்.

907. மனமுதித்தால் சகல விவகாரங்களுமுண்டாகின்றன.

908. மித்தையான பந்தத்தைக் கெடுக்கச் சத்தியமான மோக்ஷம் வேண்டியதில்லை.

909. ஜாக்கிர சொப்பன சுழுப்திகளைத் தாண்டியவனுக்கு வேதாந்தம் விளங்கும்.

910. லோகாயதர்கள் முதல் சாங்கியர்கள் வரை ஜீவமயக்க முடையவர்கள்.

911. திருஞானசம்பந்தம்முதல் யோகமதம்வரை ஈஸ்வர மயக்க முடையவர்கள்.

912. ஜாக்கிரம் முதல் மோக்ஷம் வரை ஜீவ கல்பிதம்.

913. உண்மையல்லாத மதங்கள் நாளடைவில் நசித்து விடுகின்றன.

914. ஒரு காலத்தில் உற்பத்தியாகிற மதம் மற்றொரு காலத்தில் அழிகிறது.

915. வைதீகமான பெரியமதத்தை லௌகீகமான சிறிய மதம் ஏளனம் செய்வது கலியில் சகஜமாயிருக்கும்.

916. ஒரு காலத்திலும் உண்டாகாமல் விளங்கிக்கொண்டிருப்பது கடவுள் மதம்.

917. உண்மையில்லாததென்று ஒரு மதத்தையும் எண்ணி விடக்கூடாது.

918. சில உண்மையுள்ளன சிற்சில உண்மைகளைக்கொண்டன பல உண்மை கொண்டன பலபலவுண்மைகளைத் தாங்கியிருப்பன நிறைந்தவுண்மைகளையுடையதுமான உலக மதங்களெல்லாம் விளங்கிக் கொண்டிருக்கின்றன.

919. யோசம் முடிந்தவன் மறுஜென்மத்திலும் முடிந்த ஞானி அதே ஜென்மத்திலும் பிறவாமுக்தி பெறுகிறுன்.

920. கடவுளை அறியவேண்டுமென் ஒரு மதத்திலும் சட்டுப் பட்டிருக்கக் கூடாது.

921. இருந்த பிடத்திலிருந்து கொண்டே உலக விஷயங்கள் முழுமையும் அறிந்து கொள்ளக கூடிய மனோதிருஷ்டியைக் கொண்டவர்கள் மனோசலனத்தையும் அஞ்ஞானத்தையும் அடைகிறுர்கள்.

922. போக்குவரவுள்ள ஸ்வாதீன யோகியானவன் ஆகாய கமனத்தாலன்றிப் பூமியில் நடந்து சஞ்சரித்தால் யோக சக்தி குறைகிறது.

923. குணத்தையும் தொழிலையுங்கண்டு களிப்படைகிற ஜனங்கள் ஞானத்தைக் கண்டு ஆச்சரியப் படுவதில்லை.

924. விதிப்படியுள்ள பக்தியோக கர்மயோகங்களுக்கு இடமில்லாத புத்த மதத்தில் ஞானயோகத்திற்கு மட்டும் இடமிருக்கிறது.

925. பிரபஞ்சம் அனித்திய மென்றறியாமல் உண்டாகிய வைராக்கியம் நிலைத்து நிற்கிறதில்லை.

926. தன்னிடத்திலிருந்து நீக்கப்பட்ட ஒருவனை எந்தக்காரணங்களைக் கொண்டும் மீண்டும் சேர்த்துக்கொள்வதால் அபமிருத்யு தோஷம் உண்டாகிறது.

927. ஆசையும் அன்பும் ஒருவனிடத்தில் ஒரே காலத்தில் இருக்கமுடியாது.

928. எப்போதும் இஷ்டம்போல் சஞ்சரிக்கின்றவனும் பாய் முதலிய விரிப்புகளில்லாத நிலத்திற்படுப்பவனும் தன் கையையே தலையணையாகக் கொண்டவனும் அடக்கமுள்ளவனுமான ஏழைமனிதனைத் தேவர்கள் கொண்டாடுகிறுர்கள்.

929. சாமர்த்தியவானுன புருஷனும் நம்பிக்கை கொண்டு முயற்சியுடன் நன்றுக எத்தொழிலைச் செய்தபோதிலும் விதியாற்

கிடைக்கவேண்டியவைகளையன்றி வேறொன்றுங் கிடைக்கமாட்டாது.

930. உலகத்திலுள்ள அனித்திய வஸ்துக்களின் சேர்க்கையும் காலாந்தரத்தில் மோக்ஷ சாதனமாக முடிகிறது.

931. ஞானமார்க்கத்தை உபதேசிப்பதைவிடக் காண்பிப்பது சிரேஷ்டம்.

932. பலபேர்களுடனிருப்பதாற்கலகமும் இருவருடனிருப்பதால் பேச்சும் அவஸ்யமாயுண்டாகுமாதலால் தபசியும் யோகியும் ஞானியும் புத்திபுள்ளவனும் தனிமையாகச் சஞ்சரிக்கவேண்டும்.

933. சுபாவத்தைப் பற்றியுண்டாகிற முயற்சிகள் யாவும் சுதந்தரத்திற்கே கொண்டுபோய் விடுகின்றன.

934. முயற்சியாலுண்டாகக் கூடிய பிரவிர்த்திகள் யாவும் சுவாவத்தைப்பற்றின அல்ல.

935. யோகமார்க்கத்தாற் கிடைக்கிற புண்ணியலோகங்களைக் காட்டிலும் தர்மமார்க்கத்தாற் கிடைக்கிற லோகம் விசேஷமானது.

936. நம்மைக் குறித்து யாராவது ஓர் விஷயத்தைக் கூறினால் அலக்ஷியஞ் செய்யவாவது லக்ஷியஞ் செய்யவாவது கூடாது நீண்ட ஆலோசனை செய்து நிச்சயிக்க வேண்டும்.

937. மனது பரிசுத்தமாவதற்கு வேண்டிய தர்மங்கள் எதுவாயிருந்தாலும் ஜாதி மதபேதமின்றி யாதொரு வரம்புமின்றி எவரும் அனுஷ்டிக்கலாம்.

938. உலகப் பொருள்களின் உதவியைக் கொண்டு உலகாதீத வஸ்துவை அடையவேண்டியிருப்பதால் உலக வஸ்துக்களையெல்லாம் பரமாத்வாகப் பார்க்கவேண்டும்.

939. ஓர் பெண்ணானவள் வீட்டிலுள்ளவர்களுக்குத் தெரியாமல் அதிதிகளுக்குப் போஜனம் செய்துவைக்க விருப்பங்கொண்டு நெல்லைக் குத்தும்போது கைகளிலுள்ள வளையல்கள் பிறர் அறியும்படி ஓசையுண்டாகுமாதலால், அவள் தானே வளையல்களை உடைத்

து விட்டு ஒன்றைமட்டுங் கையில் வைத்துக்கொள்வதை யொக்க பஞ்சு தத்துவங்களின் ஓசையுண்டாகுங் காரணங்களைத் தெரிந்து கொண்டு விலகிக்கொண்டவர்களது ஓசை உள்ளடக்கமாகவேயிருக் கும்.

940. எவனுக்குச் சரீரம் பிராணன் மனம் இவைகளிருந்தும் இல்லாதிருக்கிறதோ கண்களிருந்தும் பார்க்கிறதில்லையோ காதுக ளிருந்தும் கேட்கிறதில்லையோ நாவிருந்தும் ருசி அறிவதில்லையோ வாக்கு இருந்தும் பேசுகிறதில்லையோ நடந்தும் புசித்தும் தூங்கியும் நடவாதவனும் புசியாதவனும் தூங்காதவனுமாயிருக்கிறானோ அவன் ஆரூடன்.

941. வியாதியினாலுண்டாகிற வரக்ஷியுடையவன் தண்ணீரால் தாகந்தீராததுபோலப் பேராசையுடையவன் இந்திரபதவி கிடைத் தாலும் திருப்தி அடைகிறதில்லை.

942. உண்ணாதிருப்பது பேசாதிருப்பது பாராதிருப்பது தோடாதிருப்பது இவைகளால் மனிதனுக்குச்சிரேயஸ் உண்டா கிறது.

943. பிரத்யகாத்மாவையும் பிரஹ்மத்தையும் ஒன்றாக்கியது ஐக்கியம்.

944. ஜீவாத்ம பரமாத்ம சமீபவாசமே உபவாசம்

945. ஜென்ம வியாதி தீரவேண்டுமானால் வீட்டைவிட்டு இறங்கலாகாது.

946. ஜீவனையும் மனதையும் ஒன்று சேர்ப்பதாலுண்டாவது சித்தாந்தம்.

947. ஜீவனைப் பிரத்யகாத்மாவில் சேர்ப்பதாலுண்டாவது வேதாந்தம்.

948. வேதத்தை நிந்திப்பவன் பிரயோஜனமில்லாத யுக்தி பேசுகிறவன் நாஸ்திகன் யாவற்றிலும் சந்தேகமுள்ளவன் மூர்க்கன் தன்னைப் பண்டிதனென்று நினைப்பவன் இவர்கள் மறு ஜென்மத் தில் குள்ளநரியாய்ப் பிறக்கிறார்கள்.

949. ஞானானுபவம் வாய்ந்து அந்தர்முக திருஷ்டியிலிருப்ப வர்களுக்குச் சாஸ்திரார்த்தங்களும் வேதவாக்கியங்களும் பெரிய பாரமாகத் தோன்றுகின்றன.

950. முன் ஜென்மங்களில் செய்த நல்வினையும் தீவினையும் பின் ஜென்மத்தில் அததற்குரிய பலன்களைக் கொடுப்பது நிச்சய மாயிருக்கிறபடியால் அவஸ்யம் தர்ம காரியங்களையே செய்யவேண் டும்.

951. தான்யங்களுக்குள் பதரும் பக்ஷிகளுக்குள் கொசுவும் போன்றிருக்கப்பட்டவர்கள் சுகத்திற்குக் காரணம் தர்மமென்று தெரிந்து கொள்ளுவதில்லை.

952. ஆசையற்று மோக்ஷத்தை உத்தேசித்துச் செய்யப் படாத புண்ணிய கருமங்கள் பல ஜென்மங்களைக் கொடுத்து விடு கின்றன.

953. சன்மானம் அவமானம் மானம் கஷ்டம் நஷ்டம் லாபம் சுபம் ஆபத்து சம்பத்து பிறப்பு குலம் இவைகள் தான் செய்திருக் கிற கருமங்களாலுண்டாகின்றன.

954. ஆகாயத்திலுள்ள பறவைகளின் அடிச்சுவடும் ஜலங்களி லுள்ள மீன்களின் பாதக்குறியும் எவ்விதம் காணப்படுவதில்லையோ அவ்விதமே பிரஹ்ம ஞானத்தை அடைந்தவர்களது மார்க்கங்களை யும் காணமுடிவதில்லை.

955. ஆகாயத்தில் ஒரு பூதமும் வாயுவில் இரண்டு பூதமும் அக்கினியில் மூன்று பூதமும் ஜலத்தில் நான்கு பூதமும் பூமியில் ஐந்து பூதமும் சேர்ந்திருக்கின்றன.

956. பிரஹ்மத்தையன்றி மற்றத் தத்துவங்களை விசாரித் தறிந்தவன் தத்துவ ஞானியே யன்றிப் பிரஹ்ம ஞானியல்ல.

957. மனஞ் செல்லுகிற வரை கருமஞ் செல்லும் மனம் செல்ல முடியாதவிடத்தில் கருமம் செல்லமுடியாது.

958. ஐந்து பூதங்களில் ஒன்றைவிட்டு மற்றொன்று ஓரிடத் தில் நிலைபெற்றிராது.

959. பாகமான ஆகாரமிருக்குமிடமாகிய நாபியின் கீழ்பாகத்திலும் பாகமாகாத ஆகாரமிருக்குமிடமாகிய நாபியின் மேற்பாகத்திலும் அக்கினியோடு கூடிய பிராணவாயு சஞ்சரிக்கிறது.

960. சரீரத்தை ரக்ஷித்துவருகிற அக்கினியானது சிரசில் குடிகொண்டிருக்கின்றன.

961. முயற்சி தொழில் பலம் இம்மூன்றும் ஒன்று சேர்ந்ததே உதானவாயுவென்று ஜடதத்துவ நிபுணர்கள் சொல்லுகிறார்கள்.

962. எந்த மனிதன் எந்தக் கர்மத்தை எந்த விதமாய் எந்த மனத்தோடு செய்திருக்கிறானோ அந்தக் கர்மமானது சூக்ஷ்மமாக அந்த மனிதனிடம் குடிகொண்டிருக்கும், அவன் ஓடினால் ஓடும், நின்றால் நிற்கும், நடந்தால் நடக்கும், தூங்கினால் தூங்கும், உட்கார்ந்தால் உட்காரும், பேசினால் பேசும், வேலைசெய்தால் செய்யும், சாப்பிட்டால் சாப்பிடும், முழுகினால் முழுகும், உருண்டால் உருளும், நீந்தினால் நீந்தும், தவஞ்செய்தால் தானுஞ்செய்யும், மறந்தால் மறக்கும், பிறந்தால் பிறக்கும், இறந்தால் இறக்கும், வந்தால் வரும், ஏறினால் ஏறும், இறங்கினால் இறங்கும், மவுனமானால் மவுனமாகும்.

963. பிரஹ்மானுபவத்தினின் றிறங்கும் போதே மனதும் மாயையுங்கூட இறங்குகிறது.

964. பார்ப்பதெல்லாம் பரமாக எவனுக்குத் தோன்றுகிறதோ அவன் மனுஷ்யதேவன்.

965. சங்கல்பத்தை எவன் தானாகப்பாவிக்கிறானோ அவன் பரம பாக்கியன்.

966. நினைக்கிற மனிதன் நினையாதமனிதன் என்ற இருவரையுங் காண்பவன் நிகன்மயோகி.

967. மரம் செடி கொடி புல் பூண்டு முதலிய ஸ்தாவரங்களுக்கும் ஐந்து பூதங்களும் சப்த ஸ்பரிச ரூப ரஸகந்தங்களும் மனமும் ஜீவனும் சுகதுக்கங்களுமிருக்கின்றன.

968. பிராணிகளின் சரீரங்களிலுள்ள பஞ்ச பூதங்களில் ஜலம் அக்கினி காற்று இம்மூன்றும் எப்போதும் விழித்துக்கொண்டிருக்கின்றன. பூமியும் ஆகாயமும் உறங்குகின்றன.

969. காலமிருத்புவும் அந்தக் கரணத்தின் கர்த்தாவும் ஒன்று சேரும்போது காலதேவதை அழிகிறது.

970. காலமென்று சொல்லப்படுகிற மிருத்யுதேவதையானது உருவந்தோற்றமல் பிரஹ்மத்தைமட்டும் விட்டு மற்றெல்லோரையும் சுற்றி நிற்கின்றன.

971. காற்றும் ஜலமும் ஒன்றுசேரும்போது அக்கினியும், காற்றும் அக்கினியும் ஒன்றுசேரும்போது பூமியும் உண்டாகிறது.

972. ஆகாயத்தின் எல்லையைத் தேவர்களும் அறியமுடிய வில்லை.

973. பரமாத்மாவின் ஆயிரத்திலொருபங்கு சக்தியுடையது மனம்.

974. சூரியனுடைய ஒளிசெல்லுகிற இடத்திற்குமேலும் சூரிய சந்திரர்கள் காணப்படாத இடத்திற்குக் கீழும் தாமாக விளங்குகிற அளவற்ற பிரகாசமுடைய சுத்ததேவர்களிருக்கிறார்கள்.

975. பிரஹ்ம நிஷ்டையின் தன்மையினின்று நழுவியவனைப் பிராம்மணனென்று வேதம் சொல்லவில்லை.

976. எது எது இந்திரியங்களுக்கும் மனதிற்கும் புலப்படுகின்றனவோ அவைகள் மாயாஜாலங்களென்று கண்டுகொள்ளவேண்டும்.

977. துரிய அனுபவிக்கு மூன்றவஸ்தைகள் வந்தாலும் பற்றாது.

978. வேதத்திற் கூறப்பட்டிருக்கிற உத்தம சமஸ்காரங்களைப் பெற்றவர்களும் ஒழுக்கமானவர்களும் யோகத்தில் சிரேஷ்டர்களும் தத்சொரூபத்தில் நிலைத்தவர்களுமானவர்கள் பின் கிருதயுகத்தில் லோகபாவனர்களான ரிஷிகளாய் வருகிறார்கள்.

979. பிரஹ்மத்தை அனுபவத்திலறிந்தவர்களைப் பிராம்மணர்களென்று அடிக்கடி வேதம் கூறுகிறது.

980. முக்குணங்களோடு கூடிய ஜீவன் க்ஷேத்ரக்ஞனென்றும் முக்குணங்களை விட்ட ஆத்மா பரமாத்மாவென்றும் அறிந்துகொள்ள வேண்டும்.

981. லகுவான ஆகாரமுள்ளவன் பரிசுத்தமான புத்தியுள்ளவன் இரவுகளின் கடைசியிலும் முதலிலும் சமாதியிலிருப்பவன் இவர்கள் சீக்கிரம் பரமாத்வை அறிகிறார்கள்.

982. பிரஹ்மமாகிய ஸ்ரீமந்நாராயணதேவரிடமிருந்து க்ஷேத்ரக்ஞனாகிய பிரம்மதேவருண்டாகிச் சங்கல்ப சிருஷ்டிகளைச் செய்கிறார்.

983. கிருதயுகத்தின் ஆதியில் எல்லோரும் பிரஹ்ம நிஷ்டர்களான பிராம்மணர்களாகவே இருந்தார்கள். பிராம்மணரல்லாதவர்கள் ஒருவராவது இல்லை.

984. காலக்கிரமத்தில் பிராம்மணர்களே பிராம்மணரல்லாதவர்களாய் விட்டார்கள்.

985. பரலோகத்தின் ரகஸ்யம் தெரியாதவர்களும் உறுதியும் உண்மையும் நம்பிக்கையுமான ஆஸ்திக புத்தி யில்லாதவர்களும் வேதத்திற் கூறியவைகளை யெல்லாம் அங்கீகரிக்க முடியாத நிலைமையிலிருக்கிறார்கள்.

986. பரவித்தை அபரவித்தை என்ற இரண்டில் பரவித்தையொன்றே பிரஹ்மத்தை அடைகிறமார்க்கம்.

987. மனதற்ற இடத்தில் கடவுள் பிரசன்னமாகிறார்.

988. வேதம் ஆகமம் இதிகாசம் புராணம் ஸ்மிருதி கலைஞானங்கள் வேதாங்கம் சாஸ்திரம் தத்துவ சாஸ்திரங்கள் மந்திரசாஸ்திரம் இவைகளெல்லாம் அபரவித்தைகள்.

989. சிருஷ்டிக்கப்பட்டிருக்கிற உலகத்தைப் பிரஹ்மரூப மென்று அனுபவித்து அறிந்தவர்களாகிய பிராம்மணர்களே கர்மத்தின் நீண்டகால வேற்றுமைகளினால் க்ஷத்திரிய வைஸ்ய சூத்திரர்களாய் விட்டார்கள்.

990. உலக ஆசை குடிகொண்டவனுக்கும் ஞானிக்கும் ஜனன மரண ஞாபகமே யில்லை.

991. சொல்லைவிட்டுச் செய்கையில் ஸ்ரீராமபிரானையும் செய்கையை விட்டுச் சொல்லில் கண்ணபிரானையும் நம்பவேண்டும்.

992. ஜீவனை உபாசிக்கிறவன் அறிவாளியென யமனால் பூஜிக்கப்படுகிறான்.

993. வருகிற பிராணனையும் போகிற அபானனையும் எவன் பார்த்துக்கொண்டிருக்கிறானோ அவன் காலாஷ்டகயோகி.

994. நினைப்பு உதயமாகிற இடத்தில் நிற்காமல் அப்பால் போகிறவன் நித்தியசாது.

995. இந்திரியங்களுக்குமட்டும் புலப்படுகிறவைகள் வியக்தமென்றும் மனத்தின் யூகத்தால் புலப்படுகிறவைகள் அவ்யக்தமென்றும் கண்டு கொள்ளவேண்டும்.

996. மனத்தைப்பிராணனிலும் பிராணனைப் பிரஹ்மத்தினிடத்திலும் சேர்த்தவர்கள் பிரஹ்மரிஷிகள்.

997. எப்போதும் பரிசுத்தமும் நல்ல ஆசாரமும் எல்லாப் பிராணிகளிடத்திலும் கருணையும் உள்ளவன் பிராம்மணன்.

998. சூத்திரன் சூத்திரனாகவே இருக்கவேண்டுமென்றும் பிராம்மணன் பிராம்மணனாகவே இருக்கவேண்டுமென்றும் இருப்பானென்றும் வேதமுடிவையறிந்த மஹரிஷிகள் சொல்லவில்லை.

999. மூன்றவஸ்தைகளுக்குட்பட்டு அத்வைதம் பேசுவது முறையல்ல.

1000. பரோக்ஷஞானத்தால் ஜகத் பிராந்தியும் அபரோக்ஷ ஞானத்தால் ஜென்மப்பிராந்தியும் பிராரப்த க்ஷயத்தால் ஜகத் தோற்றமும் நசிக்கும்.

1001. மூன்றவஸ்தைகளையும் வராமற் செய்கின்ற ஆரூடி யோகத்தால் இரண்டில்லாத ஞான சொரூபத்தை அடையலாம்.

1002. எந்த மதஸ்தனுக்கும் துவைதமில்லாத துரியானுபவம் வாய்க்காமல் முக்தி கிடைக்கிறதில்லை.

1003. எந்தக்காலத்தில் அந்தரங்கமாகத் தன்னைக் குறிக்கிறானோ அப்போதிருப்பது பரமயோகானந்தம்.

1004. வேதத்திலும் குருவசனத்திலும் மாறாத நம்பிக்கை கொண்டிருக்கிறவன் அழிவில்லாத பதவிகளை அடைகிறான்.

1005. சுவர்க்கத்தில் சுகம் மட்டும் உண்டு நரகத்தில் துக்கம் மட்டும் உண்டு மனுஷலோகத்தில் சுகதுக்கம் இரண்டுமுண்டு.

1006. சாதுக்களுக்குக் கொடுக்கிற தானத்தின்பயன் பரலோகத்திலும் அசாதுக்களுக்குக் கொடுக்கப்படுகிற தானத்தின் பயன் இவ்வுலகத்திலும் வந்து சேருகின்றன.

1007. ஹோமத்தால் பாபம் விலகுகிறது. வேதாத்தியயனத்தால் சாந்தமுண்டாகிறது.

1008. கெட்டவினயமான வஞ்சகத்தை விட்டு விட்டாலும் நல்ல வஞ்சகமில்லாதவர்கள் உலகத்தில் உண்மையோடிருக்கமுடியாது.

1009. விதிப்படி பிரஜைகளை உண்டு பண்ணுவதால் பிரம்மதேவரும் யாகஞ் செய்வதால் தேவர்களும் தர்ப்பணம் செய்வதால் பிதுர்க்களும் வேதவித்தையைக் கற்பதால் ரிஷிகூட்டங்களும் நிவிர்த்தி ஞானத்தையடைவதால் வாசுதேவரும் உலகத்தை மறப்பதால் எமனும் சந்தோஷமடைகிறார்கள்.

1010. சமமான உலகம் சம்பத்து ஞானம் ராஜ்யம் சக்தி அடக்கம் சுதந்தரம் புண்ணியம் பாபம் பரிகாசம் செல்வம் வினயம் பதம் கபடம் யோகம் ஸ்திரீ சிநேகம் வீடு வாகனம் சந்திப்பு சாந்தம் பிரவிர்த்தி யாத்திரை. இவைகளை எல்லாலோகங்களிலுமுள்ள ஜனங்கள் கருதுகிறார்கள்.

1011. மலைபருவிகளின் ஸ்நானம் தபசிகளுக்குத்தவத்தை விருத்தி பண்ணுகிறது.

1012. ஆகாரமுதலிய அவஸ்யமான தன் ஆசை பங்கமடைந்தவனாகித் திரும்பிச் செல்லுகிற அதிதியானவன் தன் பாபத்தைக் கொடுத்துவிட்டு அவன் புண்ணியத்தை எடுத்துக் கொண்டு செல்கிறான்.

1013. அப்பியாஸ காலத்தில் அவசேதவாதத்தையும் அனுபவகாலத்தில் ஆபாஸவாதத்தையும் மஹாரிஷிகள் அங்கீகரிக்கிறார்கள்.

1014. உலகம் எப்போதும் உள்ளதாகவே இருக்கிறது.

1015. ஜீவன் பிரஹ்மத்திலுண்டாகிப்பிரஹ்மத்திலே நசிக்கிறான்.

1016. விசேஷபுருஷர்கள் யதார்த்தவாதிகள் தத்துவஞானிகள் உண்மை கண்டவர்கள் உத்தமயோகிகள் நிவிர்த்திமார்க்கத்தில் நிற்பவர்கள் இவர்கள் தர்க்கம் செய்யவும் செய்கிறவர்களுக்கு இடமும் கொடுக்கமாட்டார்கள்.

1017. வனங்களிலுள்ள மூலிகைகள் கனிகள் காய்கள் கிழங்குகள் வேர்கள் பழுத்ததும் காய்ந்ததுமான இலைகள் இவைகளையே ஆகாரமாகக் கொண்டவர்களுக்குத் தபோஅக்கினி வளருகிறது.

1018. நாணல் மாவுரி குசை தோல் கமண்டலம் தண்டம் இவைகளைக்கொண்டு ஆரண்யத்தில் சஞ்சரிக்கும் தபசிகளிடம் தபோ தேவர்கள் வந்தடைகிறார்கள்.

1019. நாசிகையின் அருகிலுள்ள புருவங்கள் மூக்கு நெற்றி இவைகளின் சந்திஸ்தானங்களில் புண்ணியசாலிகள் அடையத்தக்க லோகமிருக்கிறது.

1020. தேஜஸ் கீர்த்தி புத்தி ஞானம் வணக்கம் பிறவி தவம் இவைகளையுடையவர்கள் எல்லோராலும் பூஜிக்கப்படுகிறார்கள்.

1021. பூனை நாய் கோழி இவைகளுடன் மனிதர்கள் விளையாடக் கூடாது.

1022. இரவில் எண்ணெயிட்டு ஸ்நானம் செய்யக்கூடாது. எள்ளன்னத்தை உண்ணக்கூடாது.

1023. வெளிஉடம்பின் காரியங்களினாலும் செய்கைகளினாலும் மற்றுமுள்ள பகிர்முக நிச்சயிங்களினாலும் முடிவான எதார்த்தத்தை அறிந்துகொள்ள முடியாது.

1024. புருஷர்களையெல்லாம் இழுத்துவிடக்கூடிய ஆகர்ஷண சக்தி பெண்களிடத்தில் அமைந்திருக்கிறதென்று மஹாத்மாக்களாகிய சிலரைத்தவிர மற்றெல்லோரும் நிச்சயித்திருக்கிறார்கள். அவரவர் ஹிருதயம் பரிசுத்தமாகாத காரணத்தால் அவ்வாறு நிச்சயித்ததேயன்றி மஹாமாயையைக்கூட ஆகர்ஷிக்குஞ் சக்தி ஒவ்வொருவர்களிடத்திலும் தங்கி நிற்கிறது.

1025. சகல தத்துவங்களையுங் கடந்து நின்ற அதீதமான நிலைமையை யடைந்த மகாத்மாக்களின் செய்கைகளும் வசனங்களுங்கூட ஞானமோக்ஷ சாதனமான கருமயோக ரஹஸ்யத்தையே தொடர்ந்து நிற்கின்றன.

1026. தான்றி புங்கு புளி இம்மரங்களின் நிழலில் தங்கக் கூடாது.

1027. மாமியை மருமகள் பரிஜாரகத் தொழிலில் ஏவுகிற காலத்தில் மகன் தந்தையை அவிவேகத்தால் வேலைக்குப் போகச் சொல்லுகிற காலத்தில், சூத்திரர்கள் பிராம்மணர்களைக் கொண்டு பாதசுத்தி செய்துகொள்ளுகிற காலத்தில், சேரக்கூடாத பெண்க

ளுடன் புருஷர்கள் சேருகிறகாலத்தில், சூத்திரர்கள் பிராம்மண ஸ்திரீகளை மனைவியாகக் கொண்ட காலத்தில், பிராம்மணர்கள் சூத்ர ஸ்திரீகளைப் புணருகிற காலத்தில், ஆசாரியர் சிஷ்யர்களுக்கு உண மையைச் சொல்லாத காலத்தில், சிஷ்யர்கள் குருமார்களை அவ மதித்து நடக்கிறகாலத்தில், விவாக மாகாத கன்னிகைகளைக் கண்ட புருஷர்கள் சம்போகம் பண்ணுகிற காலத்தில், வெண்கலப் பாத் திரத்தில் குப்பைகளைக் கொட்டுகிற காலத்தில், நியாயமில்லாமல் பெரியோர்களைத்தூஷிக்கிறகாலத்தில், அனியாயமாக ஜீவப்பிராணி களைக் கொல்லுகிறகாலத்தில், நீதியாக ராஜ்ய பரிபாலனம் இல்லாத காலத்தில் மஹாபலியானவன் இந்திரபதவிக்கு வந்து இவைகளை விலக்கிவிடுகிறான்.

1028. முள்ளுள்ளமரங்கள் அவரைமுதலிய கொடிகள் யாக ங்களுக்குரியமரங்கள் செடிகள் இவைகளை வீட்டில் வைத்து வளர்க்கக்கூடாது.

1029. அலரிப்புஷ்பத்தைத் தரித்துக் கொள்ளக்கூடாது. எந்தப் புஷ்பத்தையும் மோர்ந்து பார்க்கக்கூடாது.

1030. சிறுவர்கள் பார்த்துக் கொண்டிருக்கும்போது பெரி யவர்கள் தின்பண்டங்களை உண்ணலாகாது.

1031. புருஷர்கள் ஸ்திரீவேஷமும் ஸ்திரிகள் புருஷவேஷ மும் போடுவதால் தேஜஸ் தேவதையும் லக்ஷ்மிதேவியும் விலகி விடுகிறாள்.

1032. வர்த்தகம் கிருஷி உத்தியோகம் இவைகளை அனுஷ் டிக்கிற பிராம்மணன் பிராம்மணத்தன்மையினின்று குறைந்தவனா கிறான்.

1033. பிறரால் அவமதிக்கப்படுகிறவன் எல்லாப் பாபங்களி னின்றும் விடுபட்டுச் சுகமாக நிலைக்கிறான்.

1034. என்கர்மத்தால் நான் உண்டானேனென்று சொல்லிக் கொண்டு மாதா பிதாக்களைவிட்டு மாமனார் வீடு செல்லுகிற புத்தி

ரனை விட்டு லக்ஷ்மிதேவி விலகிவிடுகிறாள் தீர்க்கதேவதை நகைக்கிறது.

1035. பயனை உத்தேசித்துச்சமாதி அப்பியாசியாதவன் ஆரூடன்.

1036. பிறர் ரகஸ்யங்களை வெளியிற் கூறக்கூடாது.

1037. எந்தச்சமயத்திலும் தன்னைப்பற்றிக் கொண்டாடக்கூடாது.

1038. கேட்காதவனுக்கு யாதொருவித தர்மத்தையுஞ்சொல்லக் கூடாது.

1039. எல்லா உலகத்திற்கும் பிரியமானவனும் எல்லாப் பிராணிகளாலும் கொண்டாடப்படுகிறவனும் எல்லாக்குணங்களுமுள்ளவனுக இந்தப் பூமியில் சூக்ஷ்மசரீரத்துடன் ஒருவன் சஞ்சரித்துக்கொண்டிருக்கிறான்.

1040. உண்மையை அறிய விரும்புகிறவர்கள் எப்போதும் மனிதர் கூட்டமின்றிய ஏகாந்தத்தில் இருந்து கொள்ளவேண்டும்.

1041. கூட்டமாயிருக்கும்போது ரகஸ்யதர்மங்களை உபதேசிக்கக்கூடாது.

1042. மந்திரதேவதையின் அனுமதி பெற்று மந்திரங்களை முறைப்படி உபதேசிக்கவேண்டும்.

1043. சூக்ஷ்மஞானம் பிரகாசிக்க ஆரம்பிக்கும் போதே சகல ஜீவர்களும் பூதங்களும் வேற்றுமைகளற்றதாகவும் தானுகவும் தெரிய ஆரம்பிக்கின்றன

1044. பெற்றோர்களையும் குருவையும் அவமதிக்கிறவன் ரிஷிகளையும் தெய்வத்தையும் அவமதித்தவனாகிறான்.

1045. இன்சொல்லும் இஷ்டமான வஸ்துக்களைக் கொடுப்பதாலும் விரோதிகளைவசஞ் செய்து கொள்ளவேண்டும்.

1046. தேசயாத்திரை தீர்த்தயாத்திரை மூர்த்தி தரிசனம் சாதுக்களின்சேவை, தேவாலய திருஷ்டி இவைகளால் மனத் தெளிவு உண்டாகின்றன.

1047. பார்ப்பதாலும் கேட்பதாலும் செய்வதாலும் நடப்ப தாலும் நினைப்பதாலும் தூங்குவதாலும் பேசுவதாலும் உள்ளிருக்கிற சக்திகள் வெளியே போய்க்கொண்டிருக்கின்றன.

1048. உத்தமமான ஞானத்தையடைய ஆரம்பிக்கும்போது உத்தமமல்லாததும் உத்தமத்திற்சிறிது குறைந்ததுமான ஞானம் முன்னே பிரசன்னமாகின்றன.

1049. வேண்டுமென்று செய்தாலும் வேண்டாமென்று செய் தாலும் செய்தகர்மத்தின் பலன்கள் செய்தவர்களைச் சேருகின்றன.

1050. சொந்ததர்மங்களிலிருந்து நழுவிய பிராம்மணனை ரா க்ஷஸனென்று சர்வக்ஞரிஷிகள் சொல்லுகிறார்கள்.

1051. முயற்சியும் இயற்கையும் தெய்வமும் இம்மூன்றுஞ் சேர்ந்து கருமபலன்களின் போகங்களைக்கொடுக்கின்றன.

1052. பிரஹ்மத்தன்மை பெற்ற மனுஷ்யன் ஈஸ்வரனாகிறான்.

1053. ஹிம்ஸை யென்பதை அடியோடு விட்டு உயிருடன் உலகத்தில் வசிக்கமுடியாது.

1054. அஷ்டமாசித்திகளின் ஆசைக்காக யோகமார்க்கங் களை அடைகிறவன் பேராசைகொண்டவனும் பெரியலாபத்தை அடையாதவனுமாகிறான்.

1055. மனம் இல்லாதகாலத்தில் மனத்தின் ரகஸ்யம் புலப் படும்.

1056. பரலோகங்களின் ஞானமில்லாதமனிதன் நம்பிக்கை யில்லாத வாதங்களை அடைகிறான்.

1057. யோகம் செய்பவர்கள் கல் முள் இல்லாத இடத்தில் வசிக்கவேண்டும்.

1058. பிராம்மணன் வீணான தானங்களை வாங்கவும் கொடுக்கவும் கூடாது.

1059. உத்தமமான சாதுக்களுக்கு உத்தமமான மனத்துடன் உத்தமமான இடத்தில் உத்தமமான தர்மத்துடன் உத்தமமானவைகளை உத்தமதிருஷ்டியுடன் கொடுப்பதால் உத்தமமான பதவிகளை அடையலாம்.

1060. நித்திரை பிராணன் இவைகளைத்தாண்டிய ஜீவன் தன்னுருவத்தை இழந்துவிடுகிறான்.

1061. பாபபுண்ணியங்கலந்த கருமிகளுக்கும் உபாஸகர்களுக்கும் கிடைப்பது சந்திரலோகம்.

1062. ஜீவவதைசெய்து யாகஞ்செய்கிற சகாமகர்மிகளைத் தேவர்கள் ஸ்வர்க்கத்தில் ஹிம்ஸிக்கிறார்கள்.

1063. சொல்பமாகிலும் ஆத்மஞான உணர்ச்சியில்லாதவர்களுக்கு இந்த சாஸ்திரார்த்தங்கள் மயக்கத்தையே கொடுக்கும்.

1064. பூரண சாதனமுள்ளவன் வாக்கு மவுனத்தால் பிரயோஜனத்தையும் சாதனமில்லாதவன் அப்பிரயோஜனத்தையும் அடைகிறான்.

1065. எந்த இடத்தைப் பரிசுத்தமென்று மனம் நினைக்கிறதோ சாதுக்களும் தேவர்களும் சொல்லியிருக்கிறார்களோ வேதம் கூறுகிறதோ அந்த இடத்திலிருந்து கொண்டு தபஸ்யோகம் இவைகளை ஆரம்பிக்கவேண்டும்.

1066. ஒவ்வொருமனிதனும் தனக்குக் கிடைத்த ஆகாரத்தில் பாதியை ஏதாவது ஒரு ஜீவப்பிராணிக்குக் கொடுத்துவிட்டு உண்ணவேண்டும்.

1067. கர்மகாண்ட ரகஸ்யவேதங்களை அறிந்துகொண்டபின் ஞானகாண்டரகஸ்யவேதங்களைப்பார்வையிடவேண்டும் இல்லையேல் நாஸ்திகவாதம் உதயமாகும்.

1068. உலகத்திற்கு விரோதமில்லாததும் இகழ்ச்சியில்லாததும் பகவத் சம்மதமானதுமாகிய ஜீவனத்தை எல்லா ஆஸ்ரமிகளும் வருணத்தார்களும் செய்யவேண்டும்.

1069. புத்தியானது ஜெயிக்கப்படுமானுல் அணிமாதி அஷ்டமாசித்திகளும் வந்து சேருகின்றன.

1070. கிருதயுகம் தவிர மற்ற யுககாலங்களில் சந்தேகமுள்ள பலர் பிறக்கின்றனர்.

1071. யோகமகிமையாலுண்டாகிற அஷ்டமாசித்திகளில் மயங்கிவிட்டவன் மீளாத பரம மோக்ஷத்தை அடையமாட்டான்.

1072. புத்தியில்லாதவர்களும் புத்தியுள்ளவர்களுமான சிஷ்யர்களைச் சந்தோஷிப்பிக்கச் செய்யுங் குருமார்கள் பிரபஞ்சத்தின் காரணவித்தையை அறிவதில்லை.

1073. காலத்திற்கும் ஆயுளுக்கும் புத்திக்கும் புண்ணியத்திற்கும் தக்கபடி வேதமானது மாறுபாடடைகிறது.

1074. பயனை உத்தேசித்துச் செய்யப்படுங் காரியங்களெல்லாம் பிரயோஜன மற்றவைகளென்று வேதத்தின் கருத்து.

1075. கருமயோகமல்லாத ஞானயோகமும் ஞானயோகமல்லாத கரும யோகமும் சாதன காலங்களில் பிரயோஜனப்படமாட்டாது.

1076. மாறாத உண்மையை அறியவேண்டுபவர்கள் ஞானபாகமான உபநிஷத்துக்கள் பிரஹ்மசூத்திரம் ஸ்ரீபகவத்கீதை இவைகளை ஒருவருடைய பாஷ்யத்தையும் எதிர்பாராமல் அந்தர்முக திருஷ்டியோடு விபரீதமில்லாததும் சந்தேகமில்லாததுமான புத்தியினுல் அறியவேண்டும்.

1077. எதைப்பார்க்கிறேமோ அதெல்லாம் சங்கல்பத்திலிருந்து தோன்றியவைகளென்றும் அந்த சங்கல்பம் ஆத்மாவினிடத்து தித்தனவென்றும் ஞானுப்பியாசி அறிந்துகொள்ளவேண்டும்.

1078. உண்மையில்லாதிருப்பதாலும் உறுதியின்றும் பிறழ்ச்சியடைவதாலும் மனதை இருளாக்கிவிட்டதாலும் மனிதர்கள் இராஜயோகத்தை அடையமுடியவில்லை.

1079. அஜாக்ரதை யில்லாதிருப்பதாலும் மனத்தெளிவாலும் உண்மையாயிருப்பதினாலும் புத்திதீக்ஷண்யமாயிருப்பதாலும் ஆசாரியர் சிசுருஷைகளினாலும் மனிதர்கள் ஞானாதிகாரியாகிறார்கள்.

1080. யோகம் வளர்ச்சி யடையும்பொழுது சைதன்யத்தின் பொதுத்தோற்றமுண்டாகிறது. தீரபுருஷன் அத்தோற்றமும் பரமாத்மாவின் மாயையென்றுகண்டு கொள்ளவேண்டும்.

1081. கர்மமானது ஞானிகளைப் பிரவிர்த்திக்கச் செய்யாவிட்டாலும் பிராரப்தம் இருக்கிறவரை கர்மம் அடங்காது.

1082. ஞானமும் காலத்தின் பலத்தாலுண்டாகிறது.

1083. திரிமூர்த்திகள்பதவி இந்திரபதவி இவைகள் காலத்திற்குட்பட்டது. உண்மையை அறிந்தவர்கள் இவைகளை விரும்பமாட்டார்கள்.

1084. ஜீவாத்மா அழிவுடையதென்று கூறுகிற சமயவாதியும் உண்மை கண்டவன்.

1085. கடவுள் ஒருவரே காலத்திற்கு மேற்பட்டவர்.

1086. பூமி ஜலம் அக்கினி துறவி அரசன் இவ்வைந்திடங்களிலும் லக்ஷ்மிதேவியின் அதிக அம்சமிருக்கிறது.

1087. சத்தியம் தானம் தவம் விரதம்' பராக்கிரமம் தர்மம் இவ்வாறுமுள்ளவர்களிடம் மஹாலக்ஷ்மீ குடிகொள்ளுகிறாள்.

1088. மஹாம்மேருவின் மேற்புறத்தின் நடுமத்தியில் பிரமலோகமும் அதன் கிழக்கு முதலிய நான்கு திக்குகளிலும் இந்திரன் யமன் வருணன் குபேரன் முதலியவர்களுடைய பட்டணங்களுமிருக்கின்றன.

1089. நம்பத்தகாததை நம்புகிறதினுலும் உறுதியில்லாததை உறுதியென்று நினைப்பதனுலும் மனிதன் மாருத துக்கத்தை அடைகிருன்.

1090. சரீரத்தைச் சுத்திசெய்துகொண்டும் ஜலத்தைச் சுத்தமாய் உபயோகித்துக்கொண்டும் ஜாடராக்கினியைத் திருப்திசெய்வித்துக்கொண்டும் ஆத்மாவை அறிந்துகொண்டுமிருக்கிறவனெவனே அவனிடம் ஸ்ரேயஸ் தேவதை மாருதிருக்கிறது.

1091. கெர்ப்பத்திலிருக்கும் ஜீவனுக்குக்கூடக் கடவுள் கட்டளையிடுகிருர்.

1092. சோகப்படுவதால் உருவம் தர்மம் ஆயுள் சம்பத்து திடம் இவைகள் கெடும்.

1093. ஸ்துதியிலும் சன்மானத்திலும் ஞானயோக அப்பியாசி விஷம்போல நடுக்கமடைவான்

1094. எவனுடைய ஸ்துதியையும் அறிவாளிகள் நினைக்கமாட்டார்கள். பேசமாட்டார்கள்.

1095. காலையெழுந்திருந்து யாரைக்கண்டபோதிலும் சுகப்பிரஸ்னம் வினவவேண்டும்.

1096. ஆத்மஞானமில்லாதவர்களிடம் ஞானயோகி பழகக்கூடாது.

1097. சந்நியாசிகளையும் பெரியோர்களையும் கண்டால் சிறுவர்களும் மர்மந் தெரிந்தவர்களும் உட்கார்ந்துகொண்டும் மரியாதையின்றியும் இருக்கக்கூடாது.

1098. கூச்சலிட்டும் தடபுடலாயும் கடுமையாயும் பரபரப்பாயும் பிராணவாயு சிதறும்படியும் யாரிடமும் பேசக்கூடாது. அதனுல் ஆயுள் குறைவடைகிறது.

1099. மூடப்படாமலும் சுத்தமில்லாமலும் ரம்யமில்லாமலுமுள்ள ஆகாரங்களைப் புஜிப்பதால் அவிவேகமுண்டாகிறது.

1100. பரிசுத்தமில்லா திருக்கிறமனத்தில் ஆத்மஞானம் பதிவதில்லை.

1101. இறைந்து கிடக்கிறதான்யங்களை உடனே எடுத்து விடவேண்டும்.

1102. மனைவியைத் திட்டவும் அடிக்கவும் கூடாது.

1103. ஈன்ற பத்து நாளைக்குள் பாலைச் சாப்பிடுவதால் தமோகுண விருத்தி உண்டாகிறது.

1104. இரவில் தயிரையும் சத்துமாவையும் உண்ணக்கூடாது.

1105. சுவாதந்தரியமாகச் சரீரமெடுப்பவர்கள் அவதார புருஷர்கள்.

1106. பிரஹ்மஞானத்தை முன்னிட்டுச் செய்யப்படுகிற கர்மம் ஆயிரமடங்கு வீர்யமுடையது.

1107. கர்மகாண்ட விதிபூர்வமாக மேலாவது ஆஸ்ரமத்தை யடைந்தவன் கீழிறங்கக்கூடாது.

1108. பால்யமும் பாண்டித்தியமும் ஞானத்திற்கு முக்கிய எது மவுனமும் மனமும் முக்கியமல்லாத எது.

1109. எது எது வந்தாலும் வரவேண்டியது தானென்றெண்ணுகிறவன் ஒன்றிலுஞ் சோகப்படமாட்டான்

1110. காலத்தால் துன்பப்படுகிறவர்களைத் தவம் கல்வி தானம் நண்பர்கள் உறவினர்கள் இவ்வகையால் காப்பாற்ற முடியாது தைரியத்தால் சமாளிக்கலாம்.

1111. குருட்டுப் பாடமாக வேதாத்தியயனம் செய்தவன் வருணலோகத்திற்குங் கீழான மின்னல் லோகத்தை அடைகிறான்.

1112. மறைப்பில்லாத ஞானதிருஷ்டியை மஹான்கள் முன் பெற்றுக்கொள்வது உபநயனம்.

1113. இந்திரியங்களுக்கு உண்டாகிற சிரமங்களால் கனவு உண்டாகிறது.

1114. உத்தமமான குலம் குணம் நடை ஆசாரம் அழகு அதிர்ஷ்டம் ரூபம் கல்வி சீலம் திடம் செல்வம் அதிகாரம் வீர்யம் புத்தி முதலிய ஒழுங்காக அமைந்துள்ள பருவமான ஸ்திரீகளைத் தகுந்த பிரபுக்களான விடபுருஷர்கள் அடைய விரும்புவது போல, சாதனம் சாந்தம் பொறுமை அடக்கம் தவம் முதலிய ஞானபருவமடைந்துள்ள சிஷ்யர்களைச் சர்வேஸ்வரனும் மஹாத்மாக்களும் அடைய விரும்புகிறார்கள்.

1115. ஈஸ்வரன் தன் அதிகாரத்திற்குத் தக்க நூறுவயது வந்தவுடன் பிரஹ்மத்தை அடைகிறான்.

1116. மனதின் பரிசுத்தத்துடன் சர்வேஸ்வரனுக்குரிய அணிமாமுதலிய அஷ்டமஹா சித்திகளை அடைய முயற்சிக்கிறானே அவன் முறைப்படி அவைகளை அடைகிறான்.

1117. நித்திரையாலுண்டாகிற குற்றங்களைக் கண்டு யோகியானவன் பிரம்மசரியவிரதத்துடன் நித்திரையை அகற்றவேண்டும்.

1118. கெட்ட குணங்களாலும் நல்ல குணங்களாலும் பரமாத்மா மறைவுபட்டிருக்கிறது.

1119. யுக்திக்கு எட்டாத அனுபவத்தை ஆசாரியர் உபதேசிக்க முடியாததாகையால் ஞானதிருஷ்டியினாலாவது இந்திரிய மனோ ஏகாக்கிரத்தினாலாவது தானே தெரிந்து கொள்ளவேண்டும்.

1120. பிரகிருதி புருஷர்களுக்குரிய பேதம் அபேதம் ஜீவாத்ம பரமாத்ம ஒற்றுமை வேற்றுமை இந்நான்கையும் ஞானயோகி தெரிந்துகொள்ளவேண்டும்.

1121. நிவிர்த்திமார்க்க மஹரிஷியான பத்ரீநாராணர் கூறிய வழியிற்சென்றால் பிறப்பில்லாமையிலும் பிரவிர்த்திமார்க்கமஹரிஷியான பிரம்மதேவர் கூறிய வழியிற்சென்றால் பிறப்பிலும் கொண்டுபோய்விடுகின்றன.

1122. பிரம்மசரியம் கொல்லாமை இரண்டும் சரீரதபசு;

1123. நாவையும் மனத்தையும் அடக்குவது மானத தவம்.

1124. வேண்டுமென்றும் வேண்டாமென்றும் இரண்டுமில்லாததென்றும் மூன்றுவிதமான உபயோகமுள்ளது மனம்.

1125. உருவமூர்த்தியின் உபாசகர்களுக்கு அஷ்டமாசித்தி உண்டாகிறது.

1126. பிரகிருதியும் ஜீவனும் யாதொரு அடையாளமுமில்லாதவைகளும் ஆதியும் அந்தமும் இல்லாதவைகளாயிருக்கின்றன.

1127. ராஜஸ தாமஸ குணங்களை விட்டுவிடுவது தபசு.

1128. ஜனங்கள் திருஷ்டிக்குப் புலப்படாமல் இவ்வுலகத்தில் சூக்ஷ்ம சரீரத்துடன் பலரிஷிகள் தேவர்கள் சித்தர்கள் சஞ்சரித்துக்கொண்டிருக்கிறார்கள்.

1129. இந்திரியங்களோடு நின்றுவிடுவது ஆஸ்ரமங்கள்.

1130. சரீரத்தோடு நின்று விடுகிறது வருணங்கள்.

1131. எல்லாவற்றையும் திபாகம் செய்வதால் பரமாத்மாவின் அருளுண்டாகிறது.

1132. ஒருமதாநுஷ்டானமுடையவன் மற்றோர்மதத்தைத் தூஷித்தானானால் அவன் தனது மதவிஷயங்களை தெரியாதவனென்று கண்டுகொள்ளவேண்டும்.

1133. மோக்ஷத்திற்காக முயற்சி செய்யும் அனைவரும் கருமபலன்களை விட்டுவிடுவது தான் சிறந்தவழி.

1134. சுத்தமானவர்களிடத்திலிருந்து ஆகாரத்தைப் பெறுவதாலும் ஆகாரநியமத்தாலும் ரஜோகுணபாபம் விலகிக் கருவிகள் சுத்தமாகின்றன.

1135. கருமயோகப்பிராம்மணன் பக்தியோகப்பிராம்மணன் ஞானயோகப்பிராம்மணன் சுதந்தரப்பிராம்மண ன்என்று நான்குவிதமான பிராம்மணர்களிருக்கிறார்கள்.

1136. இலுமிச்சம்பழத்திற்கு எத்தனைகாலம் எத்தனை மாதிரி உபதேசம் செய்தாலும் அதன் இயற்கைக்குணம் சிறிதும் மாறுபடாததுபோல, பூர்வ ஜென்மாந்தர கர்ம அஞ்ஞான வாசனையுடையவர்களுக்கு எத்தனைவிதமாக எத்தனை காலம் வரை எத்தனை மஹான்கள் போதித்தாலும் யாதொரு பலனுமுண்டாவதில்லை.

1137. பழைமையான கர்ம சக்தியை அனுசரித்து ஜெகத்பரிபாலன யீஸ்வரன் ஜீவகோடிகளின் நன்மை தீமைகளை நியாயப்படி செய்கிறாரென்று வேதம் கூறுகிறது.

1138. தேகசம்பந்த முக்தனுக்கு அரூபப்பிரஹ்மானுபவம் அனவரதமும் சித்திக்கிறதில்லை.

1139. அதிகாரிகளுக்குத்தக்கவாறு எல்லாமதங்களையும் ஏற்படுத்தியது பரமேஸ்வரன்.

1140. பிரத்யகாத்மதரிசனம் செய்தவனுக்கும் பரோக்ஷ ஞானிக்கும் மரண காலத்தில் ஹ்ருதயம் துடிக்கும்.

1141. பிரம்மலோகத்திலுள்ள அரமாண்டலீ என்ற பெரிய தடாகமத்திபிலுள்ள பிரம்மசாரிக்கூட்டத்துடன் இவ்வுலகபிரம்மசாரிபோய்ச் சேருகிறான்.

1142. நாமம் வாக்கு பிராணன் சித்தம் கருமசாரம் தியானம் விஞ்ஞானம் இவைகள் முறையே விசேஷமுடையது.

1143. சன்னியாஸமென்ற தியாகமும் பிராணிகளுக்கு உபகாரம் செய்வதும் ஓர் வகையான தவம்.

1144. பிராணன்கள் இந்திரியங்கள் இவற்றின் காரியங்கள் ஆத்மாவிடம் செல்லாமல் மனத்தோடு நின்றுவிடுகின்றன.

1145. சகல நாடிகளையும் அடக்கிவிடக்கூடிய ரேசகத்தை ஒரு முகூர்த்தகாலம் பழகியவர்களுக்கு ஆகாயத்திற் சஞ்சரிக்கிற ககனசஞ்சாரசித்தர்கள் தோற்றுகிறார்கள்.

1146. தான் சித்திபெறவேண்டியும் உலகம் சித்திபெற வேண்டியும் எல்லோரும் புண்ணிய கருமங்களைச் செய்யவேண்டும்.

1147. எல்லாக் கருமங்களையுந் துறந்த ஞானிகளுங்கூட உலக மரியாதையைக் காப்பாற்றவேண்டிக் கருமம் செய்கிறார்கள்.

1148. வெறுப்புள்ளவைகளில் துவேஷமும் கோபமும் விருப்புள்ளவைகளில் சந்தோஷமும் பிரியமும் இல்லாதிருப்பது சாதுக்களின் லக்ஷணம்.

1149. பிரஹ்மவித்தைக்கு விரோதமான உபவாஸத்தைத் தவமென்று சாதுக்கள் எண்ணுகிறதில்லை.

1150. பகலில் உறங்காதிருப்பவன் எப்போதும் உறங்காதவனாகிறான்.

1151. வெளியில் அபிமானத்தைக்காட்டி உள்ளில் இல்லாதிருப்பவனை அவிவேகமும் ஆசையும் ஒன்றும் செய்வதில்லை.

1152. மலைகளின் மண்கண்ட பூமிகளில் வசிப்பதால் யோகிகளுடைய யோக உஷ்ணம் விலகுகிறது.

1153. பருவமுள்ள ஸ்திரீயும் புருஷனும் பருவகாலத்தில் பருவத்தோடு நியாயமான புணர்ச்சியை விரும்பாவிடில் சுத்தமான பிரஜைகள் உற்பத்தியாகிறதில்லை.

1154. எவன் நன்மையையோ தீமையையோ தான்செய்கிறதாக நினைக்கிறானோ அதன் புத்தி குற்றமுள்ளதென்றும் உண்மையை அறியாததென்றும் ரிஷிகளுடைய் கருத்து.

1155. யமன் யமதண்டனை வியாதி உபத்திரவம் துஷ்டமிருகங்கள் துஷ்டஜந்துக்கள் மனைவி மக்கள் சத்துரு இவைகளுங்கூட மோக்ஷசாதன மென்று பெரிய விசாரணையுடைய ரிஷிகள் சொல்லுகிறார்கள்.

1156. உலக வஸ்துக்களெல்லாம் பிரஹ்மத்தினிடத்திலிருந்துண்டாகிறதென்று அனுபவத்தில் தெரிந்துகொண்டவனை அபிமானமாவது அகங்காரமாவது ஒன்றுஞ்செய்ய முடியாது.

1157. அனித்திய விசாரணைகளும் பரம்பரையாக நித்திய விசாரணைக்குச் சாதனமாகவே முடிகிறது.

1158. நம்மை நம்பி ஒருவர் ஒரு ரகஸ்யத்தைச் சொன்னால் அதை வெளியிடக் கூடாது.

1159. கிடைத்த ஆகாரத்தை ஒருவருக்கும் கொடாமல் தான் மட்டும் உண்பதால் மார்க்க தோஷம் சம்பவிக்கிறது.

1160. பாபம் வேண்டாதவர்கள் மீன் மாம்ஸம் லோகங்கள் கள் தேன் லாகிரிபதார்த்தங்கள் அன்னம் ஸ்திரீ புத்திரன் இவைகளை விற்கக்கூடாது.

1161. சூரியபகவானது உதயகாலத்திலும் அஸ்தமன காலத்திலும் நித்திரை செய்யக்கூடாது. அதனால் ஆத்மசக்தி குறைவுபடுகிறது.

1162. பலபுத்திரர்களைப் பெற்றுத் தரித்திரவியாதி இவைகளாற் கஷ்டப்படுகிறவர்கள் முன்ஜென்மத்தில் மித்திரத்துரோகம் செய்தவர்களென்று தெரிந்துகொள்ளவேண்டும்.

1163. பிரவிர்த்தி மார்க்கங்களும் காலாந்தரத்தில் மோக்ஷ சாதனமாக முடிகிறது.

1164. நிவிர்த்திமார்க்கமும் பிரவிர்த்தி மார்க்கமும் ஒன்றோடொன்று சம்பந்தப்பட்டிருக்கிறது.

1165. தன்னிடத்திலுள்ள ஜலத்தைத் தாகம் உள்ள ஜனங்களுக்குக் கொடாவிட்டால் பாபம் சம்பவிக்கிறது.

1166. பல ஜனங்களுக்கு உபயோகமாகக்கூடிய எந்த வஸ்துவையும் பாழ்படுத்துவதால் பெரிய பாபம் சம்பவிக்கிறது.

1167. சொந்த மனைவியின் ருதுகாலத்தை உபேக்ஷிக்கிற கிரஹஸ்தனுக்குச் சிரேயஸ் குறைகிறது.

1168. உள்ளத்தின் ஒழுங்கு குறைவுபடும்போது உண்மை மறைகிறது.

1169. ஓடுகிற நதிஸ்நானத்தால் தேஜஸ் புண்ணியம் பலம் இவைகளுண்டாகின்றன.

1170. சொந்த மனைவியை யன்றி மற்றெந்தஸ்திரீகளோடும் காம சங்கல்பத்தோடு பேசக்கூடாது.

1171. மஹாதபஸ்ரேஷ்டர்களும் பிரஹ்மரிஷிகளுங் கூடத் தன்னைப்பற்றிக் கர்வமடைந்தால் குறைவடைகிறார்கள்.

1172. மோக்ஷத்தை உத்தேசித்துத் தர்மம் செய்யவேண்டும்.

1173. பற்றற்ற அறிவை அடைகிற காலத்தில் ஆண்டவன் அவதாரமாகி ஆசாரிய வடிவமாகி வருகிறான்.

1174. தான் ஞானவான் பரிசுத்தன் பாக்கியசாலி பக்தன் என்று தானே எண்ணுவதால் தபோதேவதை சிரிக்கிறது.

1175. நல்ல சாதுக்கள் எதைக்கேட்டாலும் கொடுத்து விடுவதால் சுகிர்தம் உண்டாகிறது.

1176. பிறவியானது துன்பமென்றெண்ணுதவர்களுடன் பழகக்கூடாது.

1177. எந்தமததெய்வங்களையும் சாஸ்திரங்களையும் ஆசாரியர்களையும் வேதங்களையும் நிந்திக்கலாகாது.

1178. டம்பத்திற்காகவாவது பயத்தினாலாவது பரிகாசத்திற்காகவாவது அதிகாரத்திற்காகவாவது துக்கத்திற்காகவாவது சிநேகிதத்திற்காகவாவது செய்யப்படுகிற தர்மமானது மோக்ஷபலனைக் கொடுப்பதில்லை.

1179. ஏகாக்கிரபுத்தியின்றிச்செய்யப்படுகிற தானம் தபம் ஜெபம் ஹோமம் பாராயணம் தியானம் பூஜை முதலிய மற்றக் காரியங்களும் பிரயோஜனப்படுவதில்லை.

1180. பரமபதத்தை அடைவதற்குப் பரமாத்ம நிஷ்டையே போதுமென்று ஶடகோபரும், ஆசாரியபக்தியே போதுமென்று ஆளவந்தாரும், பகவத்கைங்கரியமேபோதுமென்று இராமானுஜரும் பகவத்கிருபையே போதுமென்று ருக்மணீதேவியும், யதார்த்தகர்மப் பிடிவாதமே போதுமென்று வேதாந்த தேசிகரும், புத்தியின் சூக்ஷ்மமேபோதுமென்று வசிஷ்டரும், ஹிருதய ஏகாக்ரமே போது

மென்றபதஞ்சலியும், பிரஹ்மவிசாரணையே போதுமென்று ஜனக ராஜனும், ஒன்றிலும்மயங்கா திருத்தலே போதுமென்று சீதாப் பிராட்டியும், மஹாமந்திரஜெபமே போதுமென்று வால்மீகரிஷியும், தவமே போதுமென்று ஜாபாலியும், சாஸ்திர ஆராய்ச்சியே போது மென்று கிருஷ்ணத்வைபாயனமஹரிஷியும், தேசகைங்கரியமே போதுமென்று திருஞானசம்பந்தரும், விரதாதிகளை அனுஷ்டித்தலே போதுமென்று மத்வமுனீந்திரரும், ஜெயமே போதுமென்று சங்கர பகவத்பாதரும், ஜீவகாருண்யமே போதுமென்று புத்தபகவானும், பிரம் மசரியமேபோதுமென்று பீஷ்மாசாரியரும், தியானமே போது மென்று தத்தாத்திரேயரும், அஷ்டமாசித்தியே போதுமென்று அகஸ்தியரிஷியும், பொறுமையே போதுமென்று ஜடபரதரும், பாப புண்ணியங்களை விட்டு விடுதலே போதுமென்று கபிலாசாரியரும், சத்தியமே போதுமென்று உமாதேவியும், யாதொருசங்கல்பமு மின்றியிருத்தலே போதுமென்று புஜண்டமஹரிஷியும், பரமேஸ் வரபஜனமே போதுமென்று நாரதப்பிரஹ்மரிஷியும், தத்துவ விசா ரணையே போது மென்று சுகப்பிரஹ்மரிஷியும், எங்குமில்லா திருத் தலேபோதுமென்று மஹாதேவரும், எங்குந்தானாயிருத்தலே போதுமென்று க்ஷீராப்திநாதரும், தெய்வதரிசனமே போதுமென்று திருமூலரும், தர்மமார்க்கப்படி நடப்பதே போது மென்று ஸ்ரீ ராக வரும், புருஷப்பிரயத்தனமே போதுமென்று ஸ்ரீ கிருஷ்ணனும், யோகாப்பியாஸமே போதுமென்று நந்திதேவரும், ஒருநோயுமின்றி யிருத்தலே போதுமென்று தன்வந்திரிமஹரிஷியும், ஒருகற்பனையு மில்லாதிருத்தலே போதுமென்று அம்பரீஷமஹாராஜாவும், நிரா சையே போதுமென்று ஹிரண்யகர்ப்பரும் அசைவற்றிருத்தலே போதுமென்று விஸ்வாமித்திரமஹரிஷியும், சகல ஆனந்தங்களையும் தாண்டிநிற்பதே போதுமென்று மாணிக்கவாசகரும், ஜோதிமய மாய் நிற்றலே போதுமென்று போகரிஷியும், கலந்துங்கலவாதி ருத்தலே போதுமென்று சுப்ரமண்யதேவரும், கண்ணை அடை வதே போது மென்று கணேஸ்வரரும், எவ்விதவிருத்திகளுமில் லாதிருப்பதே போதுமென்று பிரஹஸ்பதிபகவானும், பரிசுத்தமா யிருத்தலே போதுமென்று சூர்யபகவானும், சர்வமங்களமாய் நிற் பதே போது மென்று சூடாலையும், சகலசம்பத்தும் பொருந்தி நிற்

பதே போதுமென்று மஹாலக்ஷ்மிதேவியும், பற்றியும் பற்றுதிருத் தலே போதுமென்று கருடபகவானும், சகலவேற்றுமைகளுமில்லா திருப்பதே போதுமென்று ஆதிசேஷனும் கூறியிருக்கிறார்கள்.

1181. ஆயிரக்கணக்கான வருஷங்கள் அசைவற்று அன்ன மின்றியிருக்கப்பட்டவர்களுக்கும் பல்லாயிரம்சிஷ்யர்களுக்குப்பிர ஹ்மஞானம் போதிக்கின்றவர்களுக்கும் பரமாத்மஞாஜ்ஞேயம் உண்டானதாகச் சொல்லி விடமுடியாது. அவர்களில் அஞ்ஞானி களுமுண்டு.

1182. பஞ்சேந்திரியங்களுக்கும் மனதிற்கும் பணிவிடை பண்ணக்கூடாது.

1183. எல்லாப்பிராணிகளுக்கும் பயத்தை உண்டு பண்ணு திருக்கிற தர்மத்திற்குச்சரியானது வேறொருதர்மமுமில்லை.

1184. அந்தர்முகசாதனங்கள் நிறைவேறும்போது பகிர் முக காரியங்கள் சாதனங்கள் குணங்கள் தானே ஓய ஆரம்பிக் கின்றன.

1185. ஞானப்பியாஸமுடையவர்களும் தேஜஸ் சுகம் தீரம் இவைகளை விரும்பியவர்களும் பேசுவதற்குப் பயப்படுகிறார்கள்.

1186. யாதொருகட்டுப்பாடுகளு மின்றி எந்த வருணாஸ்ர மத்தார்களும் யோகஸமாதி அப்பியாசிக்கலாமென்று ஜாண்டில்ய மஹரிஷி கூறியிருக்கிறார்.

1187. வேதத்தை அலக்ஷியம் செய்வதால் பரமாத்மாவையும் ஆகமத்தால் ஜெகதீஸ்வரனையும் ஸ்மிருதியால் சிருஷ்டிகர்த்தர்களையும் வேதாங்கத்தால் பிரம்மதேவரையும் சாஸ்திரத்தால் ரிஷிக்கூட்டங் களையும் இதிகாசங்களால் பிதுர்தேவர்களையும் மந்திரங்களால் சூரிய னையும் அலக்ஷியம் செய்ததாகிறது அதனதன் பாபங்களையும் அடைய நேருகிறது.

1188. பரமேஸ்வரனுடைய சேவையைச்செய்வது, அஹிம்சா தர்மத்தைக் காப்பாற்றுவது, நிரந்தர முனீஸ்வரர்களை நமஸ்காரம் செய்வது, இவைகள் சம்சாரத்தின் சாரத்தை அறிவதற்கு ஏதுவாகிறது.

1189. நித்தியமில்லாத பதவிகளையும் சுகங்களையும் விரும்புகிறவர்களும் யோக்யதை மரியாதை உணவு உடை மனைவி வீடு இவைகளை விரும்புகிறவர்களும் நல்லவழியில் பொருள் சம்பாதிக்க வேண்டும்.

1190. ஆரம்பத்தில் துவைதம் மத்தியில் விசிஷ்டாத்வைதம் முடிவில் அத்வைதம் இம்மூன்றுமில்லாதிருப்பதே முக்தி.

1191. விதேகமுக்தியில்தான் பரமானந்தப் பிராப்தியும் கிருதகிருத்யத்தன்மையும் விளங்கும்.

1192. அதிசூக்ஷ்மபுத்தியும் நிஷ்காம புண்ணியமிகுதியும் பந்தமற்ற மனதும் குவிந்த சித்தமும் கட்டுப்பாடில்லாத பரதந்திர சுபாவமும் யதார்த்தமாகவுள்ளவன் அமிர்தபதவியை அடைகிறான்.

1193. உலக நன்மையையும் மோக்ஷத்தையும் விரும்பியவர்கள் யாவரும் பஞ்சமூர்த்திகள் தேவர்கள் உலகபாலர்கள் ரிஷிகள் பிதுர்தேவதைகள் சித்தர்கள் சப்தரிஷிகள் சிருஷ்டிகர்த்தர்கள் இவர்களது நமஸ்காரத்தைத் தினந்தோறும் செய்து வரவேண்டும்.

1194. பிரபஞ்ச சிருஷ்டியினுண்மையை அறிய முயற்சிப்பதால் யாதொரு பிரயோஜனமும் ஏற்படுவதுமில்லையென்றும் பிரபஞ்ச ஆதாரவஸ்துவை ஞானத்தினலறிந்து கொள்ளவேண்டுமென்றும் அதீதஞானசிரேஷ்டர்கள் கூறுகிறார்கள்.

1195. சூக்ஷ்ம எண்ணம் சூக்ஷ்ம பார்வை சூக்ஷ்ம ஆகாரம் சூக்ஷ்ம வித்தை சூக்ஷ்ம யோகம் சூக்ஷ்மவசனம் சூக்ஷ்ம கமனம் சூக்ஷ்மஉறுதி சூக்ஷ்மபக்தி சூக்ஷ்மஞானம் சூக்ஷ்ம சரீரம் சூக்ஷ்ம பூமி சூக்ஷ்ம நிலைமை சூக்ஷ்மசக்தி இவைகளை உடையவர்கள் ரிஷிகள்.

1196. புத்தியானது காலத்திற்குட்பட்ட தாகையால் காலமே கர்மத்திற்குத் தக்கபடி புத்தியை மாற்றிவிடுகிறது.

1197. பிரத்யகாத்மாவை முதலில் அறிந்து பின் பிரஹ்மத்தில் வியாபிக்கவேண்டும்.

1198. ஞானம் அஞ்ஞானம் இவ்விரண்டும் எல்லோருடைய சரீரங்களிலுமிருக்கின்றன.

1199. பாபத்தைச்செய்தவன் செய்த பாபத்தை மறைத்துக்கொண்டு தைரியத்துடனிருப்பானுனல் நாசத்தை அடைகிறான்.

1200. கல்வியும் செல்வமும் ஓரிடத்திலிருக்கும்போது கருணை குறைகிறது.

1201. அஞ்ஞானமில்லாதவன் ஒரு முகூர்த்தத்திற்குமேல் உலகத்தில் உயிரோடிக்கமுடியாது.

1202. தைரியம் யுக்தி பராக்கிரமம் சுத்தம் ஆசாரம் துணிவு கல்வி ஆராய்ச்சி செல்வம் அதிகாரம் அன்பு சாஸ்திரம் ஆசாரியன் தெய்வம் ஜீவகாருண்யம் கருமம் வேதம் நிஷ்டை இவைகளைக்கொண்டிருந்த மதம் க்ஷீணித்துவிடுகின்றன.

1203. ஆரம்பமாகிய அப்பியாஸமனமானது இடைகிடைக்குமானுல் ஓட ஆரம்பிக்கும்.

1204. சங்கல்பத்தினுல் கட்டுப்பட்டவர்களுக்கே பல நிபந்தனைகள் வேதத்திற் கூறப்பட்டிருக்கிறது.

1205. மனதில் எந்த நினைப்புவந்த போதிலும் அந்த நினைப்பை விசாரித்து முடிவுசெய்து அந்த நினைப்புக்கு இடங்கொடுப்பது அப்பியாசிகள் வழக்கம்.

1206. ஸ்தூல சரீரத்துடன் செல்லமுடியாத இடங்களுக்குச் செல்வதற்காகச் சூக்ஷ்ம சரீரத்துடன் செல்லப் பழகியவர்களுக்குச் சித்தர்களென்று பெயர்.

1207. சதா ஆத்ம நாட்டமுடையவர்களுக்குச் சாஸ்திரார்த்தங்களும் வாத்திமத்தன்மையும் பேச்சும் பாரமாகத்தெரியும்.

1208. முக்திற்குச் செல்லுகிறவழியில் விஷய ஆசையென்கிற அக்கினி நதியும் ஞானமென்கிற மயிர்ப்பாலமும் இருக்கின்றன.

1209. உடம்பை ஆத்மாவாகக்கொண்டமதம் முதல் ஆத்மாவை ஏகாத்மாவாகக் கொண்ட மதம் வரையுள்ளவர்கள் சங்கல்ப பேதத்தினால் வித்தியாசப்படுகிறார்கள்.

1210. பரமாத்மாவின் ஹம்ஸபூதனான ஜீவாத்மாவாகிய தன்னை அறிந்து கொண்டபின்பு பரமாத்மாவை அறிய வேண்டுமென்று பதஞ்சலிமுனிவர் கூறுகிறார்.

1211. ஒருவர் சரீரத்தை நாம்தொடவும் மற்றொருவர் நமது சரீரத்தைத்தொடவும் செய்வதால் தீமைகள் பல உண்டாகின்றன.

1212. மனிதர்கள் புண்ணியத்தால் தேவர்களாவதும் அந்தக் கருமதேவர்களது புண்ணியம் நசித்தபின் மனிதர்களாவதும் சகஜமாயிருக்கிறது.

1213. மிருத்யுதேவதை என்ற பெண்ணின் கண்களிலிருந்து சிந்திய நீர்த்திவலைகள் வியாதிகளாகமாறிக் காலம் வந்தபோது எல்லாஜீவர்களையும் பீடிக்கிறது.

1214. சங்கல்பரகித சாதுவை அடிக்கடி சந்திப்பது சகஜ ஞானிகள் வழக்கம்.

1215. மதப்பிடிவாதமுடைய மனுஷ்யர்களுக்கு மனத்தெளிவும் உண்மைஞானமும் உண்டாகுமென்று சுருதிகளும் மஹாத்துக்களுங்கூறவில்லை.

1216. பிரஹ்மத்தைத் தவிரமற்ற கற்பிதவஸ்துக்களைப்பற்றியே கேள்விகள் கேட்பதும் பதில் சொல்லுவதும் வேதம் கூறுவது மாயிருக்கிறது.

1217. பந்தத்திற்கட்டுப்பட்டஜீவர்களெல்லாம் முறையிட்டுச் சொல்லிக்கொள்வது ஜெகதீஸ்வரனிடத்திலேயே தவிரப் பிரஹ்மத்தினிடத்திலில்லை.

1218. ஜீவநிர்ணயமில்லாத அத்வைதிகள் மாயாவாதிகள்.

1219. பிறர் பொருளைக்கவரக்கூடாதென்று தர்மசாஸ்திரம் சொல்லியிருக்க அந்த தர்மமானது பலமில்லாதவர்களால் ஏற்படுத்தப் பட்டதென்று புலமுடையவர்கள் நினைக்கிறார்கள்

1220. அப்ரத்யக்ஷமான வேதத்திலிருந்து பிரத்யக்ஷமான வேதங்களுண்டாயிருக்கின்றன.

1221. எவ்வளவு தூரம் ஆழ்ந்தியோஜித்துப் பார்க்கவேண்டுமோ அவ்வளவு தூரம் ஆழ்ந்தியோஜித்துப் பார்த்ததில் பரமாத்மாவே ஜீவாத்மாகவும் பிரபஞ்சமாகவும் தோற்றுகிறதென்று நிச்சயமாகத் தெரிகிறது.

1222. பஞ்சமூர்த்திகள் முருகன் கணபதி பிரஹ்மரிஷிகள் இந்திரன் ஏமன் கருடன் ஆதிசேஷன் இவர்கள் சத்தியசங்கல்பவாதிகள்.

1223. எந்த வுலகத்தில் கணக்குக்கு அதிகமான பிரஜைகளும்பிராணிகளும் உண்டாகின்றனவோ அவைகளையெல்லாம் சிருஷ்டித்தவரே நாசமாக்கிவிடுகிறார்.

1224. அக்ஷரப்பிரஹ்மத்தின் சிருஷ்டியையும் பிரகிருதியின் சிருஷ்டியையும் அறிந்தவர்கள் ஒன்றையும் நித்தியமாகச் சொல்லுகிறதில்லை.

1225. உலகத்தின் ரகஸ்யம் வேதம் வேதத்தின் ரகஸ்யம் சத்தியம் சத்தியத்தின் ரகஸ்யம் அடக்கம் அடக்கத்தின் ரகஸ்யம் தானம் தானத்தின் ரகஸ்யம் தவம் தவத்தின் ரகஸ்யம் சந்நியாஸம் சந்நியாஸத்தின் ரகஸ்யம் சுகம் சுகத்தினரகஸ்யம் சகுணம் சகுணத்தின் ரகஸ்யம் நிர்க்குணம் நிர்குணத்தின் ரகஸ்யம் பிரஹ்மம் என்றறியவேண்டும்.

1226. மாயாவாதிகளுக்குச் சுஷுப்தி புருஷனே தெய்வம்.

1227. ஜீவன் மாயை இவைகளை அங்கிகரியாமல் பேசுகிறவன் விஷயந் தெரியாதவன்.

1228. பிரபஞ்ச அதீத வஸ்து தரிசனமானபின் உலகம் பொய்.

1229. சாஸ்திரஞானத்தைக்கொண்டு உலகம் சாஸ்திரம் வேதம் மூர்த்தி பாபம் புண்ணியம் பிறப்பு இறப்பு இவைகளைப் பொய்யென்பவன் யமதண்டனைக்குட்படுகிருன்.

1230. சர்வதத்துவங்களையும் தள்ளிக்கொண்டு போகப்போக எது தள்ளப்படவில்லையோ தள்ளமுடியாதோ அது கடவுள்.

1231. மயக்கமும் மறைப்புங்கொண்ட மனத்துடன் வாழ்வதைக் காட்டிலும் உயிரை விட்டுவிடுவது சிலாக்கியம்.

1232. நினைப்புடன் அப்பியாஸம் செய்யும்போது நினைப்பில்லாமல் மறைப்பின்றி எப்போது ஆகிறதோ அப்போது நிருவிகல்ப சமாதி பெற்றதாகிறது.

1233. மதஸ்தாபன கர்த்தாக்களான ஞானிகளெல்லோரும் பரமாத்ம சுகத்தைக்காட்டிலும் மோக்ஷ உபாயமான உலக வுபகாரமே சிறந்ததென்று நினைத்துவிட்டார்கள்.

1234. தர்மத்திலும் பொருளிலும் ஆசைகொண்டவனுயிருந்த போதிலும் மோக்ஷத்தில் தீவிர ஆசையுள்ளவனுக்கு ஆசாரியர் ஞானோபதேசம் செய்யலாம்.

1235. சிரவண மனன நிதித்தியாசனங்களால் பரமாத்மாவை அனுபவத்தில் அறிந்தவன் இவ்வுலகத்திலேயே முக்தன்.

1236. உண்மையான பக்தர்களுக்கும் பேராசை கொண்டவர்களுக்கும் நித்திரை வருவதில்லை.

1237. ஸ்தூலசரீரத்தை விடும்பொழுது ஜீவன் எதைக்கருதுகிருனே அதையே மறுஜென்மத்தில் அடைகிருன்.

1238. சவிகல்ப சமாதிகாலத்தில் ஸ்பரிச இந்திரியமில்லை.

1239. சகல வஸ்துக்களும் ஞானத்திற்குச் சாதனமாகவும் அசாதனமாகவும் இருக்கிறது.

1240. ஆபத்துக்காலத்தில் அதர்மத்தைச்செய்தவனும் தர்மத்தை அடைகிறான்.

1241. ஆகாசகமனம் பரகாயப்பிரவேசம் முதலிய சித்திக ளில் யோகி மயங்குவானானால் யோகம் சித்திக்க மாட்டாது.

1242. மனமில்லாதபோது மனத்தின் அதிதேவதையான பரமாத்மா பிரசன்னமாகிறது.

1243. ஞானியும் யோகியும் நிருவிகல்ப சமாதியினின்று விழித்தவுடன் கண்கள் அக்கினி ஜ்வாலைபோன்றிருக்கும்.

1244. ஜெயமுடையவனைத் தெய்வமென்று எல்லா வுலகங் களிலும் கொண்டாடுகிறார்கள்.

1245. ஆத்மாவினின்று சங்கல்பமும் அதன்பின் முறையே காமம் துக்கம் லோபம் அதிகாரம் ஆத்திரம் பாபம் பரபரப்பு அறி யாமை இவைகள் உண்டாகின்றன.

1246. ஞானியும் இச்சையாற் பந்தப்படுகிறான்.

1247. பாரதகண்டத்திலுள்ள வேதசம்மதமான ஷண்மத தெய்வங்களே கடவுளின் கற்பிதமென்று கூறும்போது மற்ற மததெய்வங்களைப் பற்றிக் கூறவேண்டியதொன்றுமில்லை யென்று ஞானமதத்தலைவர் கூறுகிறார்.

1248. பிராம்மணனென்றும் சூத்திரனென்றும் பஞ்சம னென்றும் பெண்ணென்றும் ஆணென்றும் நல்லவனென்றும் கெட் டவனென்றும் அபேதஞானிகள் நினைப்பதில்லை.

1249. எதனாலாவது ஒருவன் முன்னுக்கு வருவானானால் அது மற்றவர்களைப்பாதிக்கிறது.

1250. வேதவேதாந்த சாஸ்திரங்களை அளவு கடந்து கற்று விட்டதனாலும் எண்ணிறந்த தானதர்மங்களைச் செய்ததனாலும் கடுமையான தபசுகளினாலும் மந்திரஜெபங்களினாலும் ஆசாரங்களை அனுஷ்டிப்பதனாலும் யாகாதிகளினாலும் பிரஹ்மத்தை அடைய முடியாது.

1251. ஞானாப்பியாசிகள் வாசனைகளையாவது ரஸங்களையாவது சுகங்களையாவது அனுசரிக்கவுங்கூடாது அதை விடவுங் கூடாது.

1252. தனது சிசுக்களைத் தந்தை அடக்குவது போலப்பலாத்காரமாகச்செல்லுகிற இந்திரியங்களையும் மனத்தையும் ஒருவழிப் படுத்துவது சகல தர்மங்களுக்கும் மேலான தவம்.

1253. எந்த வடிவமும் தன்வடிவம் அல்லது கடவுளின் சொரூபமென்று தெரிந்து கொண்டவனைப் பரமேஸ்வரர் பரீக்ஷை செய்கிறதில்லை.

1254. ஆசையை அடியோடு விட்டு விட்டவன் ஞானயோகத்திற்கு அதிகாரி

1255. ஆசையை விட்டும் விடாதவன் பக்தியோகத்திற்கு அதிகாரி.

1256. ஆசையைக்கொஞ்சமாகிலும் விடாதவன் கர்மயோகத்திற்கு அதிகாரி.

1257. ஜீவேஸ்வர ஜகத்துக்களை வியவகாரதசையில் சத்தியமென்று வேதம் கூறுகிறது.

1258. சித்திரப்பதுமைபோல் அளவிறந்தகாலம் நிஷ்டையிலிருந்து விழித்தவர்களும் பலசந்தேகங்களைத்தெளிந்து கொள்ளுகிறதற்காக உலகத்திற் சஞ்சரிக்கிறார்கள்.

1259. ஈஸ்வரப்பிரசாதம் காசியில்மரணம் குற்றமற்றகருமம் நல்லவமிசஜனனம் நல்லகாலம் இவைகளால் மீளாத முக்திகிடைக்கிறதில்லை.

1260. எல்லாப்பிராணிகளையும் தானாகப்பார்ப்பது சகல தானங்களிலும் மேலானது.

1261. யானையின் காலடியில் மற்றப்பிராணிகளின் காலடிகள் எப்படி அடங்குகிறதோ அப்படி உத்தமமான துறவியின் பதத்தில் இந்திரன் முதலிய தேவர்களின் பதவிகள் அடங்கியிருக்கிறது.

1262. எல்லாச்சங்கல்பங்களையும் தள்ளிவிட்டுச்சித்தத்தைப் புத்தியில் செலுத்திக் காலத்தை ஜெயிக்கவேண்டும்.

1263. தன்னிடத்தில் தன்னைப்பார்க்கிறவனெவனோ அவனே உத்தமசன்னியாசி.

1264. நினைப்பில்லாதவனிடத்தில் மிருத்யுதேவதை செல்லுகிறதில்லை.

1265. சிருங்காரரசம் காமரசம் சோகரசம் ஆனந்தரசம் ரௌத்ரரசம் இவைகளை உண்டாக்குகிற சாஸ்திரங்களை ஞானயோக பக்தியோக இராஜயோக அப்பியாசிகள் படிக்கக்கூடாது.

1266. கருமயோகம் வெகு தூரத்திலிருப்பதையும் பக்தியோகம் சமீபத்திலுள்ள அன்னியவஸ்துவையும் இராஜயோகம் தனக்குள்ளிருக்கிற துவைதத்தையும் அதன் ஜோதியையும். ஞானயோகம் தன்னையும் போதிக்கிறது.

1267. புராணங்கள் ஆரம்பத்தில்மயக்கமும் மத்தியில் தந்திரமும் முடிவில் தெளிவும் உண்டாக்குகின்றன.

1268. தானும் ஒருவரையும் நிந்தியாமலும் பிறர் தன்னையும் நிந்தியாமலுமிருந்துகொள்ளுகிறவன் உத்தம புருஷன்.

1269. சகல வேதங்களாலும் சப்தங்களாலும் பிரமாணங்களாலும் இன்னொருவரைக்கொண்டும் மற்றெவ்வித வெளி உபாயங்களைக்கொண்டும் அறியமுடியாத பரமாத்மாவைத் தன்னுடைய அனுபவத்தினால் யோகிகள் அறிகிறார்கள்.

1270. தர்க்கசாஸ்திரத்தால் கெட்டுப்போன மனமுடையவர்களுக்கு ஆத்மப்பிரஹ்மஞானத்தில் நம்பிக்கையிருப்பதில்லை.

**1271.** எப்போது ஒரு பொருளை விரும்புகிறதோ அப்போது அதுமனமாகிறது.

1272. ஒரே பரமாத்மாவே சகலவடிவமாய் எல்லாக்காரியங்களையும் தானே செய்கிறது.

1273. சுகதுக்கங்களை அடைகிற பிராணிகளைக்கண்டு எவன் இன்பதுன்பங்களை அடைகிறதில்லையோ அவன் திடப்பிரக்ஞன்.

1274. பயனில் விருப்பமின்றிச்செய்யப்படுகின்ற புண்ணிய கர்மாவானது முன்னுள்ள கெட்டகர்மாவையும் நாசஞ்செய்து விடுகிறது.

1275. பத்து இந்திரியங்கள் நான்கு கரணங்கள் இவைகளை அந்தந்தத்துறைகளில் விடாது தடுத்தல் தபஸ்அகப்புறச்சுத்தம் பொறுமை கல்வி அடக்கம் ஆத்மஞானம் இவைகளைக்கொண்டவன் பிராம்மணன்.

1276. ஆத்மஞானத்தையும் அரிய குணங்களையுங் கண்டு தெளியமுடியாமல் சித்தியையும் கல்வியையும் வசனத்தையுங் கண்டு மயங்குகிறவர்கள் அற்பபுத்தியுடையவர்கள்.

1277. ஞானத்தைக் காட்டிலும் கர்மமே பெரியசக்தியுடையதென்று ஜைமினிமஹரிஷி சொல்லுகிறார்.

1278. மனதிற்கு நடுக்கத்தை உண்டுபண்ணக் கூடியவைகளை விலக்கிவிடுவது மந்திரயோகம்.

1279. சரீரம் இந்திரியங்கள் விஷயங்கள் பிராணன்கள் மனம் புத்தி ஜீவன் மூலப்பிரகிருதி பரமாத்மா இவைகள் முறைப்படி மேலானது.

1280. வருணாஸ்ரம தர்மங்களும் பிரஹ்ம ஞானத்திற்குச் சாதனமேயன்றி வேறில்லை.

1281. மோக்ஷ சாதனம் நிறைந்துள்ள நாட்டில் உயிருடனிருப்பதையே புண்ணிய புருஷர்கள் கருதுகிறார்கள். அதற்காக உடம்பையும் விடத்தயாராகவு மிருக்கிறார்கள்;

1282. எவன் கூட்டத்தைக்கண்டால் பாம்பைக் கண்டது போலவும் சன்மானத்தைக்கண்டால் மரணத்தைக் கண்டதுபோல வும் ஸ்திரீகளைக் கண்டால் பிரேதத்தைப் பார்க்கிறதுபோலவும் பார்த்துப் பயப்படுகிருனே அவன் உத்தமமான பிராம்மணனென்று பிரம்மதேவர் கூறுகிருர்.

1283. எந்த விதத்தாலாவது பரமாத்மாவை அறிந்தால் அது உயர்ந்த ஆஸ்ரமம்.

1284. தன்னை யார் நிந்தித்தாலும் தான் நிந்தியாமலிருக்கிற வன் சீக்கிரம் பரம்பொருளை அடைகிருன்.

1285. கடவுளும் கடவுளை உணர்ந்த ஞானிகளும் யாதொரு கட்டுப்பாடுமில்லாதிருக்க முடிகிறது.

1286. எதையாவது உடுத்து எதையாவது உண்டு எங்கேயா வது படுத்து எப்படியாவது இருப்பவனைத் தேவர்கள் பிராம்மண னென்கிருர்கள்.

1287. மனதைப் பிரஹ்மத்திற் கரைத்துப் பழகுவது சமாதி.

1288. ஒருவனுடைய அபவாதத்தையும் ஒருபோதும் கேட் காமலும் சொல்லாமலும் ஒன்றையும் ஆவலுடன் பாராமலுமிருப்ப வன் கர்மசந்நியாசி.

1289. காமிய கர்மசகுணத் தியானமுடையவன் தூமாதி மார்க்கமாகப் பிரம்மலோகம் சென்று திரும்பிவிடுகிருன்.

1290. எவன் பஞ்சபூத ஹம்ஸ ஸ்தூல சரீரமுதல் பரமாத்மா வரை சென்று விடுகிருனே அவன் பிரஹ்மமாகிருன்.

1291. ஒருகால் பரமாத்மாவிடத்துப் பற்றிக் கீழிறங்கிய மனத்தை மறுபடியும் அவ்விடத்திலேயே சேர்த்துப் பழகுவதா லுண்டாவது சகஜநிஷ்டை.

1292. பரமேஸ்வரவடிவ ஜகத்ரக்ஷக ஆக்ஞாரூப பரமகுரு பிரசன்னமானுலொழிய ஜன்ம மரண நாமரூப மனோரூபப் பிராந்தி யொழிகிறதில்லை.

1293. குருவடிவமும் தன்வடிவமும் ஒன்றென்றெண்ணாத சிஷ்யன் குருத்துரோகியாகிறான்.

1294. உண்மையான ஞானப்பியாசிகளுக்குச் சகல தேவர்களும் திக்பாலகர்களும் சகாயஞ் செய்கிறார்கள்.

1295. ஏகாந்தயோகத்தை முடித்தபின்பு எல்லாந் தானாகத் தோற்றும்.

1296. ஞானயோகியானவன் தனக்கு வேண்டியவற்றைப் பேராசையின்றித் தனது உத்தம சங்கல்பத்தினால் தானே சிருஷ்டி பண்ணிக்கொள்ளுகிறான்.

1297. உலகத்திலுள்ள மதங்களெல்லாம் மனோ எண்ணத்துடன் முடிவடைகிறது.

1298. சிஷ்யர்களைத் தேடித்திரியும் குருமார்கள் நரகமடைகிறார்கள்.

1299. கர்மேந்திரியம் ஐந்து ஞானேந்திரியம் ஐந்து அந்தக்கரணம் நான்கு ஆகப்பதினான்கு தத்துவங்களையும் முறையே கடந்து சென்று பரமாத்மாவை அடைந்த அனுபவஞானிகள் உலகத்தில் உடம்போடிருக்கிற காலத்தில் முகமானது சுகதுக்கங்களால் சம்பந்தப்பட்டிருந்தாலும் மனம் சம்பந்தப்படுவதில்லை.

1300. காமாதிவிகாரங்கள் ஞானியின் மனதைச்சுற்றிப்பார்த்துச் செல்வதற்கு இடமின்றி மீண்டும் திரும்பிவிடுகிறது.

1301. சூர்யன்முதல் எந்தத்தேவர்களையும் பரமாத்மாவாகப் பாவித்து உபாசனைசெய்தால் பரமாத்ம உபாஸனையின் பலனை அடையலாம்.

1302. வெளிச்சாதனங்கள் ஞான ஏதுவாக இருந்தாலும் முதலில் ஞானத்தையே மறைத்துக் காட்டுகின்றன.

1303. கெட்டவனைக் கெட்டவனென்று யாரும் சொல்லக்கூடாது நல்லவனை நல்லவனென்று கருமயோகிகள் சொல்லலாம்

இரண்டையும் ஞானயோகிகள் கவனிக்கக்கூடாதென்று கீதாசாரியர் கூறுகிறார்.

1304. பிரஹ்மத்திற்கு ஒரு மதத்தையுங்காணோம். பிரஹ்ம திருஷ்டி உடையவர்களுக்கு எல்லாமதங்களும் ஏகமாகத்தோன்று கின்றது.

1305. கருமயோகமில்லாமல் ஞானயோகமடையமுடியாது. ஞானமின்றிக்கருமஞ்செய்தால் ஜனனமரணங்களுக்கு ஏதுவாகி விடுகின்றன.

1306. புதிதாகக்காண்கிறவன் திடீரென்று வசனத்தைக் கொடுத்துவிடுவானானால் எதார்த்த மல்லாதவனென்று அநேகமாய்க் கண்டு கொள்ளவேண்டும்.

1307. சரீர அங்கங்களால் பக்திபுடையவன் போல நடிக் கிறவனை உடனே நம்பிவிடக்கூடாது.

1308. சக்திபுள்ளவரை மோக்ஷ முயற்சிசெய்கிறவர்களைப் பிரம விஷ்ணு ருத்ரர்கள் பஜிக்கிறார்கள்.

1309. இப்போதிருக்கிற பிரம்மா விஷ்ணு சிவன் இவர்கள் ஆதியில் ஜீவர்களாயிருந்தார்களென்பது ஸ்ருதி.

1310. சர்வ ஜீவர்களுக்கும் கெர்ப்பவாச காலத்தில் பூர்வ ஜென்மாந்தர ஞாபகமும் மோக்ஷ இச்சையும் உண்டாகின்றன.

1311. பிரஹ்ம மீமாம்ஸை என்னப்படுகிற வேதாந்தபிரஹ் மசூத்ரம் ஆதியில் கல்லால் மஹரிஷியால் வெளிவந்தது.

1312. குரு உத்தரவின்றிக்குருவைவிட்டு அகலக்கூடாது.

1313. சர்வசுருதிகளும் சகுணப்பிரஹ்மத்தையுஞ் சொல் லாது. அதீதப்பிரஹ்மத்தினிடத்துஞ் சொல்லாது மத்தியிலுள்ள நிர்க்குணப்பிரஹ்மத்தையே சார்ந்து கூறும்.

1314. நாசியினின்று வெளியேறியபிராணனை உள்ளே விடாது

வெளியிலேயே நிறுத்திவிட மூலாதார சக்தி விழித்துக்கொள்ளு கிறது.

1315. அஞ்ஞானத்தினாலேயே குருசிஷ்ய பேதம் தோன்று கிறது. பெரியவர் சிறியவர் நல்லவர் கெட்டவர் என்ற பேதம் தோற்றுகிறது.

1316. பிரஹ்மஞானமுடையவனிடம் ஜாதிபேதம் பாராமல் உபதேசம் பெறுவதால் தோஷமில்லை.

1317. பிரபஞ்சகர்த்தா இருக்கும்போது பிரபஞ்சக்கவலை கொண்டவன் பேதபுத்தியுடையவன்.

1318. யுகத்தின் தன்மைப்படி வருணாஸ்ரம சங்கிரகமுண் டான காலத்தில் கூட எங்கேயோ ஏகதேசமாக ஒருஞானி தோற்று கிறார்.

1319. குருவைக்காணும்போது மஹாமந்திரஜெபகுருத்தியா னத்துடன் செல்லவேண்டும்.

1320. ஒரு கூட்டத்திலிருக்கும்போது யார்வந்தாலும் அவர் களுடன் பேசக்கூடாது.

1321. பிராம்மண க்ஷத்திரிய வைஸ்ய சூத்ர பிரம்மசர்ய கிருஹஸ்த வானப்பிரஸ்த சன்னியாஸ மென்று சொல்லப்படுகிற வருணாஸ்ரமங்கள் எட்டின் தன்மைகளினின்றும் விலகியிருக்கப் பட்ட ஸ்வாதந்தரிய புருஷர்கள் வெகு சிலரே உலகத்திலிருப்பார்கள் அப்படியிருக்கப்பட்டவர்களுக்கு அதிவருணாஸ்ரமிகள் என்றுபெயர்.

1322. இரத்தசுத்தமில்லாதவன் கோவின் ஜலத்தை அதி காலையில் குடித்துவரவேண்டும்.

1323. குருவினிடம் சிஷ்யன் எப்போதும் இஷ்டம்போல் பேசக்கூடாது, மிதமாகவும் மெதுமாகவும் சாந்தமாகவும் சிஷ்யன் குருவினிடம் பேசவேண்டும்.

1324. குரு அழைத்தவுடன் சிஷ்யன் ஆறடிதூரசமீபத்தில் செல்லவேண்டும், அழையாமல் போகக்கூடாது.

1325. சிஷ்யன் குருவுக்கு நான்கு நுகத்தடி தூரத்தில் வசிக்க வேண்டும்.

1326. சிஷ்யன் எப்போதும் குருவின் வலதுபக்கத்தில் நிற்க வேண்டும்.

1327. உத்தம யோகிகள் சுபாவங்களைக் கவனிக்கிறதில்லை ஒருவரையும் ஸ்துதிக்கிறதும் நமஸ்கரிக்கிறதுமில்லை.

1328. குரு சிசுருஷை செய்கிறவர்கள் குரு புஜிக்காதபோது புஜிக்கக்கூடாது. ஜலபானம் செய்யாதிருக்கும்போது தான் பண்ணக்கூடாது. அவர் உட்கார்ந்திருக்கத் தான் தூங்கலாகாது. இடது பாதத்தை இடதுகையாலும் வலதுபாதத்தை வலதுகையாலும் பிடிக்கவேண்டும் கைகளை நன்றாய்ச் சுத்தம் செய்துகொண்டு அக்கினியை உண்டாக்கிக் கொண்டபின் பாதத்தைத் தொடவேண்டும் முடிந்த சிஷ்யர்களுக்கு இந்த நியமமில்லை.

1329. உலக்கைச் சப்தமின்றியும் புகையை உண்டாக்காததுமான ஆகாரத்தை யோகிகள் விரும்புகிறார்கள்.

1330. தன்னை நிந்திக்கும்போது தனக்கு ஒரு ஔஷதம் கிடைத்ததென்று நினைக்கிறவன் உத்தம சந்நியாசி.

1331. ஆசாரியனில்லாத ஞானம் அமாவாசைச் சந்திரன் போல் பிரகாசிக்கும்.

1332. அரசமரத்தையும் பசுவையும் தரிசனம் செய்வதாலும் பிரதக்ஷணம் வருவதாலும் பாபங்கள் விலகுகிறது.

1333. சங்கல்ப வுதயஸ்தானத்தில் சாந்த புருஷன் ஜ்வலிக்கிறான்.

1334. ஆசை குறையக் குறைய அதிகாரதேவர்கள் ஆனந்தமடைகிறார்கள்.

1335. ஸ்தூல சரீரத்தைச் சுத்தமாகவும் ஆசாரமாகவும் வைத்துக்கொண்டிருப்பவர்கள் சில காலங்களுக்குப்பின் மனச்சுத்

தத்தையும் ஞானசாரத்தையும் அடையவேண்டுமென்றறிந்து கொள்ளுகிறார்கள்.

1336. **தெய்வம் மோக்ஷம் ஈஸ்வரன் வேதம் ஞானி உலகம் சிருஷ்டி குரு சத்கருமங்கள்** இவற்றில் நம்பிக்கை கொள்ளாதவன் ராக்ஷஸன்.

1337. ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு உலகங்களிலும் கரும தேவதையின் ஆக்ஞைப்படி திருஷ்டிக்குப் புலப்படாமல் கரும பலன்களைக் கொடுப்பதற்காகக் கருமாதிஷ்டான தேவதையாகிய யீஸ்வரன் தொடர்ந்து செல்லுகிறான். கால தேவதை எல்லாவற்றையும் சுற்றிக்கொண்டு நிற்கின்றன.

1338. ஒரு விஷயத்திலும் ஒருபோதும் ஒருஇடத்திலும் ஒரு மறைப்பு மில்லாத உத்தம திருஷ்டியையுடைய ஞானிகள் வாழும் நாட்டில் அவருக்குச் சகாய புருஷர்கள் வெகுசிலரே யிருக்கின்றனர்.

1339. சரீரத்தை ஆலயமாகவும் ஆத்மாவை விக்கிரகமாகவும் புத்தியைத் தீபமாகவும் மனதை ஜலமாகவும் சாந்தியைப் புஷ்பமாக வும் கொண்டு அந்தர்முகயோகிகள் பரமாத்மாவைப் பூஜை செய்கிறார்கள்.

1340. உஞ்சவிர்த்தி எடுத்துக்கொண்டு அன்றன்றைக்கு ஜீவிக்கும் பிராம்மணன் உத்தமோத்தமன், ஒருநாள் ஆகாரத்திற்கு மீதம் வைத்துக்கொள்பவன் உத்தமன், ஒருகுடம் தான்யமுடையவன் மத்திமன், குதிரில் தான்ய முடையவன் அதமன், நிறைந்த தான்யங்களையும் செல்வங்களையும் உடையவன் அதமாதமன், இவ்வாறாக கிரேதா திரேதா துவாபர யுககாலங்களில் நடைபெற்றிருக்கின்றன.

1341. கருமங்களை விடுவதும் செய்வதுமான சமித்துக்களை ஞானக்னியினால் ஹோமம் செய்து விடுகிறவன் யாதொரு புண்ணிய கருமமும் செய்யவேண்டியதில்லை.

1342. அதிகார அவதாரபுருஷர்கள் அடிக்கடி புவியிற் ஜனித்துக் கொண்டேயிருக்கிறார்கள்.

1343. தற்போதும் பிரபல அவதாரபுருஷர்கள் அடிக்கடி யின்றி ஜனித்து அவ்வவ்விடங்களில் ரகஸ்யமாகத்தங்கிக் காலத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

1344. சக்தியின் குண்டலி வசமாகாத யோகியைக் கூர்ம நாடி பற்றுகிறது.

1345. பிரம்மலோகம் பிதுர்லோகம் ஸ்வர்க்கலோகம் சந்திர லோகம் சூர்யலோகம் இவைகளிலிருந்து முடிவாகித்தள்ளப்பட்டுப் பூமியில் வருபவர்கள் இடையில் பஞ்சபூதமண்டலத்தின் ஆகார மண்டலத்தில் சில காலம் தங்கிவருகிறார்கள்.

1346. கொக்கானது ரேதஸ் இல்லாமல் கெர்ப்பந்தரிக்கிறது போல யாதொரு காரணமுமில்லாமல் அதிகார அவதார புருஷர்கள் உலகத்தில் தங்குகிறார்கள்.

1347. சன்னியாசி யானவன் தனக்குவேண்டியகாரியங்களை ஒருவருடைய சகாயமுமின்றித்தானே செய்து கொள்ளவேண்டும்.

1348. எவன் மனதில் நிந்தையும் ஸ்துதியும் ஏறவில்லையோ அவன் உத்தம சன்னியாசி.

1349. ஓடு மரத்தடி கந்தை பிக்ஷை தனித்திருத்தல் எல்லாப் பிராணிகளிடத்திலும் உபேக்ஷை இவைகள் ஓர்வித சன்னியாசிக்குரிய லக்ஷணம்.

1350. நகம் வளர்த்துக்கொண்டும் டம்பமாகக்கர்மாவைச் செய்துகொண்டும் பேராசையால் சத்காரியங்களை இயற்றிக்கொண்டுமிருக்கிற பிராம்மணாதி நான்கு வருணத்தார்கள் அதிகமான பாபத்தை அடைகிறார்கள்.

1351. சம்ஸாரத்தின் கரையைக்கண்டயதிகள் கர்மத்தைச் செய்யவும் விடவும் மாட்டார்கள்.

1352. உபாத்தியாயன் ஆசாரியன் அம்மான் அதிதி தன்னை அடுத்தவன் பிராயமுதிர்ந்தவன் இளைஞன் ரோகி வைத்தியன் ஞானி பந்து சம்பந்தி மாதா பிதா புத்திரி வேலைக்காரர்கள் சமமான

கோத்திரத்தில் பிறந்தவன். பெண்கள் சகோதரன் புத்திரன் மனைவி இவர்களுடன் உத்தமமான புருஷர்கள் கலகஞ்செய்து கொள்ளக் கூடாது கலகமின்றி இவர்களை ஜெயிக்கப்பட்டவர்கள் உத்தமமான புண்ணியலோகங்களை அடைகிறார்கள்.

1353. நவக்கிரகம் இராகுகாலம் குளிகைகாலம் யோகினி இருத்தை சூலம் திக்தேவர்கள் மற்றத்தேவர்கள் இவர்களை ஞானமின்றி அலக்ஷியம் செய்யக்கூடாது.

1354. எவ்வனப்பருவமுடைய அழகிய பெண்களின் ஸ்தூல சரீர காந்தியின் மயக்கத்தால் ஸ்திரீகளை அடைகிற புருஷர்களும் ஆத்மாவை நோக்கியே செல்லுகிறார்களென்று பிரஹஸ்பதிபகவான் சொல்லியிருந்தாலும் அஞ்ஞானத்தையடைந்து அதனுதவியால் ஞானத்தை யடைகிறது போலவும், பிராணயாமம் செய்பவன் உருளைக்கிழங்கு வெண்காயம் மாம்ஸம் இவைகளினுதவியை நாடுவது போலவும் இருக்கிறது பிரஹஸ்பதி கூறியதென்று தத்தாத்திரேய மஹரிஷி சொல்லுகிறார்.

1355. விசேஷமான பெரிய நதியில் ஸ்நானம் செய்தவன் கிணற்றைச் சிலாகிக்காததுபோல, ஞானியானவன் கர்மத்தைச் சிலாகிப்பதில்லை.

1356. கர்மத்தை விட்டுவிடச் சொல்லுகிற சாஸ்திரம் அசாஸ்திரம் ஆசாரியர் அனாசாரியர்.

1357. உதாரணமான மனதோடும் தெளிந்த அறிவுடனும் உதாரபுத்தியோடுங் கூடி நியாயமான புண்ணியகருமங்களைச் செய்து அதன் பிரயோஜனத்தை எம்பெருமானுக்கு அர்ப்பணம் செய்து வருவதால் சித்தசுத்தியும் அதனால் பிரஹ்மஞானமும் உண்டாகின்றன.

1358. நிவிர்த்தி மார்க்கத்தை அடையவும் அடைந்து கொண்டுமிருப்பவர்கள் விடுகிறகருமங்களில் சந்தோஷமடைகிறார்கள்.

1359. தனக்குள்ளிருக்கிறதான தேவதையைக் காணமல்

வெளியில் உலாவிக் காணப்போகிறவன் கையிலுள்ள லட்டை எறிந்து விட்டுப் புறங்கையை நக்குகிறவனைப்போன்றவனாகிறான்.

1360. யோகநிலையை அடைந்த புருஷனை ஞானநிலையை அடையவிடாமல் பலசித்திகள் பிரபலமாக தடைசெய்து கொண்டிருக்கின்றன.

1361. நிருவிகல்பஸமாதி அடைந்தவனது உடல் அதிக தேஜஸாகத்தோற்றும்.

1362. யோகிக்குத் துவைதானந்த அனுபவமும் ஞானிக்கு அபேதானந்த அனுபவமும் விளங்கி நிற்கிறது.

1363. ஜனகாதி மஹரிஷிகள் நிவிர்த்தி ஞான மார்க்கத்தையும், நரநாராயணமஹரிஷிகள் அனுஷ்டான தபோமார்க்கத்தையும், க்ஷீராப்திசயனமூர்த்தி யோகநிஷ்டாமார்க்கத்தையும் வசிஷ்டர் நனவிற் சுழுப்திமார்க்கத்தையும், தக்ஷிணாமூர்த்தி மவுனமார்க்கத்தையும், பிரம்மதேவர் யுத்த்தந்திரமார்க்கத்தையும், பதஞ்சலி முனிவர் இராஜ யோகமார்க்கத்தையும், அகஸ்தியர் சித்திமார்க்கத்தையும், பிருகுரிஷி சிருஷ்டிமார்க்கத்தையும், ஸ்ரீராகவர் தைரியமார்க்கத்தையும், ஸ்ரீ கிருஷ்ணர் தந்திரமார்க்கத்தையும், தத்தாத்திரேயர் சகஜமார்க்கத்தையும், சிரகாரி தீர்க்கமார்க்கத்தையும், மநு அக்கிரமமார்க்கத்தையும், பிரஹஸ்பதி வசனமார்க்கத்தையும், ஜைமினிமஹரிஷி கருமமார்க்கத்தையும், காஸ்யபர் காமமார்க்கத்தையும், சுப்ரமண்யர் பிரணவ மார்க்கத்தையும், விஸ்வாமித்திரர் பிரயத்தன மார்க்கத்தையும், கணேஸ்வரர் சாந்தமார்க்கத்தையும், கிருஷ்ணத்வைபாயனர் வேத மார்க்கத்தையும், அத்திரிமஹரிஷி ரேதஸ்மார்க்கத்தையும், நாரதர் பக்திமார்க்கத்தையும், காலவரிஷி மனோமார்க்கத்தையும், சூர்ய பகவான் ஜோதிஷ்மார்க்கத்தையும், நந்திதேவர் நாதமார்க்கத்தையும், விஸ்வாவஸுரிஷி போக மார்க்கத்தையும், போதாயனர் பேதமார்க்கத்தையும் காகபுஜண்டர் கதிமார்க்கத்தையும், ருத்ரபகவான் ஆயுதமார்க்கத்தையும், வாலகில்லியர்கள் முக்திமார்க்கத்தையும், ஸ்வாயம்புமனு தர்ம மார்க்கத்தையும், பிருதுசக்கிரவர்த்தி ராஜ்ய மார்க்கத்தையும், ஸ்வேதகேது தத்துவமார்க்கத்தையும், சூடாலை

அதீதமார்க்கத்தையும், சனிபகவான் சலனமார்க்கத்தையும், தேவேந்திரன் நடனமார்க்கத்தையும், புலஸ்தியர் பிரஸ்ன மார்க்கத்தையும், சுந்தரானந்தர் தண்டமார்க்கத்தையும், சுகப்பிரஹ்மரிஷி அபேத மார்க்கத்தையும், ஜாமதக்னியர் பௌருஷ மார்க்கத்தையும், பாஞ்சாலி வீர்யமார்க்கத்தையும், ஜடகோபர் அப்ராகிருதமார்க்கத்தையும், விரோசனன் நாஸ்திகமார்க்கத்தையும், ஜனகமஹாராஜன் அந்தர்முக பகிர்முகமார்க்கத்தையும், சீதாதேவி சிந்தனுமார்க்கத்தையும், முதல் முதலில் உலகத்திற்கு வெளியிட்டிருக்கிறார்கள்.

1364. யோகியும் ஞானியும் அறிந்த வஸ்து ஒன்றாயிருந்த போதிலும் சங்கல்ப பேதத்தால் வேறுபடுகிறதுபோலத் தோன்றுகிறது.

1365. மனது பரிசுத்தமடையும்போது சகலசாஸ்திரங்களின் தாத்பரியங்களும் தானே உதயமாகிறது.

1366. உலக சிருஷ்டியின் உண்மையைத் தெரிந்து கொண்டவன் உண்பதுகூட வேடிக்கையாக இருக்கும்.

1367. கர்மத்தின் ரகஸ்யத்தையும் வேறுபாட்டையும் கண்டு பிடிக்க முடியாமலிருக்கிறது.

1368. ஆகாரம் உடை ஆபரணம் வசனம் எண்ணம் இவைகளை அளவுக்குமீறி அனுபவிக்கிற ஜனங்கள் க்ஷீணித்து விடுகிறார்கள்.

1369. பிரஹ்மத்தை அறிவதற்கு மஹாவிஷ்ணு க்ஷீராப்தியில் யோக நித்திரை புரிகிறார்.

1370. ஏக காலத்தில் ஐந்து இந்திரியங்களையும் அடக்காமல் ஓர் இந்திரியத்தைத் திறந்துவைத்தால் மனமானது அதன்வழி ஓட ஆரம்பித்துவிடும்.

1371. மனமும் ஐந்து இந்திரியங்களும் எப்போது ஒன்று சேர்ந்து புத்தியில் லயித்தும் கலக்காமலிருக்கிறதோ அப்போது மஹத்தத்துவம் பிரகாசிக்கிறது.

1372. ஆறுமாதகாலம் கடுமையான விரதத்துடன் உத்தம யோகத்தை ஆதரித்துவந்தால் ஆத்மாவை அடையலாம்.

1373. ரேசக பூரக கும்பக சொரூபமான பிராணாயாமத்தைப் பிரணவ சப்தத்துடன் ஒருமாத்திரைகாலம் நிபமப்படி அனுஷ்டித்து வந்தால் பிராணசலனம் நின்றுவிடுகிறது.

1374. தன் ஆத்மாவினிடத்தில் தானே லோபமில்லாதவன் தத்துவஞானியாகிறான்.

1375. ஞானயோக அப்பியாசிகள் தேவாலயம் சூன்யமான அறை மலைக்குகை அடர்ந்த சோலை வெட்டவெளிப்பாறை ஒன்றுமில்லாத வீடு இவைகளை இடமாகக்கொள்ளவேண்டும்.

1376. வாக்கு மனம் செய்கை இவைகளால் ஒரு வஸ்துவிலும் யோகிபற்றுவைக்கக் கூடாது.

1377. யோகாப்பியாச காலத்தில் லயம் விக்ஷேபம் கலக்கம் நல்லவாசனையின் இழுப்பு கேள்வியில் இச்சை பார்வை ரஸம் ஸ்பரிசம் சீதம் உஷ்ணம் ஆகாசகமனம் சகல சாஸ்திர உண்மைகளு ் தானே உதித்தல் திவ்யமான ஸ்திரீகள் வலுவில் வருதல் சங்கமம் இவைகளிலெல்லாம் ஆச்சரியம் இவைகளுண்டாகும் யோகியானவன் இவற்றை விலக்கிவிடவேண்டும்.

1378. பருவதசிகரம் கோபுரம் விருக்ஷத்தின் உச்சி இவைகளிலிருந்து யோகம் செய்பவேண்டும்.

1379. யோகியானவன் மனத்தை எந்த எந்த உபாயத்தினால் அடக்கமுடியுமோ அந்த அந்த உபாயங்களினாலும் அடக்க முயலவேண்டும்.

1380. யோகி எல்லாவற்றிலும் உதாசினனாயிருந்து கொள்ளவேண்டும்.

1381. நீசனும் ஸ்திரீயுங்கூட யோகாப்பியாசம் செய்யலாம்.

1382. யோகமார்க்கத்தைப்பற்றி ஆதியில் பகவானாகிய ஆதிசேஷனும், மத்திய காலத்தில் அம்ஸாவதாரமான இடபமஹாராஜனும், கடைசியில் மஹாத்மாவாகிய பதஞ்சலிமஹரிஷியும், சந்தேகமறக் கூறியிருப்பதுபோல வேறுயாருங் கூறவில்லை.

1383. பிரஜா சிருஷ்டியைக் குறித்துக்கூடப் பெண்களின் சேர்க்கையை விரும்பாத தீரர்கள் பரத நாட்டிலிருக்கிறார்கள்.

1384. ஓர்தரம் ஸ்திரீசேர்க்கையால் மூன்றுமாத ஆகாரத்தின் பலமுள்ள தேஜஸும் ஆறுமாத சரீரபலமும் அவாந்தர தேஜஸும் வெளியிற் சென்றுவிடுகின்றன.

1385. பிரஹ்மவஸ்துவை உணருவதற்குப் பரமசிவன் கல்லால் விருக்ஷத்தினடியில் கற்பகோடிகாலம் கண்மூடி இருந்து விட்டார்.

1386. இதற்கு முன்னுள்ளக வியுக காலங்களில் பாபஞ்செய்துவந்த ஜீவர்களெல்லாம் இந்தக் கலியுகத்தில் மீண்டும் பிறந்திருக்கிறார்கள்.

1387. பிரஹ்மவஸ்துவை பஞ்சமூர்த்திகள் ஜெகதீஸ்வரன் முதல் யாவரும் இன்னபடியென்று பேசவா நினைக்கவா முடியாது.

1388. சாமான்ய புருஷர்களுக்குச் சகுணத்தியானமும் சாஸ்திரார்த்தங்களும் புண்ணிய கர்மங்களுமே ஆதாரம்.

1389. எவன் மனது மூன்றாசைகளிலும் பூரணமாய் மூண்டு செல்லுகிறதில்லையோ அவன் யாதொரு புண்ணியகருமங்களும் செய்யவேண்டியதில்லை.

1390. பிராக்ஞனைத் தாண்டிப் பிரத்யகாத்மாவிடத்திற்குச் செல்லும்போது பூர்வ ஜென்மாந்தர ஞாபகமுண்டாகிறது.

1391. ஞானமருந்து சாப்பிடுபவர்கள் பிரபஞ்ச உப்பைத் தள்ள வேண்டும்.

1392. எவன் மனது முயற்சியின்றி ஆத்மாவை நாடுகிறதோ அவனுக்கு யாதொரு நிபந்தனையும் யாராலும் கிடையாது.

1393. புத்திசாலியான தைரியமுள்ள புருஷன் ஞானயோக மார்க்கத்தினிடையில் வரக்கூடிய பூர்வஜென்மஞாபகம் பிரபலசித்திகள் தேவதரிசனம் வரங்கள் இவைகளைத் தாண்டிச்செல்கிறான்.

1394. அசுபமும் துன்பத்திற்குக் காரணமும் மனதை வருத்துகிறதுமான வசனங்களை யாரிடமும் பேசக்கூடாது.

1395. ஸ்திரீமுதலிய உலகபோகங்களை அனுபவித்து விலக்கினலன்றிப் போகமாட்டாதென்று வல்லபாசாரியர் கூறுவது சுருதி யுக்திஅனுபவம் மூன்றுக்கும் பொருந்தவில்லை.

1396. புத்தியின் விசாரணையால் நித்திரையையும், தைரியத்தால் ஆண்குறியையும், நேத்திரத்தால் கைகால்களையும் செய்கைகளால்மனத்தையும் வாக்கையும்,ஜாக்ரதையால் பயத்தையும்,மஹான்கள் பணிவிடையால் கோபத்தையும், மனோநிக்ரகத்தால் குரோதத்தையும், உத்வேகத்தால் உதரத்தையும், நிராசையால் லோபகுணத்தையும், தீரபுத்தியுடன் ஜெயிக்கவேண்டும்.

1397. புத்தி மனம் இந்திரியங்கள் இவைகள் யாதொரு பிரவிருத்தியுமற்று ஒன்றுயிருக்குங்காலத்தில் ஞானசொரூப சைதன்யம் பிரகாசிக்கிறது.

1398. எவரெவர் மனோபாவனை எப்படியெப்படி பேதத்துடன் நிற்கிறதோ அப்படியப்படியே விகல்பத்துடன் சிவ விஷ்ணுவாதி வடிவங்கள் தோற்றுகின்றன.

1399. ஞானப்பியாசிகள் மந்திரஜெபம் பிராணயாமம் யந்திர பூஜை செய்யக்கூடாது.

1400. மனோபாவனை முதிர்ந்தகாலத்தில் பாவனைதெய்வங்கள் பிரசன்னமாகிறது.

1401. ஜாதி குலம் நன்மை ஆசாரம் மதம் பிறப்பு மரணம் இவைகளை விட்டுவிட்டவன் ஞானலக்ஷ்மியை அடைகிறான்.

1402. உண்மைஞானம் உதயமாகுமுன் பொய்ஞானம் மெய் போலஉதிக்கும்.

1403. உத்தமமான பிரம்மசரியத்துடன் வேதத்தை முழுவதும் தபசோடு கூடிநின்று அத்தியயனம் செய்து அதன் அர்த்தங்களை உள்ளபடி அறிந்துகொண்டு மோக்ஷமார்க்கத்தை நோக்கிச் செல்வது சிரேஷ்டமானது.

1404. ஒன்றிலும் ஆச்சரியப்படாதவன் உத்தமன்.

1405. இரகஸ்ய சாஸ்திரங்களையும் ஞானிகளின் செய்கைகளையுங்கண்டு ஆரம்ப அப்பியாசிகள் ஆச்சரியப்படுகிறார்கள்.

1406. சப்தப்பிரம்மமான வேதத்தை முதலாவது நன்றாகத் தெரிந்துகொண்டபின் பரப்பிரஹ்மத்தைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

1407. மனோவேகமாய் நடந்து ஆயிரம் வருஷங்கள் வரை உலகங்களைச் சுற்றிப்பார்த்தாலும் ஆத்மாவை அறிய முடியாது.

1408. ஞானிகள் சென்ற மார்க்கத்தை அறியமுடியாமல் சகல தேவர்களும் மயக்கமடைகிறார்கள்.

1409. ஞானசம்பந்தமில்லாத தனிக்கர்மத்தையே ஜைனர்கள் அங்கீகரிக்கிறார்கள்.

1410. தனக்குண்டாயிருக்கிற ஞானதையம்போல எல்லோருக்கும் உண்டாயிருக்கிறதாக அப்பியாசி நினைத்துக் கொள்ளுகிறான்.

1411. உத்தமமான பிராம்மணனிடத்திலும் சக்கிரவர்த்தியினிடத்திலும் நாயினிடத்திலும் நாயைச் சாப்பிடுகிற நீசனிடத்திலும் ஸ்திரீயினிடத்திலும் புழுவினிடத்திலும் ஞானிகள் ஒரே பரமாத்மாவைப்பார்க்கிறார்கள்.

1412. தம் தம் சரீரங்களுக்குள் சர்வாந்தரியாமியைப் பார்ப்பவருக்கும் சரீரத்தை விட்டுவிட்டுப் பார்ப்பவர்களுக்கும் சிறிது பேதமுண்டு.

1413. இந்திரியங்களையும் அதன் விஷயங்களையும் மனமானது தானே சிருஷ்டித்தும் சம்ஹரித்தும் விடுகிறது.

1411. வீணாக நாவைப்பேசச் செய்வதால் வாக்தேவியான சரஸ்வதியின் சாபமுண்டாகிறது.

1412. வித்தை தவம் பஞ்சேந்திரிய அடக்கம் லோபத்தை விடுதல் இவைகளில்லாமல் ஒருவனும் ஞான சித்தியைப்பெற முடியாது.

1416. பரவாசுதேவருடைய இரண்டு ரோமத்தின் சக்தியானது ஸ்ரீ கிருஷ்ணனாகவும் பலராமனாகவும் அவதரித்தன.

1417. வேதமுதலிய எந்தவித்தைகளைக்கற்றவனும் அகங்காரமடைந்தால் கற்றபலன்களை இழந்துவிடுகிறான்.

1418. துவாபரயுகத்திலேயே வேதங்கள் சிதறிப்போய்விட்டன கலியுகத்தில் சில இடங்களில் மட்டுங்காணப்படுகின்றன.

1419. பிரஹ்மஞானத்தால் எல்லாப் பிராணிகளிடத்திலும் அன்பைச் செலுத்தியவனும் எல்லாரிடத்திலும் தானேயிருப்பவனாகக் கண்டவனும் உண்மையான பிராமணன்.

1420. சாங்கியம் யோகம் சைவம் வைஷ்ணவம் காணபத்தியம் கௌமாரம் சாக்தேயம் காபாலிகம் என்ற இம்மதங்களும் காலாந்தரத்தில் பரம புருஷனை அடைகின்றன.

1421. ஆத்மவுணர்ச்சியின்றிச் செய்யப்படுகிற கர்மங்கள் பிரயோஜனமான சித்தியைக் கொடுப்பதில்லை.

1422. பலாத்காரமாக நித்திரையையும் ஆகாரத்தையும் நிறுத்தக்கூடாது.

1423. வைத்தியம் ஜோதிடம் சங்கீதம் பரதநாட்டியம் விகடம் உத்ஸவம் தந்திரமந்திர சாஸ்திரம் யோகக்ஷவிரோதமான நூல்கள் இவைகளை ஞானயோகி அப்பியாசிக்கக்கூடாது.

1424. பெண்களையும் திரவ்யங்களையுங்கண்டு நடுநடுங்குகிற உத்தம பக்தனை ரிஷிகளும் தேவர்களுங்கண்டு ஆச்சரியப்படுகிறார்கள்.

1425. நித்திரைவருகிற இடத்தைக்கண்டு பிடித்தால் நித்திரையையும் அந்தர்முக ஆகாரத்தை விருத்திசெய்துகொள்வதால் பகிர்முக ஆகாரத்தையும் விட்டுவிடலாம்.

1426. மனதிற்கு மயக்கத்தைக்கொடுக்கக்கூடியது எதுவாயிருந்தாலும் விலக்கிவிடவேண்டும்.

1427. தான் செய்தபாபத்தை மறையாமல் வெளியிடவேண்டும் புண்ணியத்தையும் தர்மத்தையும் வெளியிடக்கூடாது.

1428. தகுக்குமூத்தவர்களின் பெயரைச் சொல்லியும் நீ என்னும் பதத்தை உபயோகிக்கவும் கூடாது.

1429. புத்திரர்கள் மனைவி சகோதரி புத்திரி இவர்களுடன் படுக்கை போஜனம் இவைகள் செய்யக்கூடாது.

1430. சூரியனுக்கு எதிர்முகமாக மலஜலம் விடக்கூடாது. தன்னுடைய மலத்தைப்பார்க்கலாகாது.

1431. காலை மாலைகளில் ஆகாரம் உண்டு இடையில் ஒன்று மில்லாதிருப்பவன் உபவாஸபுண்ணியத்தைப் பெறுகிறான்.

1432. காலையில் உதிக்கிற சூரியனையும் அன்னியஸ்திரீகளையும் ஆடையில்லாத பெண்களையும் பார்க்கலாகாது.

1433. ஹிமோத்பருவதத்திற்கு உத்தரபாகத்தில் மனுஷர்கள் போகமுடியாத ஒருசிறியலோகமிருக்கிறது அங்குள்ள ஜனங்கள் மஹாபரிசுத்தர்களும் பாபச்செய்கையில்லாதவர்களும் யாதொரு உபத்திரவமுமில்லாதவர்களாயிருக்கிறார்கள். அவ்வுலகத்தில் எவ்வித மிருத்யுவும் உண்டாகிறதில்லை. ஒருவரையும் வியாதி தொடுகிறதில்லை. ஒருவருக்கும் ஆசையுண்டாகிறதில்லை. சந்தேகமுண்டாவதில்லை. பரதாரங்களில் ஒருவருக்கும் ஆசையுண்டாகிறதில்லை. இந்த லோகத்தில் புண்ணியஞ் செய்கிறவர்கள் அந்தலோகத்தில் பிறக்கிறார்கள்.

1434. பிரஹ்மமே ஜீவனேன்பது சமுத்திரமே உப்பேன்பது.

1435. எதார்த்தவாதிகள் மனதைப் பிரம்மரந்திரத்திற் சேர்த்துத்துரியானுபவத்திற்றங்கிச் சரீர சிரமந்தீர அவ்விடத்தில் தூங்குவார்கள்.

1436. இந்திரியங்களையும் மனத்தையும் மீறவிடாதிருப்பது அடக்கமேயன்றி வாய்பேசாதிருப்பதில்லை.

1437. சமாதியில் நன்றாக நிலைபெற்றவன் மந்திரஜெபத்தை விட்டுவிடவேண்டும்.

1438. தர்மத்திற்கு மூலம் வேதம் வேதத்திற்குமூலம் பரமாத்மா

1439. எந்தவிஷயத்திலும் மேல் நிலை அறியப்பட்டபின் அதற்குக் கீழுள்ள நிலைமைகளை விட்டுவிடவேண்டும்.

1440. அவமதிப்புடனும் சந்தோஷமில்லாமலும் பிரியமின்றியும் ஜெபம் செய்கிறவன் நரகத்தை அடைகிறான்.

1441. அணிமாமுதலிய அஷ்டமாசித்திகளைக் கூடவிரும்பாமல் மோக்ஷத்தை உத்தேசித்து மந்திரஜெபம் செய்யவேண்டும்.

1442. வியாதி மனதிற்கு ஒன்றுந்தோற்றாதிருத்தல் சந்தேகம் அஜாக்ரதை சோம்பல் ஆசை பிராந்தி சமாதி அடையாதிருத்தல் அடைந்த சமாதியில் உறுதியில்லாமை இந்த ஒன்பதும் தியானத்திற்கும் யோகத்திற்கும் விரோதிகள்.

1443. புண்ணிய பாபங்களின் பயனைக்கொடுக்கக்கூடிய தேவதையாகிய யமனையும் ஆயுளின் கணக்கை அளவிடுந்தேவதையாகிய காலனையும் தேகத்திலிருக்கும் பிராணவாயுவைப்பிரிக்கிற தேவதையாகிய மிருத்யுவையும் பாபபுண்ணியங்களின் அளவைத் தெரிவிக்கக்கூடிய தேவதையாகிய நவக்கிரகங்களையும் ஜெபயோகிகள் அதிக்கிரமித்து விடுகிறார்கள்.

1444. ஞானயோகிகள் ஜெபம் பிராணாயாமம் இவைகளை விட்டுவிடவேண்டும்.

1445. நம்மைக்கண்டு தேடிவருகிற வெளியிலுள்ள விஷயங்களைக்கண்டு நமஸ்கரித்து விலகவேண்டும்.

1446. அறம் பொருள் இன்பம் வீடு என்னும் புருஷார்த்தங்களுள் பொருளில் மட்டும் பற்றுதலாயிருப்பவன் அந்தப் புருஷார்த்தங்களின் உண்மையை அறிந்த பின்னும் பொருளிலேயே சுற்றிக்கொண்டிருக்கிறான்.

1447. தனக்கு இஷ்டமான வஸ்துவைத் தியானம் செய்வதும் சமாதியை அடைவதற்கு ஓர்வித உபாயம்.

1448. பிரபஞ்ச வஸ்துக்கள் பேராசையால் அடையப்படுவாரின் உண்மையான போகங்கள் உண்டாகிறதில்லை.

1449. உண்மை ஞானம் வந்தவன் உலகப்பற்றை விடவேண்டியதில்லை.

1450. உலகம் எப்போதும் பொய்யாயிருக்கவில்லை.

1451. மரணமில்லாத சரீரமுடைய தேவர்கள் அவர்களது பதவிகள் சுதந்தர விமானங்கள் நாநாவித உத்தியானவனங்கள் தெளிவான நிறமுடைய ஒருகோடி அன்னங்களும் நூறுகோடி தாமரை மலர்களும் நூறுயோஜனை உயரமும் நூறுயோஜனை விஸ்தாரமுமான மண்டபம் ஆறுகோடி நித்தியபிரம்மசாரிகளும் நிறைந்துள்ள அரமாண்டலீ தடாகமும் திக்பாலகர்கள் பிரஹஸ்பதி சுக்கிரன் துருவன் மருத்துக்கள் அஸ்வினீதேவர்கள் சூரிய சந்திரர்கள் ருத்ரர்கள் சப்தரிஷிகள் பிதுர்தேவதைகள் சதுர்முகன் விஷ்ணு சிவன் இவர்களின் ஸ்தானங்களெல்லாம் பரமாத்மஸ்தானத்தை உத்தேசிக்கையில் நரகங்களென்று சொல்லவேண்டும்.

1452. பிரகிருதியையும் அதன்காரியங்களையும் அறுத்துவிட்டவன் நிஷ்டைபழகவேண்டியதில்லை.

1453. சத்தான மந்திரங்களை ஜெபித்து அசத்தான பலன்களைக் கருதுவது மஹாபாபம்.

1454. வேதசம்பந்தமாய்ப் பிரணவத்தோடு உண்மையுடன் மஹாமந்திரங்களை ஜெபித்துவருகிற மஹாத்மாவுக்குப் பரமாத்மஸ்தானம் சொந்தமாகிறது.

1455. ஹிமயமலையின் உத்தரபாகமும் சந்திரமண்டலத்தின் பின்புறமும் மனிதர்களால் காணமுடியாதது.

1456. வருணாஸ்ரம தர்மங்கள் பாமரர்களின் சித்தத்தெளிவுக்கு ஏது.

1457. பரமாத்மாவை அறியும்போது வேதமும் மனமும் நசித்து விடுகின்றன. சூக்ஷ்மமாய் விடுகின்றன.

1458. இந்திரியங்கள் லயமடைந்திருக்கும்போது எது நன்ருக நினைக்கிறதோ அது ஆத்மா.

1459. மரத்திலுள்ள அக்கினி கோடரிகொண்டு மரத்தை வெட்டுவதால் பிரசன்னமாகாமல் கடைவதால் எப்படிப்பார்க்கப்படுகிறதோ அதுபோல, வயிற்றையும் கையையும் காலையும் வெட்டுவதாலும் பட்டினி கிடப்பதாலும் பரமாத்மா காணப்படுவதில்லை. பலவித ஞான யோகங்களினுல் மனத்தைக் கடைந்தால் தரிசிக்கலாம்.

1460. தெய்வாம்ஸமுள்ள மனத்தையும் இந்திரியங்களையும் பரமாத்ம சொரூபத்தை நோக்கிச் செலுத்துவதைவிட்டு விஷயங்களில் செல்லவைப்பது மஹாபாபம்.

1461. எந்தெந்த இந்திரியங்களால் பாபபுண்ணியங்கள் செய்யப்படுகின்றனவோ அந்தந்த இந்திரியங்கள் அதனதன் பலனை அனுபவிக்கின்றன.

1462. கர்மோபாசனைகளால் அடையத்தக்கபதவிகள் காலாந்தரத்திற் காணுமற் போய்விடுகிறது.

1463. வேதாகமங்களில் கூறிய கர்மமார்க்கங்கள் ஆசையுள்ளவனைப் பின்பற்றுகின்றன.

1464. உறுதியில்லாத உடம்பைவிட்டு உறுதியுள்ள உடம்பைக் கண்டுகொள்வது உசிதயோகம்.

1465. தகராகாசம் சிதாகாசம் என்று வேதம் சொல்லிய வஸ்து துரியாத்மா.

1466. கர்மோபாஸனைகளில் அதிகாரமுடையவர்கள் இராஜச சத்துவ குணமுடையவர்கள்.

1467. இஷ்டத்தை அடையவும் இஷ்டமல்லாததை விலக்கவும் கருமயோக சாஸ்திரம் கூறுகிறது. இஷ்டம் அனிஷ்டம் இரண்டையும் விலக்கும்படி ஞானயோக சாஸ்திரம் சொல்லுகிறது.

1468. பகிரங்கப்பிராணுயாமமுதிர்ச்சியால் மூலாதார குண்டலிசக்தி எழுந்து சுழுமுனைவரை எட்டி முட்டிக் கீழிறங்கிவர வழி

தெரியாமல் தத்தளிக்கிறவனது உடல் இரவில் பார்ப்பவர்களுக்கு ஒன்பது பாகமாகத்தோற்றும் அவன் நவகண்டயோகி.

1469. எது எது எவனுக்குப்பிரியமாய்த்தோற்றுகிறதோ அது அதிலிருந்து அவனுக்குச் சுகமுண்டாகிறது.

1470. மந்திரஜெபங்களால் மனத்தை ஸ்திரப்படுத்திக்கொண்டு பிரஹ்மத்தியானஞ்செய்யவேண்டும்.

1471. ஞானப்பியாஸ ஆரம்பகாலங்களில் பயங்கரமும் மயக்கமுமான தோற்றங்களுண்டாகின்றன.

1472. வழியில் வந்த எந்த வஸ்துவையும் தள்ளிவிடுவது திடஞானிக்கு அழகு.

1473. குருவின் அந்தரங்கவடிவம் தானாகிறபோது தானும் குருவாகிறான்.

1474. யாதொருபலனையுங்கருதாமல் செய்யப்படுகிற ஜெபசக்தியானது பிரம்மலோகத்தில் சேர்த்துவிடுகிறது.

1475. ஸ்மிருதியின் அனுஷ்டானப்படியிருக்கிறவனும் யோகங்களில் பற்றுதலுள்ளவனும் சத்தியலோகத்தை அடைகிறான்.

1476. பிரவிர்த்தி நிவிர்த்தி என்ற இரண்டுமார்க்கங்களிலும் செல்லக்கூடிய பிராம்மணர்கள் பரதகண்டத்தில் இருக்கிறார்கள்.

1477. வேதங்களையும் அதன் விசேஷ அர்த்தங்களையும் சந்தஸ்ரிஷி அதிதேவதை முதலானவைகளையும் நிருக்தம் வியாகரணம் தர்க்கம் கல்பம் சிக்ஷை ஜோதிஷம் வேதசம்மதமான பல சாஸ்திரங்கள் நக்ஷத்திரவித்தைகள் இவைகளைக்கற்றதனால் பிரஹ்மத்தை அறிய முடிகிறதில்லை.

1478. ஒருவனுக்குப் பிரியமாயிருக்கிற வஸ்து மற்றொருவனுக்கு அப்பிரியமாயிருக்கிறது கோடிக்கணக்கானவர்களுக்குத் திருப்தியானது ஒருவனுக்கு அதிருப்தியாயிருக்கும்.

1479. அடியோடு பாபத்திலிருந்து விலகியவர்களும் யோகத்தின் முடிவை அறிந்தவர்களும் சகலமும் தெரிந்தவர்களும் ஜீவன் முக்தியடைந்தவர்களுமான ஜீவர்கள் காலாந்தரத்தில் ரிஷிகளாய் விடுகிறார்கள். அவர்களே அனுபூதிபலத்தால் பஞ்சமூர்த்திகளாய் விடுகிறார்கள்.

1480. ஞானேந்திரியம் ஐந்து கர்மேந்திரியம் ஐந்து பிராண வாயுக்கள் ஐந்து மனம் ஒன்று இந்தப்பதினாறையும் தாண்டியவன் வியாபக புருஷனாகிறான்.

1481. சமீபத்திலிருந்துகொண்டு இனிமையாகப்பேசி ஹிதஞ் செய்கிறவர்களில் சத்துருக்களுமுண்டு, தூரத்திலிருந்து துவேஷமாகப்பேசியிருக்கிறவர்களில் மித்துருக்களுமுண்டு.

1482. ஆழ்ந்தபுத்தியும் சூக்ஷ்மமனதும் ஆசையுமற்றவர்கள் அழிவற்றபதமொன்றையன்றி மற்றவைகளைவிரும்புகிறதில்லை.

1483. ஹிருதயம் சிகை சிரசு கவசம் நேத்திரம் அஸ்திரம் இந்த ஆறும் வேதமந்திரங்களுக்குள்ள அங்கங்கள்.

1484. எந்த வஸ்துவும் அழியும்போது அதன் பூரண சாமர்த்தியத்தையும் காட்டிமறைகிறது.

1485. ஞானாப்பியாசிக்குத்தன்னுபுள்வரை தோற்றாத பலமான புத்திய ஆசைகள் தோற்றுமானால் அந்த ஆசைக்கு அழிவு காலம் சமீபித்ததென்று அறிய வேண்டும்.

1486. ஸ்திரீகளின் சம்பூர்ண சுகத்தை விரும்பிய புருஷனுக்கு வஸ்திரங்கள் ஆபரணங்கள் ஜனங்கள் பூமாலைகள் எப்படித்தடையோ அப்படி, ஞானாப்பியாசிகளுக்குக் காண்பான் காக்ஷி காணப்படுபொருள் இம்மூன்றும் பிரஹ்ம தரிசனமாகிய நிருவிகல்ப சமாதிக்குத் தடையாயிருக்கின்றன.

1487. இருந்த இருந்த இடங்களிலிருந்து பேதமின்றி ஏகாந்த சொரூபத்தை எண்ணுவது இச்சையில்லாதவர்களுக்கு லக்ஷணம்.

1488. நான்குவேதங்கள் வேதாங்கங்கள் ஸ்மிருதிகள் ஆகமங்கள் புராணங்கள் இதிகாசங்கள் மீமாம்ஸைகள் நியாய சாஸ்தி

ரங்கள் தர்க்கசாஸ்திரங்கள் தர்மசாஸ்திரங்கள் வேதாந்த சித்தாந்த சாஸ்திரங்கள் பற்பல மதகிரந்தங்கள் இவைகளை அப்பியாசித்தாலும் பக்தியோகமும் ஞானயோகமும் இல்லாவிட்டால் பரமேஸ்வர சொரூபத்தை அறியமுடியாது.

1489. தானே தனக்குள் ஆச்சரியமும் ஆனந்தமும் அடைகிறவன் மஹாயோகி.

1490. வேறிடத்தில் பற்றில்லாத யோகிகள் பரமாத்மரூபத்தைப் பெறுகிறார்கள்.

1491. பரவாசுதேவர் ஒருவரே சங்கர்ஷணர் பிரத்யும்னர் அனிருத்ரர் வாசுதேவர் மஹேஸ்வரர் என்ற ஐந்து மூர்த்திகளாயினர்.

1492. தெளிந்த இந்திரியங்களை உடையவன் அந்த இந்திரியங்களுக்குள்ளேயே ஆத்மாவை அறிகிறான்.

1493. அஞ்ஞானத்தால் அவிவேகமுண்டாகி அதனால் மனம் குற்றமுள்ளதாகிப் பஞ்சேந்திரியங்களும் சரீரமும் தோஷத்தை அடைகின்றன.

1494. ராகுவானது உண்மையில் சந்திரனைத் தொட்டதாயும் விட்டதாயும் காணப்படாததுபோல, தேகமானது ஆத்மாவைத் தொடுவதும் விடுவதுமில்லாதிருக்கிறது.

1495. எப்பொழுது மனிதனிடத்திலிருந்து ஆசை விலகுகிறதோ அப்போது வெளிவிஷயங்களிலுள்ள சஞ்சாரம் குறைவுபடுகிறது.

1496. சரீரத்தால் அனுபவித்தும் கண்ணால் பார்த்தும் காதால் கேட்டும் மூக்கால் மணந்தும் நாவால் ருசித்தும் தோலால் ஸ்பரிசித்தும் வாக்கால் பேசியும் காலால் நடந்தும் குறியால் போகித்தும் மனத்தால் நினைத்தும் புத்தியால் நிச்சயித்தும் அவிவேகஜனங்கள் ஆனந்தமும் ஆச்சரியமும் அடைகிறார்கள்.

1497. எப்பொழுது இந்திரியங்களுக்கு யாதொரு வேலையு

மில்லையோ அறிவு மறையாமலிருக்கிறதோ அப்போது அஸ்ப்ரக்ஞாதசமாதி.

1497. மனிதனிடமிருந்து பாபஅணுக்கள் எப்போது நசித்து வருகிறதோ அப்போது இந்திரிய விஷய ஆசைகள் குறைய ஆரம்பிக்கின்றன.

1498. பிரம்மலோகம் சிவலோகம் விஷ்ணுலோகம் இவைகளிலுள்ள பிரஜைகள் தங்களது ஒற்றுமையான நினைப்பாலேயே ஆண் பெண் சேர்க்கை கொண்டு புத்திரர்களை உண்டுபண்ணுகிறார்கள்.

1499 மனத்தைப் பற்றியதும் உலகத்தைப் பற்றியதும் இந்திரியங்களைப் பற்றியதுமான சுகதுக்கங்களை மனதிற் சிந்தியாதிருப்பதனால் அவைகள் வளர்ச்சி யடைகிறதில்லை.

1500. செய்யப்படுகிற காரியங்களெல்லாம் பிராரத்த கர்மத்தைக்கொண்டு சர்வேஸ்வரன் செய்விக்கிறாரென்று ஒவ்வொருவரும் எண்ணவேண்டும். நிச்சயிக்கவேண்டும்.

1501. நித்திய அனித்திய சுகங்களில் எதுகிடைத்தாலும் ஒருவரும் ஒருவரை ஒருவர் சந்திப்பதில்லை. பார்ப்பதில்லை.

1502. நிர்விகாரபுருஷர்கள் நேரே பிரஹ்மத்தை விட்டு உலகத்தைப் பார்ப்பதேயில்லை.

1503. உலக விஷய ஆசைகளை வெறுத்தவனிடம் அவ்விஷய ஆசைகள் அதிகமாகச் சுற்ற ஆரம்பிக்கின்றன.

1504. பகிரங்கஞான சாதனமுடையவனைக் கண்டு உலகம் பிரமிக்கிறது.

1505. சகலதத்துவங்களும் எவன் சொன்னபடி கேட்கிறதோ அவன் ஹம்ஸாம்ஸயோகி.

1506. இராஜச தாமஸ நாசஞ்செய்கிற தபசிகளுக்கு ஈஸ்வர சிருஷ்டிவடிவ இயற்கை ஆகாரங்கள் சித்திக்கின்றன.

1507. மனோநாசம் வாசனாநாசம் ஆசாநாசம் குணநாசம் குறிநாசம் இவ்வைந்தும் ஏககாலத்தில் சித்திக்கின்றன.

1508. சர்வதத்துங்களையுங்கண்டு நயந்து செல்பவன் தோந்த யோகி.

1509. ஏககாலத்தில் ஐந்து அவஸ்தைகளையும் அனுபவிப்ப வன் ராஜராஜேஸ்வரயோகி.

1510. நமஸ்காரத்தைப்பெற்றுக்கொள்ளும் உத்தமன் நமஸ் காரம் நமக்கேயென்று அகங்காரம் கொண்டால் சுகிர்தம் விலகி விடுகிறது.

1511. முதலில் சுகமாகத்தோற்றுகிற வஸ்து பின் துக்கத்தை யும் துக்கமாகத்தோற்றுகிற வஸ்து சுகத்தையும் கொடுக்கிறது.

1512. எந்தக்காலத்தில் மனதிற்குப் பூரணதிருப்தி மாறு திருக்கிறதோ அந்தக்காலம் சமாதிஸ்திதி.

1513. பாம்பின் காலைப்பாம்பே பார்த்துக்கொள்வதுபோலத் தன்னைத்தானே அறிந்து கொள்ளவேண்டும்.

1514. அமாவாசையில் சந்திரனிருந்தும் காணப்படாதது போல அஞ்ஞானிகளிடத்தில் பரமாத்மா இருந்தும் இருளாற் காணப்படுவதில்லை.

1515. ஞானம்பழக ஆரம்பிக்கிறவனும் பழகுபவனும் ஞானி யோடு சேர்ந்திருக்கமாட்டார்கள்.

1516. அஞ்ஞானகாலத்தில் நாம் ஞானிகளுக்கு வெளிவிஷ யமாகச் செய்யப்படுகிற உபகாரம் நமக்கு ஞானகாலத்தில் வந்து சேருகின்றன.

1517. ஏதாவது காரணங்களைக்கொண்டு பொருளில் வெறுப் புண்டாகுமானல் அது உத்தமமானதல்ல.

1518. முயற்சியில்லாமலே மோக்ஷ சாதனமான ஞானங் கிடைக்குமென்று எண்ணுவது அதிர்ஷ்டமில்லாத காரணமென்ற றியவேண்டும்.

1519. பூமிக்கும் துக்கத்திற்குமுள்ள முடிவு தெரிகிறவரை ஞானோதய முண்டாகிறதில்லை.

1520. ஹிருதயம் எந்தக்காலத்திலும் கலப்பில்லாமலிருப்ப தில்லை.

1521. யாதொருதிருஷ்டாந்தங்களுக்கும் அகப்படாத பரமாத்மாவைப்பற்றி ஒருவரும் யாருக்கும் உபதேசிக்கமுடியாது.

1522. உண்மை ஞானிகளை அவமதிப்பவர்களுக்கு ஞானிகள் தலைவராகிய கல்லால் மஹரிஷியென்கிற மஹாதேவரது சாபம் வந்து சேருகிறது.

1523. ஒருஉண்மைஞானியுடன் ஆயிரந்தரம் பிராணவாயு வெளியில் வந்து உட்புகுங்காலம் வரை பழகுவதாலுண்டாகும் சுகிர்தத்தை நூறு தெய்வ வருஷங்கள் வரை அளவற்ற வேதசாஸ்திரங்களைக்கற்பதாலும் அடையமுடியாது.

1524. ஓம்நமோ பகவதே வாசுதேவாய என்ற இந்த துவாதசாக்ஷர மஹாமந்திரத்தை மரணகாலத்தில் ஜெபித்தால் விஷ்ணு பகவானது சாரூப்யபதவி கிடைக்கிறது.

1525. கருமேந்திரியம் ஐந்து ஞானேந்திரியம்ஐந்து ஆகப் பத்தையும் நன்றாக அடக்கிப்பிராணனில் சேர்த்துப்பிராணனை மனதிலும் மனத்தைப்புத்தியிலும் புத்தியை அகங்காரத்திலும் அகங்காரத்தைப்பிரகிருதியிலும் நசிக்கச் செய்கிறவன் சாங்கியமதஞானியாகிறான்.

1526. நன்மைதீமைகளைவிட்டவன் கடவுளைத்தவிர மற்றவைகளையெல்லாம் விட்டவனாகிறான்.

1527. மனத்திலிருந்து மாறுகிற இன்பமும் தன்னிடத்திலிருந்து மாறாத இன்பமும் உதயமாகின்றன.

1528. ஆதி சிருஷ்டிகாலத்தில் ஜீவாத்மாவைத்தவிரவேறொன்றுமில்லை.

1529. அந்தர் முகத்திலுள்ள ஞானகர்மானுபவத்தைப்பகிர் முகத்தில் காட்டக்கூடியவர் மகாசாரியர் ஆகிறார்.

1530. ஆத்மஞானம் அஷ்டமாசித்தி இவைகளை அடைய

வேண்டி அப்பியாசிக்கிறவர்களுக்கு ஜீவகாருண்யம் உண்மைஞானம் இரண்டுமில்லாத கருமசித்தர்கள் தீங்குவிளைவிக்கிறார்கள்.

1531. சூக்ஷும பஞ்சாக்ஷரத்தைப்பிரணவத்துடன் அதி தேவதையின் சங்கல்பத்தோடு பத்துக்கோடிவரை ஜெபம் செய்து வந்தால் மனத்திலுள்ள மாயையின் வீர்யம் அடங்கி ஜோதிஸ் வரூபம் அனுபவத்திலாகிறது.

1532. ஆரம்பசிருஷ்டி காலமான கிருதயுகத்தில் ஆண்பெண் சேர்க்கையின்றிச் சங்கல்பத்தினாலேயே கெர்ப்பமும், திரேதாயுக காலங்களில் ஸ்திரீகள் புருஷர்களைத் தொடுவதால் கெர்ப்பமும், துவாபரயுககாலங்களில் நியாயப்படியுள்ள ஆண் பெண் சேர்க்கை யால் கெர்ப்பமும், கலியுககாலத்தில் நியாயப்படியும் நியாயந்தவறியு முள்ள ஆண்பெண் சேர்க்கையால் கெர்ப்பமுமுண்டாகிறது.

1533. உண்மைஞானிக்கு அவஸ்யம் அனுபவித்துத் தீர வேண்டிய பிராரத்த நோயைத்தவிர மற்ற நோய்கள் வருகிற தில்லை.

1534. வாசனையும் மனமும் பிறிந்திருக்கிற காலத்தில் மன மும் வாசனையும் நசித்துவிடுகின்றன.

1535. சங்கல்ப பிராரத்த அவதாரபுருஷர்களை ஜெகத்ரக்ஷக யீஸ்வரன் சுற்றிக்கொண்டேயிருக்கிறான்.

1536. சங்கல்பம் இருக்கிறவரை உபசாந்தம் உதயமாவ தில்லை.

1537. அளவற்றயோகசக்தியும் தபோமகிமையுமுள்ளவர் கள் யாராயிருந்தாலும் பஞ்சகிருத்யங்களைச் செய்யலாம்.

1538. ஸ்வதந்திரவாதிகள் மனதைச்சாந்த சொரூபத்தில் நிறுத்தி ஜெகத்தை நோக்கித்திரும்பிவிடுகிறார்கள்.

1539. தூங்காமல் தூங்குதல் என்கிற நனவிற்சுழுப்திநிலை வந்த பின்பும் அடையவேண்டிய நிலை இருக்கிறது.

1540. சூக்ஷ்மபுத்தியில்லாத நல்லவனைச் சினேகிப்பதிலும் சூக்ஷ்மபுத்தியுள்ள கெட்டவனைச் சினேகிப்பது நல்லது.

1541. வேதரகஸ்யமான ஞாபகம் ஒன்றுதான் ஆத்மாவைப் பற்றி யுள்ளசந்தேகங்களை அறுத்தெறியக்கூடியது.

1542. அவ்யக்தலக்ஷணமும் பிரகிருதியின் சொரூபத்தை யுங்கொண்டது மனம்.

1543. பிராணிகளெல்லாம் உறங்குகிற நிருவிகல்பஸமாதி காலத்தில் விழித்திருந்து ஆனந்தமனுபவிக்கிற புருஷனெவனோ அவனை அடைவது அமிர்தயோகம்.

1544. மூன்றவஸ்தைகளையும் ஏககாலத்தில் இல்லாமற் செய்துவிடுகின்ற ஆரூடியோகத்தால் பிரத்யகாத்ம தரிசனத்தை அடையலாம்.

1545. மனோசாந்தம் எவ்வளவு உண்டானாலும் உபசாந்தம் உண்டானதாகச் சொல்லிவிடமுடியாது.

1546. பிறவாதமோக்ஷத்தை அடையவேண்டியவர்கள் ஒருவிதமான பகிரங்க யாகமும் செய்யவேண்டியதில்லை.

1547. ஜீவஹிம்சையில்லாததும் ஜீவப்பிராணிகளைக்கொல்லாததும் மாம்ஸபக்ஷணமுண்ணாததும், மதுவர்க்கங்களின்றியதும், பலனை விரும்பாததும் மோக்ஷசாதனமுமான யாகத்தை ரிஷிகளும் தேவர்களும் தேவாதிபதியும் பரமேஸ்வரரும் அங்கீகரிக்கிறார்கள்.

1548. தியானயோகத்தில் மனது அடங்கியிருக்கிறதென்று நினைத்துப் புருஷமுயற்சியை விட்டுவிடக்கூடாது.

1549. சந்தேகத்தைக்காட்டிலும் பெரியதுன்பம் உலகத்திலில்லை.

1550. அகங்காரம் ஆசை துவேஷம் பயம் அவித்தை என்ற ஐந்துவிததுக்கங்களையும் க்ஷேத்ரக்ஞனை அனுபவித்தறிந்த மஹான்கள் விலக்கிவிடுகிறார்கள்.

1551. ஞானசாஸ்திரங்களாலும் சாது சங்கத்தாலும் தனது வைராக்கிய அனுபவத்தினாலும் விசாரணையினாலும் ஆத்மாவிற்கும் மனதிற்குமுள்ள வேற்றுமைகளைத் தெரிந்துகொள்ளவேண்டியது ஒவ்வொரு மனுஷ்யனுடைய அந்தரங்கக்கடமையாகிறது.

1552. விதேகமோக்ஷத்தை விரும்புகிறவர்கள் அசுத்தமும் சலனமுமான எண்ணங்களையும் காரியங்களையும் செய்யாமலிருக்க வேண்டும்.

1553. கருமயோகத்தினாலுண்டாகிற சித்தசுத்தியை அடையவேண்டியும் மோக்ஷமார்க்கத்தில் தடையின்றிச் செல்லவேண்டியதற்காகவும் அனித்தியமாகிய அழகான உலகங்களின் இச்சையை விலக்கியிருக்கவேண்டும்.

1554. புடமிட்டபொன்னும் இரும்புடன் சேர்ந்தால் விளங்காமற்போவதுபோல அழுக்குப் போகாத மனமுள்ளவர்களுக்கு உபதேசிக்கப்பட்டஞானம் விளங்கமாட்டாது.

1555. விறகில்லாதகாலத்தில் அக்கினி அவிந்துபோய் விட்டாலும் சூக்ஷ்மமாகி வாயுவோடு கலந்து சமயம்போல் வெளிவருவதுபோல ஈஸ்வர அதிகார அவதார புருஷர்களும் ஜனித்து மறைந்து விட்டதாகத் தோன்றினாலும் மோக்ஷமத ஞானதர்மங்கள் மறைந்த காலத்தில் வெளிக்குத்தோற்றுகிறார்கள்.

1556. தோல்வியடைந்தாலும் எடுத்தகாரியத்தைத் தொடர்ந்து செய்து கொண்டு வருபவனைப் பிரயத்னதேவதை கொண்டாடுகிறது.

1557. சரீரத்தில் ஆசைவைப்பதால் கூடச்சூக்ஷ்மமாக ஆத்மாவிலே பிரியம் வைத்தவனாகிறான்.

1558. தகாததை விரும்பக்கூடாது இகழ்ச்சியானதை நிந்திக்கக்கூடாது.

1559. சாதுக்களிடம் செல்பவர்கள் அவர்களது கொடூர வார்த்தைகள் செய்கைகள் பார்வைகள் இவைகளைப் பரீக்ஷைக்கானவைகளென்று பொறுமையுடனிருக்கவேண்டும்.

1560. பிரஹ்மத்தை உண்மையாய் அனுபவத்திலறிந்த மஹாத்மாக்களின் வாய்மொழிகள் வேதவசனம் போன்றதென்று ஆதி சிருஷ்டிகர்த்தர்கள் அறிவிக்கிறார்கள்.

1561. பரமேஸ்வரரால் வெளியில் வரப்பட்டவேதங்கள் மறைந்துபோனகாலத்தில் ருஷிகளின்ஹிருதய மூலமாய் உபநிஷத் சொரூபங்களாக வெளியில்வருகிறது.

1562. சரீரசம்பந்தமான ரக்ஷணைகள் ஆஸ்ரமதர்மங்கள் கருமபோகங்கள் இவைகள் ஒழுங்காக நடைபெறவேண்டுமானால் உலகப்பொருளை வெகு மரியாதையுடனும் தைரியத்துடனும் நியாயத்துடனும் சேர்த்துக்காக்கவேண்டும்.

1563. பிரஹ்மம் பக்குவர்களுக்கு உபதேசித்தகாலத்தில் பரோக்ஷமாயும் சமாதிகாலத்தில் அபரோக்ஷமாயும் விளங்கும்.

1564. வெட்கம் பயம் துக்கம் பிரியம் கோபம் மதம் காமம் இவைகள் ஆத்மஞானமில்லாத காரணத்தாலுண்டாகின்றன.

1565. ஞானிகள் எந்தப்பரமாத்மாவை நிருவிகல்ப ஸமாதியில் தரிசிக்கிறார்களோ அதேசொரூபத்தையே ஜாக்கிரத்திலும் தரிசிக்கிறார்கள்.

1566. நல்லறிவு வெளியிற் சென்ற காலத்தில் அகங்காரம் குடிகொள்ளுகிறது.

1567. பெரியரிஷியும் தபசியும் தேவாதிதேவருமாகிய ஸ்ரீமந் நாராயண மூர்த்தியைப் பத்துவருஷங்கள் வரை வேறுகாரியங்களின்றிபஜித்துக்கொண்டு அஷ்டாக்ஷர மந்திரத்தை ஜெபிப்பவன் பரமபதத்தை அடைகிறான்.

1568. அறிவில்லாதவர்களுக்கு ஞானோபதேசத்தையும் தர்மோபதேசத்தையும் அளிக்கிறவனுடைய பயனுக்குப் பூமி முழுவதையும் தானம்செய்வதாலுண்டாகும் பயனும் சமானமாகமாட்டாது.

1569. மாயையும் முக்குணங்களும் ஈஸ்வரரும் அகங்காரதத்துவத்தினின்றுண்டானவர்கள்.

1570. பிரத்யகாத்ம தரிசனமானவுடன் பிரபலசித்திகள் வருகிறது.

1571. பெண்களின் சரீரசுகத்தை விரும்பாதவர்கள் ஸ்திரீகளது உருவப்படங்கள் உருவவிக்கிரகங்கள் கூட்டங்கள் கோவில் உத்ஸவாதிகள் நாடகங்கள் ஸ்திரீகளைப்பற்றி வர்ணிக்கிற சாஸ்திரங்கள் ஸ்திரீகளைப்பற்றிய வார்த்தைகள் காமத்துடன் ஸ்திரீகளைத் திரும்பிப்பார்த்தல் உற்று நோக்கல் விசாரித்தல் இவைகளை அடியோடு விட்டுவிடவேண்டும்.

1572. அவரவர்கள் கருமத்தாலும் மனோசங்கல்பத்தாலும் பரமேஸ்வர ஆக்ஞையாலும் அவரவர்களுக்கு வந்திருக்கிற சரீர யாத்திரைக்கு வேண்டிய அளவு ஆகாரமுண்ணவேண்டும்.

1573. சாந்தியை விரும்புகிற மனிதன் கெம்பீரமான புத்தியுடன் இந்திரியங்களை அடக்கவேண்டும்.

1574. மனம் உள்ளவரையில் ஞானமோ அஞ்ஞானமோ மனத்திலிருக்கிறது மனமில்லாத காலத்தில் ஞானஞ்ஞானமிரண்டுமின்றிப் பரிசுத்தமான பிரஹ்மமாகிறான்.

1575. ஞானிகளான ஆசாரியர்களிடம் சிஷ்யர்கள் செல்வதற்கு முன் செல்லுமுறைகள் காணுமுறை கண்டபின் நடக்கும் முறை நடந்தபின் அநுஷ்டிக்கிறவழி இவைகளைச் சாஸ்திரமூலமாய் அநுஷ்டானத்தில் தெரிந்துகொள்ளவேண்டும்.

1576. பெண்கள் வடிவமென்னும் ஆசையாகிற காரணத்திலிருந்து பிராணிகளின் சிருஷ்டி உண்டாக வேண்டியிருந்தாலும் பேரறிவாளர்கள் பலருள் ஒருவராவது சாமான்ய விசேஷமாய் விலக்கிவிடலாம்.

1577. ஸ்திரீகளின் அசுத்தவுடலைச் சுத்தமாகவும் சுந்தரமாகவும் தோற்றுவிப்பது அவிவேகம்.

1578. கோபம் லோபம் பயம் கர்வம் அபிமானம் இவைகளை விட்டகன்றவன் பரிசுத்தன்.



விலக்ஷணானந்தர்

உலகஜனங்களுக்குப் போதிக்கிற சமயம்

1579. சம்சாரமென்னும் யந்திரத்தையும் பிரவிர்த்தி மார்க்க நடனத்தையும் நடைபெறச் செய்கிறவர்கள் பெண்களென்று தெரிந்து கொள்ளவேண்டும்.

1580. பெண்களும் புருஷர்களும் எந்தக்காலத்திலும் சேர்ந்து ஸ்நானம் செய்யக்கூடாது.

1581. ஆசாரியர் அருளின்றி எந்தவிதமான அப்பியாஸமும் செய்யக்கூடாது.

1582. மனதை வெளியிற் செல்லவைக்கக்கூடிய எதுவான காரியங்களை ஞானயோகிகளும் பக்தயோகிகளும் இராஜயோகிகளும் முன்பின் பாராமல் அடியோடு விலக்கி விடவேண்டும்.

1583. மந்திரங்களுடன் கூடின யாகங்களிலுள்ள மது மாம்ஸங்களை உண்பதாலும் பாபமுண்டென்று முக்கியமான சில மஹரிஷிகள் கூறுகிறார்கள்.

1584. உருவமில்லாத வஸ்துவைத் தியானித்துக் கஷ்டப்படுவதைக் காட்டிலும் உருவமுள்ள வஸ்துவைத்தியானிப்பது சிரேஷ்டம்.

1585. மனத்திலுள்ள தோஷங்களை மூலத்துடன் அறுத்துவிடுவதால் மீண்டும் முளைக்காதிருக்கிறது.

1586. இராஜச தாமஸ ஆகாரங்களை உண்பதால் அவிவேக மனதுண்டாகிப் பரிசுத்தஞான மார்க்கத்திற் செல்லவிடுவதில்லை.

1587. முதலில் சத்துவ குணத்தைப் பெற்றுக்கொண்டு ராஜச தாமஸ குணங்களை அகற்றிவிட்டு அப்பால் சத்துவகுணத்தையும் விலக்கிவிடவேண்டும்.

1588. பொருள் துக்கமென்று தெரிந்துவிட்டகாலத்தில் சகல தர்மங்களையும் விட்டுவிடலாம்.

1589. உண்மைப் பொருள்களின் உருவந்தெரியாதிருத்தல் எதார்த்தப் பொருளை வேறு பொருளாக் காட்டுதல் இவை மோஹம்.

**1590.** மனம் தெளியத்தெளியப் பெரிய மாறுதலுண்டாகும்.

**1591.** ஞானப்பியாஸம் முதிர்ந்த போது தெய்வதரிசனமும் அவர்களது அனுக்கிரகமும் அனித்திய போகங்களும் வலுவில்வருகின்றன.

**1592.** எவன் மனதை உலகம் இழுக்கவில்லையோ அவன் தத்துவார்த்தயோகி.

**1593.** உலகம் செத்ததாக எவன்மனதிற்குப் பட்டதோ அவன் சிதானந்தயோகி.

**1594.** சரீரவஸ்துவை இல்லாத தாகத்திடத்தோடு எண்ணுபவன் கற்பனாதீதஞானி.

**1595.** சரீரமத்தியில் தரிசித்த வஸ்துவைச்சர்வ இடங்களிலும் காண்பவன்பூர்ணகாமன்.

**1596.** சாஸ்திரமார்க்கம் வேறு அனுபவமார்க்கம் வேறு.

**1591.** அனுபவிகளுக்கு யுக்தியும் வேதமும் பிரமாணமல்ல.

**1598.** ஆத்மவிசாரணையில்லாத மனிதனை மிருகமென்று சுருதி கூறுகிறது.

**1599.** யாரிடமும் நன்மொழி கூறுவதால் ஞானம் தடையின்றி அழகாகப் பிரகாசிக்க ஆரம்பிக்கிறது.

**1600.** சுக்லத்தின் உற்பத்தியை ஆதியில் ஜனங்களுக்கு வெளியிட்டவர் அத்திரிமஹரிஷி.

**1601.** இரஜோ குணத்திலிருந்து இந்திரியங்களுக்கு உற்பத்தி லயம் இரண்டு முண்டாகின்றன.

**1602.** ஞானயோகிக்கும் கருமயோகிக்கும் அந்தரங்கலக்ஷியத்தில் பேதமில்லை.

1603. ஞானேந்திரியங்கள் இந்திரியங்களுக்குள்ள விஷயங்களை அடைந்தாலும் ஆசையற்றமனிதனைப்பற்றுகிறதில்லை.

1604. கூறத்தக்க வசனங்களைச்சூக்ஷ்மமான தர்மத்தோடு பிறர் குற்றத்தைவிட்டு மிதமாக வசனிக்கவேண்டும்.

1605. பிரம்மசரியவிரதத்துடன் ஹடயோகத்தை உத்தமமாக அனுஷ்டிப்பவன் திரும்பிவாராத பிரம்மலோகத்தை யடைகிறான், மத்திபமாக அனுஷ்டிப்பவன் ஞானவானாக பிறக்கிறான், அதமமாக அனுஷ்டிப்பவன் ஸ்வர்க்கத்தை அடைகிறான்.

1606. பிரம்மசர்யவிரதமில்லாத மனிதர்கள் சரீரமனோபலங்களை யிழந்து ஆத்மஞானமூலத்தையும் பறிகொடுத்து விடுகிறார்கள்,

1607. மாயையை வகித்த ஜீவன் ஈஸ்வரனாகிறான்.

1608. ஈஸ்வரசாயுஜ்யமடைகிறவன் நேரே பிரஹ்மத்தைச் சேருகிறதில்லை.

1609. சகலதேவர்களும் ஆத்மாவினிடத்திலிருக்கிறதென்று ஆத்மானுபவிகள் சொல்லுகிறார்கள்.

1610. விசேஷமாக ஞானத்திற் பயிற்சி பெற்றுப் பிரஹ்ம விசாரணையுடையவர்கள் அவஸ்யம் விழித்துக்கொண்டேயிருப்பார்களென்று யோகிகளுக்குத்தலைவரான நாராயண மஹரிஷி சொல்லுகிறார்.

1611. மனத்தில் மறைந்து கிடக்கிற பூர்வ ஜென்மாந்தர வாசனைகளை ஹம்ஸயோக பலத்தால் அறியவேண்டும்.

1612. பஞ்சபூதங்களில் ஆகாயமும் பூமியும் பெண் அக்னி ஜலம் வாயு மூன்றும் ஆண்.

1613. நித்திரை காலத்தில் தமோகுணம் ரஜோகுணம் பிரகாசிக்கிறபடியால் சத்துவகுண சம்பன்னர்கள் நித்திரையை விலக்கியிருப்பார்கள்.

1614. தாமதகுண அவதாரமும் அக்கினியின் அம்ஸமுமான நித்திரைக்கு இடங்கொடுப்பதால் சரீரபலம் மனோபலம் பிராண பலம் இவைகள் குறைந்து தேஜஸ்வடிவமான தேவியும் விலகு கிறாள்.

1615. தனக்கும் யோகாப்பியாசத்திற்கும் அனுகூலமாயி ருக்கிற வஸ்துக்களைத் தெரிந்து கொண்டு தேசகால விஷயங்களை யொத்த ஆகாரத்தை அனுசரிக்கலாம்.

1616. மலங்களால் நிறைந்ததும் வேர்வைநீரால் சூழப்பட்ட தும் நாற்றமும் புழுக்களுமுடையதும் அருவருக்கத்தக்கதுமான ஆண்பெண்களுடைய சரீரமென்னும் பாண்டமானது நரகமென்பது அறிவுடையவர்களது மதம்.

1617. மாயையைப்பற்றி ஞானிகள் ஒன்றும் நினைப்பதில்லை.

1618. பிராணிகளிடம் தயை பாராட்டுவதால் மனதிற்கு அபிமான முண்டாகிறபடியால் உலகமானது கர்மத்தின் பிரயோஜன மென்று தெரிந்து கொண்டு பிராணிகளிடம் கருணை செய்வதையும் ஞானயோகி விட்டுவிடவேண்டும்.

1619. புருஷர்களின் பீஜமான சுக்லமானது இந்திரனைத் தேவதையாகக் கொண்டதாகையால் இந்திரியம் என்று பெயர் வாய்ந்திருக்கிறது.

1620. மாயையை லௌகீகர்கள் உண்டென்றும் வைதீகர்கள் இல்லை யென்றும் சொல்லுகிறார்கள்.

1621. பக்குவர்களுக்கு உலகமும் அதன் காரியவஸ்துக்களும் ஞான சாதனமாகத் தெரிகிறது.

1622. சேஷ்டைகளை விட்டவனும் ஆசைப்படத்தக்க எல் லாப்பொருள்களிலிருந்தும் விடுபட்டவனும் ஜனங்களில்லாதவிடத் தில் சஞ்சரிப்பவனும் லகுவான ஆகாரமுள்ளவனும் மனத்தின் ஏகாக்கிர பாவமென்கிற தவமுடையவனும் இந்திரியங்களை அடக் கினவனும் கிலேசங்களை ஞானத்தாலெறித்தவனும் சமாதிக்குரிய

அங்கங்களில் சிரத்தையுடையவனுமான மனிதன் சந்தேகமில்லாமல் பிரஹ்மத்தை அடைகிறான்.

1623. சமாதியில் மனது நிலைபெறவில்லையானால் அதற்குரிய யோகமார்க்கத்தை அனுஷ்டிக்கவேண்டும்.

1624. யோகியானவன் பிறருக்கு வெளியாகக் கூடிய நிலைமையில் இருக்கக்கூடாது.

1625. இந்திரியங்களையும் மனத்தையும் தன்வசப்படுத்திக் கொண்ட யோகிகளுக்கு இந்திரியதேவதைகள் பிரசன்னமாகி மோக்ஷத்திற்குச் சகாயஞ்செய்கின்றன.

1626. அவல், பிண்ணாக்கு, சுண்டல், காய்கள், கனிகள், வித்துக்கள், கீரைகள், பிட்டு, மா, கிழங்குகள், பக்ஷணங்கள், நவதான்ய பதார்த்தங்கள், பழுத்தசருகுகள், இவைகளை யோகியானவன்மிதமாக உபயோகப்படுத்தவேண்டும்.

1627. கருமத்திற்குவேண்டி யோகத்திற்கு இடையூறு செய்யக்கூடாது.

1628. எந்தஜீவப்பிராணிகளையும் கொலைசெய்கிறவனிடத்தில் சூர்யகுமாரியான சிரத்தை என்பவள் விலகிவிடுகிறாள்.

1629. ஜீவப்பிராணிகளின் ஹிம்ஸை கொலை முதலியவைகளையுடைய யாகங்களை அடியோடு நிறுத்திவிடும்படி போதித்த புத்தபகவானது மதமே மஹரிஷிகளின் அங்கீகாரம்.

1630. சரீரசுகம் உலகசுகம் இவைகளை விரும்பாமல் அழகிய ஆடைகள் வீடுகள் வாகனங்கள் ஆகாரங்கள் இவைகளையும் அனுபவியாமல் இருப்பவர்கள்தான் தரும சாஸ்திரப்படி உலகத்தில் உயிர் வாழமுடியும்.

1631. சமயத்திற்குவேண்டியதை அனுபவித்துக்கொண்டு மற்றதைத்தள்ளிவிடுகிறவர்கள் சிருஷ்டியின் உண்மைகண்டவர்கள்.

1632. உண்மைஞானிகள் ஜீவாத்மாவாகிய பசுவை ஞானக்கினியில் சாந்தநெய்யோடு பரமாத்மதேவதைக்கு அர்ப்பணம் செய்கிற தெய்வ எக்ஞத்தைச் செய்கிறார்கள்.

1633. கருமத்தால் முடிவுபெற்றவர்கள் தம்மையே திரவ்யமாகக்கொண்டு உபதேசமென்கிற யாகஞ்செய்கிறார்கள்.

1634. சேறு கொசு நாற்றம் முதலியனவுள்ள இடங்களில் பசுவைக் கட்டுவதாலும் கன்றைவிட்டுப்பிரிப்பதாலும் பெரியபாபமுண்டாகிறது.

1635. இலந்தை நெல்லி புரசு அரசு புளி சாலம் மராகுறுந்து கழுதாளி இம்மரத்தடிகளில் தபஸ் செய்வதாலும் எந்தவிதமான புண்ணிய காரியங்களை ஆரம்பிப்பதாலும் சீக்கிரம் சித்தியாகிறது.

1636. மனத்தை அடக்கியதர்மிஷ்டன் அர்ச்சிராதிமார்க்கத்தால் பிரம்மலோகத்தை யடைந்து திரும்பிவருகிறதில்லை, மனத்தை அடக்காத தர்மிஷ்டன் தூமாதி மார்க்கமாகச் சத்திய லோகஞ்சென்று திரும்பிவிடுகிறான்.

1637. பொய்ஞானம் பொய்ப்பக்தி பொய்வார்த்தை பொய்வேஷம் பொய்நூல் பொய்க்கருமம் பொய்வேதம் பொய்க்குரு பொய்ச்சீடன் இவைகளுக்கு மதிப்பும் மெய்ஞானம் மெய்ப்பக்தி மெய்வார்த்தை மெய்வேஷம் மெய்நூல் மெய்க்கருமம் மெய்வேதம் மெய்க்குரு மெய்ச்சீடன் இவைகளுக்கு அவமதிப்பும் எக்காலத்திலும் பாமரஜனங்களுக்குப் படுகிறது.

1638. உபாஸனையால் சகுணநிர்க்குணத்தை அறிந்தவர்கள் அர்ச்சிராதிமார்க்கதால் பிரஹ்மலோகத்தை அடைகிறார்கள்.

1639. மனதையும் பிராணனையும் ஒன்றாக்கிச் சுழுமுனையில் நிறுத்திப் பிரம்மரந்திரத்திற் சேர்க்கும்போது குண்டலி சக்திவிரியும் அப்போது ஞானசித்தர்கள் வலுவில் தரிசனம் தருகிறார்கள்.

1640. அறிந்தும் அறியாமலும் செய்யப்படுகிற காரியங்களில் அறியாமற் செய்யப்படுகிறவைகள் பூர்ணபலன்களைக்கொடுப்பதில்லை.

1641. வேதத்திற் கூறப்படுகிற சமஸ்காரங்களுடன் சரீரத்தை உண்டு பண்ணுவதால் சரீரசுத்தி உண்டாகிறது.

1642. கஷ்டதசையிலும் அசௌகரியமான இடங்களிலுங் கூட நிஷ்காமகர்மிகள் தர்மத்தை விடுவதில்லை.

1643. சாஸ்திரத்திருடர்களும் பிரம்மத்திருடர்களுமுள்ள தேசத்தில் உலகத்திருடர்கள் அதிகமாயிருக்கிறார்கள்.

1644. தபசியும் யோகியும் அதிக ஆகாரமுண்ணக்கூடாது. உண்ணாமலுமிருக்கக் கூடாது.

1645. நாவைச்சாபல்யமின்றி வைத்துக்கொள்ளவேண்டும்.

1646. ஞானரகஸ்யங்களையும் தத்துவார்த்தங்களையும் கேட்கும்போது தன்னிடத்தில் லயித்து விடுகிறவர்கள் தததுவவுபதேசி.

1647. பிராணனை அடக்குதல் ஹடயோகம்.

1648. ஞானப்பியாசிகள் தன்பக்குவததிற்கு மேலான சாதுக்களுடன் பழக்கஞ்செய்வார்கள்.

1649. மனதில் ஏதாவதொரு கோரிக்கையை வைத்துக்கொண்டு அப்பியாசத்திற்கு ஆரம்பித்தால் பிரயோஜனப்படமாட்டாது.

1650. பிரஹ்மத்தை நோக்கிச்செல்லுகிற ஜீவன் இடையில் தடையான பலமண்டபங்களைத்தாண்டியும் தங்கியும் செல்கிறான்.

1651. சங்கல்பமிருக்கிறவரை எவனுக்கும் காமமிருக்கிறது.

1652. கர்மானுஷ்டானங்கள் ஸ்தூல சூக்ஷ்ம சரீரங்களைப் பரிசுத்தமாக்குகின்றன.

**1653.** சந்நியாசியின் தர்மம் கிரஹஸ்தனுக்கு அதர்மமாகவும் கிரஹஸ்தன் தர்மம் சந்நியாசிக்கு அதர்மமாகவும் இருக்கிறது.

**1654.** சகலதத்துவங்களுக்கும் அதீதமான பரமாத்மாவைத் தியானிக்கிறவன் சகலதேவர்கள் ரிஷிகள் ஞானிகள் எல்லோரையும் தியானித்தவனாகிறான்.

**1655.** கிருதயுக ஆரம்பத்தில் யாதொரு வருணாஸ்ரம பேதங்களின்றி யிருந்தது. திரேதாயுக ஆரம்பத்தில் மனிதர்கள் அதைப் பேதப்படுத்திக் கொண்டார்கள்.

**1656.** பிரபஞ்சவஸ்துக்களில் ஞானசாதனமான வஸ்துக்களை மட்டும் உபயோகித்துக்கொண்டு ஞானசாதனமல்லாதவைகளைத் தூஷித்தல் கூடாது.

**1657.** வேதத்தை அறிவதால் கடவுளின் பெருமையையும் பகவத்கீதையை அறிவதால் கண்ணன் மகிமையையும், ஞானிகளை அறிவதால் ரிஷிக்கூட்டங்களின் உண்மைகளையும், ஞானவாசிஷ்டத்தை அறிவதால் வசிஷ்டர் பெருமையையும், யோகத்தை அறிவதால் ஜோதியின் பெருமையையும், மனத்தை அறிவதால் ஆத்மாவின் பெருமையையும், பந்தத்தை அறிவதால் மோக்ஷத்தின் பெருமையையும், சிவரகஸ்யத்தை அறிவதால்மஹேஸ்வரர் மகத்துவத்தையும் அறிந்து கொள்ளவேண்டும்.

**1658.** ஸ்திரீகளின் சரீரங்களிலும் ஞானஞ்ஞானம் இரண்டுமிருப்பதனாலும் பரமாத்ம அம்சமுடையவர்களாய் விளங்குகிறபடியினாலும் அவர்களது சரீர சம்பந்தத்தைமட்டும் விலக்கியிருப்பது உத்தமமேயொழிய அவர்களைப்பற்றித்தூஷிப்பதால் மாதர்கட்குத் தலைவியான பராசக்தியின் கோபத்திற்கு ஆளாகவேண்டிவருகிறது.

**1659.** சிவவிஷ்ணு பேதத்தால் சண்டையிட்டுக்கொள்பவர்கள் அவிவேகிகள்.

**1660.** அளவுகடந்து சாஸ்திரங்களைக் கற்றுணர்ந்தபோதிலும் பாபமுள்ளவரை மனத்தெளிவு ஏற்படாது.

1661. மனத்தின் பரிபக்குவங்களுக்கேற்றவாறு குருவாக்கியங்கள் பிரகாசிக்கின்றன.

1662. ஈஸ்வரவடிவமும் குருவடிவமும் ஒன்று.

1663. ஹிருதய பக்குவத்திற்குத்தக்கவாறு குருமார்கள் பிரசன்னமாவார்கள்.

1664. உலகவஸ்துக்களைக்கண்டு தியங்குவது ஜென்மாந்தர வாசனைப்பழக்கம்.

1665. உண்மையான பரமாத்மஞானியினிடம் சம்பூர்ண தேவர்களும் பிரகாசிக்கிறார்கள்.

1666 ஸ்திரீகளிடத்திலும் புருஷர்களிடத்திலும் மாயையிருக்க ஸ்திரீகளைமட்டும் மாயையுடையவர்களென்று கூறுதல் பிசகு.

1667. தசேந்திரியங்களையும் மனத்தையும் அடக்கியாளுவதை விட்டு மாதர்களைத் தூஷிப்பதில் பயனில்லை.

1668. ஸ்தூல சூக்ஷ்ம சரீரங்களை எவ்விதக்காரணங்களை முன்னிட்டும் உபத்திரவம் செய்யக்கூடாது.

1669. தத்துவங்களைக் கடந்து செல்லச் செல்ல ரகஸ்யமும் உண்மையுமான விஷயங்கள் புலப்படுகின்றன.

1670. பஞ்சபூதங்களின் சூக்ஷ்ம அம்சத்தைத் தாண்டும் போது மூலப்பிரகிருதி பிரசன்னமாகிறது.

1671. செய்யுஞ்செயல்களெல்லாம் தத்துவங்களைப் பொறுத்ததேயன்றி ஆத்மாவைப் பொறுத்ததல்ல.

1672. ஞானியை அடைந்தவன் கடவுளை அடைந்தவனாகிறான்.

1673. ஒவ்வொரு அவதார புருஷர்களின் ஆத்மஞான ஒளியும், ஜீவகாருண்ய நிலைமையும், உபதேசமொழிகளும், அபிப்பிராயங்களும், காம்பீர்ய நோக்கமும், உலகிற்சஞ்சரித்த அந்தரங்க

எண்ணங்களும், அவர்களால் அருளிச்செய்த சாஸ்திரங்களின் ரகஸ்யங்களும் மதஸ்தாபனசக்திகளும் அவர்களது ஸ்தூலம் மறைந்த பின்பு தான் புலப்படும்.

1674. உண்மை ஞானிகளின் தரிசன பலத்தினாலேயே ஜீவர்களது அஞ்ஞானம் விலக ஆரம்பிக்கிறது.

1675. வேதம் ஞானிகளது ஹிருதயத்தில் வசிக்கிறது.

1676. பாரமார்த்திக ஞானிகளின் வாக்கியங்கள் பரமாத்மாவின் வாக்கியங்கள்.

1677. பிரஹ்மஞானிகளை எதிர்க்கத் திரிமூர்த்திகளாலும் முடிகிறதில்லை.

1678. தத்துவாதீத மஹாத்மாக்கள் பாமரனிடத்தில் பாமரனாகவும், பக்தனிடத்தில் பக்தனாகவும், ஞானிகளிடத்து ஞானியாகவும், அரசனிடத்தில் அரசனாகவும், பிக்ஷைக்காரனிடத்தில் பிக்ஷைக்காரனாகவும், நாஸ்திகனிடத்தில் நாஸ்திகனாகவும், ஆஸ்திகனிடத்தில் ஆஸ்திகனாகவும், கெட்டவனிடத்தில் கெட்டவனாகவும், நல்லவனிடத்தில் நல்லவனாகவும், இருப்பார்கள்.

1679. ஞானிகள் பூர்ண சந்திரனை யொத்தவர்கள்.

1680. மதவிஷயத்தில் கட்டுப்பாடுடையவர்களுக்கு மனத்தெளிவு ஏற்படாது.

1681. மனம் பரிசுத்தமான காலத்தில் ஆசாரியர் தானே வருவார்.

1682. மனம் ஒன்றை அடக்கினால் மற்றெல்லாத்தத்துவங்களையும் அடக்கினதாகிறது.

1683. வலுவில் வந்த போகங்களை வேண்டாமென்று வெறுத்துத் தள்ளுவதால் வியக்த சக்திகள் வெளிப்படுகிறது.

1684. ஞானயோக அப்பியாசிகளும் எதார்த்தமானவர்களும் குதர்க்கவர்திகளுடன் பழகக்கூடாது.

1685. நமது சரீரத்திற்குள்ள சுகதுக்கங்கள் போலவே எல்லா ஜீவராசிகளுக்கு முள்ள தென்று கருதுதல் பகிர்முகஜீவகாருண்யம்.

1686. எவ்வளவு சாஸ்திர பாண்டித்ய முடையவனுயிருந்தாலும் ஜனனமரண நிவிர்த்திற்கு வழி தேடாமலிருப்பானுனல் அவன் சாஸ்திரமலடன்.

1687. பேதபுத்தியுடைவர்களுக்காகவே வேதம் உபநிஷத்து ஆகமம் ஸ்மிருதி புராணம் இதிகாசம் இவைகள் ஏற்பட்டன.

1688. பிரஹ்மஞானிகளால் ஏற்படுத்தப்பட்ட நூற்களுக்குச் சாஸ்திரமென்றும் அஞ்ஞானி களாலேற் படுத்தப்பட்ட நூற்களுக்கு அசாஸ்திர மென்றும் பெயர்.

1689. சுருதி யுக்தி அனுபவம் இம்மூன்றுக்கும் பொருத்தமாகப் பேசுவதுதான் விவேகிகளுக்கு அழகு.

1690. மதங்களின் முடிவை அறியாது மதப்பிடிவாதமாகப் பேசுகிறவன் முடிவில் வியர்த்தமடைகிறுன்.

1691. மண் பெண் பொன் என்ற இம்மூன்றில் எதையாவது ஒன்றைப்பற்றினுல் மற்றிரண்டும் தொடர ஆரம்பிக்கும்.

1692. விட்டால் மூன்றுசைகளேயும் விடவேண்டும் வைத்தால் மூன்றையும் வைத்துக்கொள்ளவேண்டும் ஒன்றைவிட்டு மற்றொன்றை வைத்துக்கொள்வது முடியாது.

1693. பிறர்பொருளேக்கவரும் எண்ணமுடையவன் பிறர் மனேவியைக் கற்பழிக்க எண்ணுபவன் கற்பழித்தவன் கலங்காத துஷ்டன் இவர்களே ஹிம்சிப்பதற்காக மிருத்யுதேவதையும் அதன் சைன்யங்களாகிய வியாதிகளும் எதிர்பார்த்துக்கொண்டேயிருக்கின்றன.

1694. மாறுதலுடைய பிரபஞ்ச ஜனங்கள் ஒரேகுணமுடையவர்களாக இருப்பார்களென்றெண்ணிவிடக் கூடாது.

**1695.** சத்தியுடைய ஹிருதயத்தில் அருள் அருவிகள் பாய ஆரம்பிக்கின்றன.

**1696.** சத்திய சொரூபனாயிருந்து கொண்டு சத்தியசாந்தனாய் நடந்து கொள்பவன் ஒருவருக்கும் அஞ்சுவதில்லை.

**1697.** ஒன்றுக்கும் பயப்படாமல் தானாயிருப்பதே உண்மை ஞானம்.

**1698.** தன்னிடத்திலுள்ள அனுபவமே சகலருக்குமென்று சிருஷ்டியின் உண்மைதெரியாதவர்கள் நினைக்கிறார்கள்.

**1699.** ஒருவனோடு ஒருவன் பழக ஆரம்பித்தால் ஒருவனிடத்திலுள்ள குணங்கள் மற்றொருவனை மெல்ல எட்டிப்பார்க்கின்றன.

**1700.** ஞானானுபவம் வளர வளர உலகானுபவம் தானே குறைய ஆரம்பிக்கின்றன, இந்திரியங்களும் ஓய்வடைய ஆரம்பிக்கின்றது.

**1701.** யாரிடத்திலும் குற்றம் குணம் இரண்டையும் நோக்காது தனித்திருப்பவன் உத்தமன். குணத்தைமட்டும் பார்ப்பவன் மத்திமன். குற்றம் குணம் இரண்டையும் கவனிப்பவன் அதமன் குற்றத்தைமட்டும் பார்ப்பவன் அதமாதமன்.

**1702.** சங்கல்பம் கூடாதென்று நினைப்பதே சங்கல்பமென்று சங்கல்பத்தை ஜெயித்தவர்கள் கூறுகிறார்கள்.

**1703.** மனது எந்த வஸ்துவில் அதிகமாகக்கிரீடித்துக்கொண்டிருக்கிறதோ அந்த வஸ்துவின் அனுபவமே அடிக்கடி வாக்கிலும் மனதிலும் ததும்பிக்கொண்டேயிருக்கும்.

**1704.** மனோபக்குவத்திற்குத்தக்கவாறு பிரபஞ்சம் தோற்றுகிறது.

**1705.** மதத்துவேஷத்தோடு ஞானமடைய எண்ணுகிறவன் சேதுவிலிருந்தபடியே கங்காஸ்நானம் பண்ண எண்ணுகிறவன் போலாகிறான்.

1706. ஜீவர்களின் பரிபக்குவத்திற்குத்தக்கவாறும் காலம் தேசம் இடம் தொழில் இவைகளுக்கு ஏற்றவாறும் உண்மை ஞானி களின் உபதேசங்கள் மாறுபட்டுத் தோற்றும்.

1707. பிரம்மதேவர்முதல் புழுவரையில் ஒவ்வொரு ஜீவர் களுக்கும் சகுணம் நிர்க்குணம் என்ற இரண்டுவடிவங்களிருக் கின்றன, அதில் சகுணம் அழிவுள்ளது நிர்க்குணம் அழிவில்லாது.

1708. புத்தியின் விசாலமானது பூரணத்தை அறியவொட் டாமல் தடுத்துவிடுகின்றன.

1709. சரீரபாவனையுடையவர்களிடத்தில் ஆத்மபாவனையுடை யவர்கள் அதிகமாகப்பழக்கம் வைத்துக்கொள்ளக்கூடாது.

1710. பகிர்முகவேலைகளும் ஆசைகளும் எண்ணங்களும் ஒழிந்தவர்களுக்கே அந்தர்முகவேலைகளையும் ஆசைகளையும் எண்ணங் களையும் காட்டவேண்டும்.

1711. பிரபஞ்சத்தை நோக்கிக்கொண்டு பிரபஞ்ச காரியங் களைச் செய்யக்கூடாது.

1712. பிரஹ்மானுபவத்தை நோக்கிக்கொண்டே உலக காரியங்களில் பிரவேசிக்கவேண்டும்.

1713. மாம்ஸ ஆகாரங்களும் மற்றும் பலஹீனமையான வஸ் துக்களும் இயற்கைக் குணத்தை மாற்றிவிடமுடியாது.

1714. சன்மார்க்க யோகஞானமார்க்கத்தையுடையவர்களிடம் யோகி போல் வந்து மாயை கெடுத்துவிடும்.

1715. சில ஆயிரவருஷங்களுக்குள் சிலமதங்கள் தோன்றி யும் சிலமதங்கள் அழிந்தும் போய்விட்டன.

1716. நமக்குச் சகாயம் செய்வது போல்வந்து மாயை நம்மை ஏமாற்றிவிடும்.

1717. பஞ்சேந்திரியசுகங்களில் ஒன்றையும் பற்றியிருந்தவர் கள் மேலானதபோதனர் ஆகிறார்கள்.

1718. மஹாதபசிகளும் யோகிகளும் செய்யமுடியாத காரியத்தை உண்மையான கற்புத்தன்மைவாய்ந்த சங்கல்ப ஸ்வாதீனஞ் செய்து கொண்டிருக்கப்பட்ட பதிவிரதைகள் செய்துவிடுவார்கள்.

1719. உண்மையான பதிவிரதையின் ஏகாக்கிரபுத்திக்குச் சமானமாகப் பெரியோர்களின் புத்தியைக்கூடச் சொல்ல முடியாது.

1720. ஞான மோக்ஷமார்க்கங்களில் ஒருவிஷயமும் தெரியாது அலைகின்றவர்களைக்காமிய நிஷ்காமிய கர்மங்களில் திடமாகப்புகுத்தி விடுவது நலம்.

1721. ஏகாக்கிர புத்தி வாய்க்கப்பெறுதவர்களுக்கெல்லாம் சகல வடிவமான புண்ணிகர்மங்களையே போதிக்கவேண்டும்.

1722. லோகாந்தரங்களில் ஆசைகொண்டு மஹாயாகங்கள் தபசுகள் யோகங்கள் ஹோமங்கள் உபவாஸங்கள் உபாசனைகள் இவைகளை அனுஷ்டிக்கிறவர்கள் ஆழ்ந்த புத்தியுடையவர்களும் தெளிந்தமனமுடியவர்களும் தீரர்களுமல்ல.

1723. காமத்தைக்காட்டிலும் கோபம் பலமுடைபது காமத்தை ஜெயிக்கக்கூடியவர்களால் கோபத்தை ஜெயிக்கமுடியாது.

1724. உண்மையான பிரஹ்மஞான மார்க்கத்தையும் நிவிர்த்தி மார்க்கத்தையும் அடையவிரும்புகிறவர்கள் திரிமூர்த்திகள் ரிஷிகள் லோகபாலர்கள் இவர்களையும் வேதங்களையும் நிராகரிக்க வேண்டி வருகிறது.

1725. பொருளைமட்டும் அடையத்தெரிந்து தர்மத்தையும் காமத்தையும் அடையத்தெரியாதவன் துரதிஷ்டசாலியென்றறிய வேண்டும்.

1726. இகலோக ஆசைகளை விடுவதைக் காட்டிலும் பரலோக ஆசைகளை விடுவது கஷ்டம்.

1727. ஒருநிலைமையுமில்லாதவர்களுங்கூடச்சில சமயங்களில் தெய்வகால வசத்தால் நீதிமார்க்கங்களையும் ஞானமார்க்கங்களையும் பேசுவார்கள்.

1728. துஷ்டபுத்தியுடையவர்களும் அஞ்ஞானிகளும் காமிகளுங்கூட ஆத்மஞானயோக மார்க்கங்களின் கதிகளைப்பிரஸ்தாபிப்பார்கள்.

1729. மஹாதேவனுயிருந்தாலும் அவர் கூறுகிற எல்லா விஷயங்களையும் ஒப்புக்கொள்ளுகிறவன் உண்மை அறியாதவன்.

1730. ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் சூக்ஷ்மமான புத்தியே தெய்வமாக நினைத்துக்கொண்டு சகல காரியங்களையும் செய்ய வேண்டும்.

1731. பொறுத்துக்கொள்வது தெய்வகுணம் பொறுத்துக் கொள்ளாதது அசுரகுணம்.

1732. இகலோகம் பரலோகம் இரண்டையும் வெறுத்தவர்கள் பிரஹ்மத்தை அறியயோக்கியர்கள்.

1733. சாருவாகன் புத்தன் இவர்களது மதத்தின் கர்மயோக நிச்சயத்தையும் பரலோகக் கொள்கைகளையும் பிரமாணமின்றித் தள்ளிவிடவேண்டும்.

1734. செய்து பலனில்லையென்றும் பொய்யென்றும் நிச்சயித்த எந்தக் காரியத்தையும் செய்து பயனில்லை. பலிதமாகாது.

1735. தாய் தந்தை மனைவி மக்கள் சுற்றம் வீடு செல்வம் இவைகளில் ஆசக்தியுடையவர்கள் விஷயமயக்கப்பைத்தியக்காரர்கள்.

1736. பகிர்முக கர்மயோகத்திற்கும் அந்தர்முகஞான யோகத்திற்கும் பலவிரோதங்களிருக்கின்றன.

1737. யாகம் தர்மம் ஹோமம் தவம் பூஜை தெய்வதரிசனம் குரு சிஷ்யன் சிரார்த்தம் தர்ப்பணம் இவைகளெல்லாம் வயிற்றுப் பிழைப்புக்காகவும் பணச்சம்பாத்தியத்திற்காகவும் பெரிய சாஸ்திரங்களில் எழுதிவைத்திருக்கிறதென்று சார்வாகமதம் கூறுகிறது.

1738. பிரத்தியக்ஷ சுகங்களைவிட்டு அப்பிரத்தியக்ஷசுகம் தேடுவது அறிவீனமென்று உலோகாயதமதம் பிரதிபாதிக்கிறது.

1739. ஒன்றோடொன்று பற்றற்றிருக்கின்ற ஞானமார்க்கத்தை ஆதாரமாகக்கொண்டு ஒன்றோடொன்று பிணைந்திருக்கப்பட்ட கர்மமார்க்கம் உலகமார்க்கம் இவைகளைப் போதிப்பதில் பிரயோஜனமில்லை.

1740. பற்றைவிட்டவர்களின் தர்மம் வேறு பற்றை விடாதவர்களின் தர்மம்வேறு.

1741. பரலோக ஞானமும் நம்பிக்கையுமில்லாதவன் பலமான பெரிய பாபங்களுக்கு அஞ்சுவதில்லை.

1742. நாஸ்திகப் பிராம்மணர்கள் தர்மத்தையும் பெரியவர்களையும் சாஸ்திரநீதிகளையும் ஏளனம் செய்வார்கள்.

1743. கர்மமும் ஞானமும் ஒன்றென்று உள்பார்வையுடையவர்களும் வேறென்று வெளிப்பார்வையுடையவர்களும் நினைக்கிறார்கள்.

1744. பரமாத்வை அறியவேண்டியவன் சங்கல்பத்தைச்சுருக்கவும் விடவும் வேண்டியது.

1745. இந்திரியங்களை அடக்காதவனை எல்லாவுலகத்தாரும் பரிகாசம் செய்கிறார்கள்.

1746. நெடுநாள் யோசித்து உண்மைதெரிந்து கொண்டபின் தர்மத்தை ஒருவனுக்குச் சொல்லவேண்டும்.

1747. செய்துவருவதை விட்டுவிடுவதானால் வெகுநாள் எண்ணியே விட்டு விடவேண்டும்

1748. வெகுநாள் ஆராய்ந்து ஒருவனை மித்திரனாகக்கொண்டவன் அதிகமாகப் பழகுவதற்குத் தகுதியுள்ளவன்.

1749. எதையும் தீர்க்க தரிசனத்துடன் தாமதித்துச் செய்கிற தீரர்களிடத்தில் சகல சத்குணங்களும் காரியங்களும் முறைகளும் இதரர்கள் வந்தடையும் தன்மைகளும் உண்டாகின்றன.

1750. அன்னம் பாயசம் புஷ்பம் மா இவைகளாலேயே யாகபலிசெய்யவேண்டுமென்று உண்மையான வேதத்திற் கூறப்பட்டிருக்கிறது.

1751. எந்ததர்மஞ் செய்தபோதிலும் ஹிம்ஸையின்றிச் செய்வதே சிரேஷ்டமான பலனைக் கொடுக்கிறது.

1752. பிரஹ்மமில்லையென்கிறவர்களும் ஆத்மாவில் சந்தேகமுடையவர்களும் புகழை விரும்புகிறவர்களும் அழிகிறபதவிகளில் ஆசைப்படுகிறவர்களும் குறுகியபுத்தியுள்ளவர்களுமானவர்களால் ஜீவஹிம்ஸையுள்ளயாகம் செய்யப்படுகிறதென்று ஸ்வாயம்புமனு சொல்லியிருக்கிறார்.

1753. சரீரம் வாடாமலும் மிருத்யுவுக்கு வசப்படாமலுமிருக்கும்படியான கர்மத்தில் பிரவேசிக்கவேண்டும்.

1754. கள் தேன் மீன் மாம்ஸம் சாராயம் திலான்னம் வெங்காயம் சுறைக்காய் உருளைக்கிழங்கு முருங்கைக்காய் முள்ளங்கி பீர்க்கங்காய் காளான் இவைகளை உத்தமர்கள் உண்ணக்கூடாது.

1755. அசிரத்தையோடும் லோபத்தோடும் கொடுக்கப்பட்ட ஆகாரத்தைப் புசிப்பதால் தமோகுணம் உண்டாகிறது.

1756. தாமதகுண ஆகாரங்களும் பிரஹ்ம அமிர்தபாவனையால் சத்துவகுண ஆகாரமாய் விடுகிறது.

1757. சரீரவெறுப்பு உலகவெறுப்பு புண்ணியமிகுதி பாபநாசம் பரமேஸ்வரகிருபை குருவுபதேசம் ஞானாரம்பம் சமாதி நிஷ்டை ஜீவன்முக்தி விதேகமுக்தி இவைகள் முறையே தொடர்கின்றன.

1758. ஸ்தூல சரீரத்துடன் எவ்வளவு காலம் வரை உலகத்தில் வசிக்கிறோமோ அவ்வளவு காலம் வரை பிரம்மா விஷ்ணு ருத்ரன் மஹேஸ்வரன் சதாசிவன் முருகன் கணபதி லக்ஷ்மி பார்வதி சரஸ்வதி முதலிய சகுணமூர்த்திகளின்பக்தி அவஸ்யம் வேண்டும்.

1759. குளம் கிணறு மடம் சாலை சோலை நந்தவனம் சத்திரம் ஆலயம் பாடசாலை இவைகளை ஏற்படுத்திப்பாமரர்கள் ஞானமடைய எண்ணுகிறார்கள்.

1760. நிஷ்காரண நிஷ்காமகர்மி சூர்யமண்டலமார்க்கமாய்ப் பிரம்மலோகஞ்சென்று பின் திரும்பாமல் அங்கிருந்துகொண்டு ஆத்மஞானத்தை அடைகிறான்.

1761. வார்த்தை நித்திரை நடை நினைப்பு மர்மசக்திவெளிவருதல் இவைகளால் மனிதர்களுக்குப் பலம் குறைகிறது.

1762. அன்பு கர்வம் துரோகம் பாபச்செய்கை அப்பிரியம் இவைகளை யோஜித்துத் தாமதித்துச் செய்கிறவனும் சிலாகிக்கப்படுகிறான்.

1763. சிருஷ்டிக்குமுன் ஜீவேஸ்வரர்களும் சகுணமூர்த்திகளும் மூலப்பிரகிருதியும் இல்லை.

1764. தன்னைச்சமாதானம் செய்து கொள்ளாமல் பிறரைச் சமாதானஞ் செய்ய ஆரம்பிக்கிறவர்களைக்கண்டு தேவர்கள் பரிகசிக்கிறார்கள்.

1765. கொலைசெய்த கடினகுற்றவாளியைக்கிருதயுகத்தில் சீ என்று வைதலும், திரேதாவில் ஒருமுகூர்த்தகாலம் நிந்தித்தலும், துவாபராவில் திரவ்யத்தைப்பறித்துவிடுதலும், கலியில் கொலையும், தண்டனையாக விதிக்கப்பட்டிருக்கிறது.

1766. புத்தியை விருத்தி ஞானத்தால் அடக்கவேண்டும்.

1767. சந்தனம் ஹாரம் புஷ்பம் வெற்றிலை மேளம் சிவிகை ருசிபெற்றஆகாரங்கள் ஸ்திரீ பாட்டு இவைகளைத்துறவி விரும்பக்கூடாது.

1768. கிராமப்பொதுக் காரியங்களிலும் தனிக்குடும்பவிவகாரங்களிலும் அனுகூலமாகவோ பிரதி கூலமாகவோ சன்னியாசி பிரவேசிக்கக்கூடாது, பேசக்கூடாது.

1769. சத்தியம் என்பது மோக்ஷம் மரணமில்லாமை பரமாத்மா என்று அர்த்தம்.

1770. ஆசையை விலக்குவதால் அதர்மத்தையும் அனித்தி யத்தை விலக்குவதால் சினேகிதத்தையும் விலக்குவதாகிறது.

1771. யோகிகள் மிதாகாரத்தினாலும் நித்திரையை விட்ட தினாலும் ரோகத்தையும் உபத்திரவத்தையும் நீக்கிக்கொள்ளுகிறார் கள்.

1772. சுத்தசத்துவ குணமுடையவர்களுக்கு நித்திரைவர மாட்டாது.

1773. பஞ்சமூர்த்திகள் கணபதி சுப்ரமண்யன் பிரமரிஷி கள் தேவர்கள் சூர்யசந்திரர்கள் யமன் இந்திரன் முதலியவர்கள் இரண்டில்லாத பிரஹ்மசைதன்யததிற் கலந்து மஹாமௌனத்தி லிருப்பதே அபிப்பிராயமாயிருந்தாலும் பரமேஸ்வரனியதிப்படி தங்கள் தங்களது பிராத்த காலத்தை நினைத்துத்தங்களுடைய காரியங்களை நடத்தி வருகிறார்கள்.

1774. உண்மையான ஞான இச்சையுள்ளவர்களுக்குக் காஷா யம் ருத்திராக்ஷம் விபூதி சாஸ்திரங்கள் கமண்டலம் யாத்திரை தண்டம் ஜெபமணி மனிதர்கூட்டம், இவைகள் பந்தத்தைக் கொடுக் கிறது.

1775. நான்கு வருணங்கள் நான்கு ஆஸ்ரமங்கள் இவை எட் டும் ஒன்றுக்கொன்று தாழ்ந்தவைகளல்ல எட்டின்பலனும் ஒன்றா யிருக்கின்றன.

1776. யாதொருபற்றுமின்றிய குணமும் ஞானமும் உதய மாகுமானால் ஆஸ்ரமங்களும் வருணங்களும் சிலாகிக்கத்தக்கவை கள்.

1777. துறவி பிறர் பூஜிப்பதை ஏற்றுக்கொள்ளக்கூடாது நித்திரை செய்யும்போது ஒருவரையும் வைத்துக்கொள்ளக்கூடாது.

1778. சுதர்மத்தில் யாரும் செட்டதையும் நல்லதையும் எண்ணலாகாது.

1779. சன்னியாசிகள் ஸ்திரீகள் தனித்து வசிக்கக்கூடிய கிரகங்களில் உண்ணவும் உறங்கவும் போகவும் கூடாது.

1780. முன்னாலே பழகிய இடங்களுக்குத்துறவிகள் போகக் கூடாது.

1781. சன்னியாசி வேறு எந்த ஆஸ்ரமிகளோடும் பழகக் கூடாது.

1782. ஸ்திரீவிஷயமாக மனத்தில் வந்த குணதோஷங்களைப் பெரிதான பிரயத்தஞ்செய்து ஒரு ஜென்ம முயற்சியாலாவது போக்கிக் கொள்ளவேண்டும்.

1783. பரமாத்மாவின் கிரகணங்களே ஜீவாத்மா.

1784. பரமேஸ்வரராகிய வாசுதேவரின் நான்கிலொரு பாக சக்திபுடையவர் ஸ்ரீ கிருஷ்ணபகவான் என்று சூக்ஷ்ம சாஸ்திரம் கூறுகிறது.

1785. பரமாத்ம கல்பிதம் பிரகிருதி பிரகிருதி கல்பிதம் மாயை மாயாகல்பிதம் முக்குணம் முக்குணகல்பிதம் ஈஸ்வரன் ஈஸ்வர கல்பிதம் வேதாந்தம் வேதாந்தகல்பிதம் வேதம் வேதகல்பிதம் சங்கல்பம் சங்கல்பம் பலகல்பித்தமாயிருப்பதால் சங்கல்பத்தை ஜெபிக்க ஆரம்பித்தவர்களும் ஜெபிக்கிறவர்களும் ஜெபித்தவர்களும் வேதாகம புராண இதிகாசஸ்மிருதிகளை லக்ஷியஞ் செய்யமாட்டார்கள்

1786. ஓம் நமோ பகவதே தக்ஷிணாமூர்த்தயே என்ற இந்த மஹாதேவர் மந்திரத்தைப் பிரக்ஞாபதத்தையும் கூடச் சேர்த்துப் பத்துலக்ஷம் ஜெபஞ் செய்வதோடு தக்ஷிணாமூர்த்தி வடிவத்தைக் கல்லால் விருக்ஷவீராசன சின்முத்திராங்க சகிதமாய்த் தியானித்து வர மஹாதேவர் பிரசன்னமாகிறார்.

1787. உத்தராயண காலத்திலும் புண்ணிய நக்ஷத்திரம் முகூர்த்தம் இவைகளிலும் மரணமடைந்தவன் புண்ணியசாலி.

1788. பஞ்சபாண்டவர்கள் தங்களது ஸ்தூலசரீரங்களை விட்டுத்தேவலோகத்தில் பலகாலம் வசித்துவிட்டு மீண்டும் கலி

யுக காலத்தில் பூலோகத்தில் மனிதர்களாகப் பிறந்து சித்தர்களாய் விடுவார்களென்று பீஷ்மாசாரியர் சொல்லியிருக்கிறார்.

1789. எந்தப்பிறப்பை அடைந்ததனால் ஆத்மரக்ஷகஞானம் உத்தமமாக உதயமாகிறதோ அந்தப்பிறப்பு மேலானது.

1790. சரஸ்வதி நைமிசம் புஷ்கரம் கங்கை கண்டகி யமுனை காவேரி கோதாவிரி தாம்பிரபருணி ஸ்யமந்தபஞ்சகம் முதலிய புண்ணிய நதிகளில் தபசிகள் அடிக்கடி நீராடவேண்டும்.

1791. மோக்ஷ முயற்சிக்கும் தர்மத்திற்கும் காலநிச்சயம் சொல்லப்படவில்லை.

1792. ஸ்திரீகள் வேதத்திற் கூறப்பட்டிருக்கிற தர்மத்தை யுந் தள்ளி மாதாபிதாக்களது உத்தரவையுந்தாண்டி பர்த்தாவினது கட்டளையையும் மீறிக்குலாசாரத்தையும் விட்டு ஆத்மஞானமடையவோ தேவாலயங்களுக்குச் செல்லவோ சந்நியாசிகளைத்தரிசிக்கவோ செல்வது உசிதமல்ல, ஜெகதீஸ்வரனது அனுமதிபெற்றால் முற்கூறிய கட்டளைகளை மீறிச்செல்லலாம்.

1793. அந்தராத்மாவான பரமேஸ்வரர் ஜீவர்களின் கர்மபலன்களைப் பார்த்து அதற்குத் தக்கபடி புத்தியை ஏவிக்கொண்டு எல்லாரிடத்திலுமிருக்கிறார்.

1794. ஸ்தூல கர்மங்களுக்கு ஸ்தூல புருஷனையும் சூக்ஷ்ம கர்மங்களுக்குச் சூக்ஷ்ம புருஷனையும் எதிர்பார்த்து ஸ்திரீகள் நடக்கவேண்டும்.

1795. பிரஹ்மஞானத்தையும் பரம ஏகாந்தபக்தியையும் அடைவது வாஸ்தவமாயிருந்தால் ஸ்திரீகள் எல்லோரையும் மீறிவிடலாம்.

1796. உத்தமபுருஷனுடைய பிராணசக்தி பிரம்மரந்திரத்தின் வழியாலும், மத்தம புருஷனுடைய பிராணன் நடுவழியாலும், அதம புருஷனுடைய பிராணன் கீழ்வழியாலும் சென்றுவிடுகிறது.

1797. விஷம், தூக்கு, திருடர்கை, வீடுவிழுதல், ஜலம், துஷ்டமிருகம், சர்ப்பம், பசு. இவைகளாலுண்டாகும் மரணம் இழிவானவை.

1798. பலாத்காரமாகத் தேகத்தை விட்டு உயிரைப்பிறிக்கிறவன் யாதனுசரீரத்தை அடைகிறான், ருத்திரசிருஷ்டியான பைசாசமாகிறான்.

1799. மனதையே நரகம் பாபம் மஹாபாபம் சங்கல்பம் பந்தம் சம்ஸாரம் துக்கம் ஜன்மம் அவித்தை மாயை பிரகிருதி துவைதம் பிரதிபந்தம் என்று சாதுக்கள் கூறுவர்.

1800. சூத்திரனும் ஸ்திரீயும் ஞானசம்மதமாக இந்திரியங்களை ஜெயித்துத் தபஞ்செய்யலாமென்று சக்திகுமாரர் கூறுகிறார்.

1801. பார்வதி லக்ஷ்மி சரஸ்வதி இம்மூவரைப் பெண்களென்றும் அரன் அயன் அரி இம்மூவரை ஆண்களென்றும் நினைக்கிறவன் அவிவேக அதமபக்தன்.

1802. தாமஸ குணத்தினால் வீணாக அக்கினியை உண்டாக்குபவனிடமும், காலமல்லாத காலத்திலும் பருவகாலத்திலும் பிரயோஜமில்லாமல் மரம் செடி கொடி இவைகளைப் பறிப்பவனிடமும். ரஜஸ்வலையான ஸ்திரீகளிடம் சேருகிறவனிடத்திலும், ஜலத்தில் கோமையையும் மலஜலத்தையும் போக்குகிறவனிடத்திலும் பிரம்மஹத்தி தோஷம்வந்து சேருகிறது.

1803. நிருவிகல்பசமாதி பெற்ற ஜீவன் முக்தர்கள் விதேக முக்தியை விரும்பிப் பிராரப்த முடிவை எதிர்பார்த்தவண்ணமாயிருக்கிறார்கள்.

1804. அடிக்கடி ஸ்திரீசங்கத்தால் பிறப்புக்கு ஏதுவாகுமென்று பயப்படுகிறவன் வெகுசுத்தன்.

1805. பிராம்மணர்களையும் தேவர்களையும் அவமதிக்கிற காலத்தில் ஈஸ்வரகோபம் உண்டாகிறது.

1806. ஆபத்துக்காலத்தில் பிராம்மணன் ஜீவனத்திற்காக க்ஷத்திரிய வைஸ்ய சூத்திரதர்மங்களை அனுஷ்டிக்கலாமென்று பராசரர் கூறியிருக்கிறார்.

1807. யாவையும் அநித்தியமென்று உறுதியாய் நினைத்துக் கொண்டு கிரகஸ்தாஸ்ரமத்தில் வாழ்ந்துவந்தால் ராகத்துவேஷாதி குணங்களும் மமதையும் பற்றாது.

1808. ஹிமாலயா பருவதத்தின் தென்கீழ்ப்பாகத்திலுள்ள சகராார்ப்பதம் என்ற இடத்தில் பிரபலமான மஹரிஷிகள் எப்போதும் வசித்துவருகிறார்கள்.

1809. நான்கு ஜாதிகளையும் விட்ட அநுலோமப்பிரதிலோம ஜாதிகளில் பிறந்தவர்களுங்கூடத் தபோசக்தியினால் ரிஷிகளாயிருக்கிறார்கள்.

1810. ஒரு • கால் பிரஹ்மானுபவத்திற்சொக்கி நெடுநேரஞ் சென்று கீழிறங்கி அப்புறம் ஏகதேசமாக அனுபவம் உதயமாகுமானால் பிரஹ்மவித்து என்றறிக.

1811. எவனுக்கு அனுபவம் தோற்றித்தோற்றிமறைகிறதோ, எவன்மிகுந்த ஜீவகாருண்யமுடையவனோ, எவன் சுருதியில் வல்லமையுடையவனோ, எவன் மனது உபதேச சாமர்த்தியமுடையதோ? எவன் பிரஹ்மானுபவியாயிருந்தும் உலக உத்தாரணத்தை நாடுகிறானோ, எவனுக்குவலுவில் பரமேஸ்வர சக்தியும் அஷ்டமாசித்திகளும் வந்துசேருகின்றனவோ, எவன்வேதத்திற்குமீறாது போதிக்கின்றானோ, எவன் சநாதன தர்மப்படி நடந்து காண்பிக்கின்றானோ, எவன் சர்வசமத்துவமானவனோ, எவன் உலக இன்பங்களைத் துச்சமாய் நினைத்தும் உலகத்தை ரக்ஷிக்க எண்ணுகிறானோ, எவன் சகல சுவாதந்தரியமாயிருக்கிறானோ, அவன் அவதார புருஷன்.

1812. பிறருக்குத்தீமையைச்செய்தும் கெட்டசெயல்களைப் புரிந்தும் தனக்கு மேன்மை தேடக்கூடாது.

1813. சிறிது கிடைத்தாலும் சந்தோஷிக்கிறவன் புண்ணிய சாலி.

1814. பாபகர்மங்களிலிருந்துவிலகுவது எப்போதும் புண்ணிய சீலமாயிருப்பது, சத்துக்களின் சாவகாசம், சத்சாஸ்திரப் பயிற்சி, இவைகள் சிரேயஸை அடைவதற்குக் காரணம்.

1815. சிரேயஸையும் மாறாத சுகத்தையும் விரும்புகிறவன் பஞ்சேந்திரிய குணங்களைக்காரணமின்றிவிரும்பக்கூடாது. பிறரைத் தூஷித்துத்தனக்குக்கீர்த்திதேடக்கூடாது. அதிக ஆகாரமுண்ணக் கூடாது.

1816. சத்புத்திரனுள்ளவர்களுக்கு கர்மப்பிரயோஜன முண்டாகிறது.

1817. திரவ்யத்திற்காகச்சிநேகிப்பவனை விட்டுவிடவேண்டும்.

1818. பொருளுக்காகத் தர்மம் செய்கிறவர்களையும் இப்படியுள்ள இடங்களையும் விட்டுவிலகவேண்டும்.

1819. புத்திரனில்லாதவர்கள் மோக்ஷமில்லாதவர்களென்பது பிரயோஜனமற்ற விசாரணையில்லாத உலகவசனம்.

1820. கிருமிகளும் எறும்புகளுங்கூட ஆகாரத்தைத்தேடி உண்ணுகிறது. அதுபோல மனிதனுமிருந்தால் மனிதக்கிருமி யென்றே சொல்லவேண்டும்.

1821. ஆயிரங்கோடி வண்டிதான்யத்தில் ஒருபடிதான்யத்தையும், பெரிய அழகிய விஸ்தாரமாகிய உப்பரிக்கையில தனக்கு வேண்டிய ஒருமஞ்சத்தையும், தன் வாழ்க்கைக்குப்போதுமென்று நினைக்கிறவன் பெரியபாக்கியசாலி.

1822. இரவும் பகலும் போஜனத்திற்காகவே அலைகிறவன் பாபமுடையவன்.

1823. ருத்ராருடைய ஆண் குறியின் வழியாகச் சுக்கில ரூபமாய் வெளிவந்தபடியால் ஆகாயத்தின் நடுவழியில் சுக்கிரன் போவதில்லை.

1824. பசியால் ஆகாரமின்றி ஆகாரத்திற்காகத் திருடியவனுக்குப் பாபமில்லை.

1825. மிருத்யுவினால் உலகம் அழிக்கப்படுவதையும், பசியினால் பிராணிகள் வருந்துவதையும், வியாதியினால் உலகத்தார் பீடிக்கப்படுவதையும் எவன் நன்றாயறிந்திருக்கிறானோ அவன் தெளிவடைந்தவன்.

1826. கருமயோகிகள் பிரபஞ்சத்தை மாயையாகவும், பக்தியோகிகள் பகவானாகவும், வித்துவான்கள் விராட்சொரூபமாகவும் சாதுக்கள் பரமாத்மாவாகவும் நிச்சயித்திருக்கிறார்கள் மஹாமௌனிகள் மேற்கூறியவைகளைக் கருதாமல் சைதன்யத்திற் கலந்துவிடுகிறார்கள்.

1827. மழை பயிர் மனைவி செல்வம் பூமி புத்திரன் உத்தியோகம் வியாபாரம் இராஜ்யபதவி சரீரசுகம் இவைகளைக்குறித்து யாத்திரை தேவதரிசனம் மந்திரஜெபம் ஹோமம் இவைகளை செய்கிறவன் மூடன்.

1828. நடக்கிற காரியங்கள் நடந்து கொண்டேயிருக்க இன்னகாரணத்தால் தான் இது உண்டாயிற்றென்று மறைப்புள்ள மனிதர்கள் கூறிக்கொண்டிருக்கிறார்கள்.

1829. ஐந்து சிஷ்யர்களோடு ஆரம்பிக்கிற மதமானது காலக்கிரமத்தில் ஐம்பது கோடி ஜனங்களுள்ள மதமாய் விடுகிறது.

1830. பரமாத்மா இல்லாத காலத்தில் ஜீவாத்மாக்களுமில்லை.

1831. ஹிருதயம் சுத்தமடையாதவன் நியாயமான புண்ணிய கருமங்களைச்சிரத்தையுடன் செய்து சர்வலோக சரண்யராகிய சர்வேஸ்வரனுக்கு அர்ப்பணம் செய்து வரவேண்டும்.

1832. மாயை நித்தியமா அநித்தியமா என்று வாதிப்பதை விட்டு மாயையை ஜெயிக்கமுயல வேண்டும்.

1833. பிராம்மணன் அடக்கத்தினால் க்ஷத்திரியன் வெற்றியினால் வைஸ்யன் திரவ்யத்தினால் சூத்ரன் வேலைத்திறமையினால் பிரகாசமாயிருக்கிறான்.

1834. ஒவ்வொருவனும் தன்னால் முடிகிறவரை தர்மம் யோகம் உலகஉபகாரம் அஹிம்ஸை ஆசாரம் வித்தை இவைகளை வஞ்சகமின்றிச் செய்து வரவேண்டும்.

1835. சக்திக்குத்தக்கபடி பச்சை ஜலத்தையாவது சுடுஜலத்தையாவது அன்போடு அதிதிகளுக்குக்கொடுப்பவன் பெரியதர்ம பலனை அடைகிறான்.

1836. பூரணஞானசக்தி என்னிடத்தில் நிரம்பியிருக்குமானால் பேசவும் இந்தநூல் எழுதியிருக்கவும் முடியாது.

1837. எல்லோருடைய கிரகத்திலும் உத்தமன் உண்ணக்கூடாது.

1838. கலப்புள்ள பிரஜைகளிடத்தில் பழகக்கூடாது.

1839. எந்தெந்த மனோ நிலைமையுடன் ஆதியில் சாஸ்திரங்கள் எழுதப்பட்டதோ அந்தந்தமனோநிலைமை அதைக்கற்பவர்களுக்கு அந்தச்சமயத்தில் உண்டாகிறது.

1840. சம்பத் சக்தியாகிய லக்ஷ்மீதேவியும், வித்யாசக்தியாகிய சரஸ்வதீதேவியும், பராக்கிரமசக்தியாகிய பார்வதீதேவியும், ஓரிடத்திலிருந்தால் உலக ஆசாரியத்தன்மையும் அரசாங்கப்பதவியும் உண்டாகும்.

1841. தெய்வமிருக்கிறது இருந்தாலுமிருக்கலாம் தெய்வமிருப்பதற்குப்பிரமாணமில்லை பார்க்கமுடியாது என்பது மீமாம்ஸக மதம்.

1842. ஒழிவுண்டாகாத பாபபுத்தியுள்ள அற்பமனிதனுங்கூட மரணகாலத்தில் பச்சாத்தாபப்படுகிறான்.

1843. மரணவஸ்தை ரோகஅவஸ்தை சரீரஅவஸ்தை இவைகளுங்கூட ஞானத்திற்குச்சாதனங்களாகின்றன.

1844. ஜலத்தின் குமுழிகளை யாரும் அருந்தக்கூடாது.

1845. அறியாமையாற் செய்யப்பட்ட பாபத்தைத் தவத்தினாற் போக்கலாம், அறிந்துசெய்த பாபத்தை அனுபவித்தால்தான் தீர்க்கலாம்.

1846. உமாமஹேஸ்வரரால் உண்டாக்கப்பட்ட பெரியஜ்வாலையானது யானைக்கு மண்டைக்கொதிப்பாகவும், மலைகளுக்குத் தாதுவாகவும், ஜலங்களுக்குப் பாசிபாகவும், பாம்புக்குச் சட்டையாகவும், ரிஷபங்களுக்குக் குளம்புரோகமாகவும், பூமிக்கு உவர்மண்ணாகவும், பசுக்களுக்கு மாலைக்கண்ணாகவும், குதிரைக்குக் கண்டத்தில் சதையடைப்பாகவும், மயில்களுக்கு மண்டைவெடிப்பாகவும், செம்மறியாட்டுக்குப் பித்தவிகாரமாகவும், புலிகளுக்குச் சிரமமாகவும், மனிதர்களுக்குச் சுரமாகவும் வியாபித்திருக்கிறது.

1847. நியாய விரோதமாகக் கேள்வி கேட்பவர்களுக்குச் சொல்லக்கூடாது.

1848. மரியாதையின்றிக் கேட்பவர்களுக்கு எதையும் சொல்லக்கூடாது.

1849. வேண்டிய ஞானரகஸ்யார்த்தங்களை ஊரார்களுக்குப் போதிக்கிறேனே தவிர என்னிடத்தில் ஒன்றுகூடக் கிடையாது.

1850. எதார்த்தம் சல்ப்பம் விதண்டம் என்ற மூன்றுகேள்விகளில் எதார்த்தக்கேள்வி கேட்பவனிடமே ஆசாரியர் பதில்கூறுவார்.

1851. பிரஹ்மஞானத்தைப்பற்றிக் கேள்விகேட்பவனும் பதில் சொல்பவனும் அவதாரபுருஷனாயிருக்கவேண்டும் அல்லது முடிந்த ஞானியாயிருக்கவேண்டும்.

1852. சாமர்த்தியசாலிகளாலும் பண்டிதர்களாலும் பேசப்படுகிற பிரஹ்ம ஞான வார்த்தைகள் உயிரற்ற பிணத்தின் மீது அலங்கரிக்கப்படுகிற ஆடை ஆபரணங்கள் போலப் பிரகாசிக்கும்.

1853. சகல ஜாதி தர்மங்களும் ஆஸ்ரமதர்மங்களும் வித்தைகளும் ஞானப்பியாஸமும் ஜீவமுயற்சிகளும் சமாதிப்பிரயத்தனமும் உலக சஞ்சாரமும் இராஜ்ய பரிபாலனமும் உபதேசங்களும் நினைப்பும் பேச்சும் அகங்காரத்தாலுண்டாகின்றன.

1854. உலகத்தார் தன்னை மெச்சிக் கொண்டாடவேண்டுமென்ற உலக வாசனையையும், ஸ்தூல சரீரம் அழகாகவும் மளமளப்பாகவும் ஆரோக்யமாகவும் இருக்கவேண்டுமென்ற தேகவாசனையையும், அளவற்ற சாஸ்திரங்களைக் கற்றுப் பண்டிதனாகவேண்டுமென்ற சாஸ்திரவாசனையையும், ஞான மோக்ஷங்களுக்கு விரோதமென்று புத்திமான்கள் விட்டுவிடவேண்டும்.

1855. சாஸ்திரங்களை ஓர்தரம் படித்த பின் மீண்டும் படியாதிருக்கும்படி பரமேஸ்வரனைப் பிரார்த்திக்கவேண்டும்.

1856. புத்திவிருத்தியினால் சத்துவகுணப்பசியும், இந்திரியங்களின் விருத்தியினால் ரஜோகுணப்பசியும், சரீரவிருத்தியினால் தமோகுணப்பசியும் உண்டாகின்றன.

1857. மனதை ஆத்மாவில் சேர்க்கக் கொண்டு போகும் போது வெகுஜாக்ரதையாக இடைவெளி காட்டாமற் கொண்டுபோகவேண்டும்.

1858. கீழ்ப்பட்டவர்களிடமிருந்து உயர்ந்த விஷயங்களைக் கிரகிக்கக்கூடாது.

1859. அர்த்தநாரீஸ்வரர் சோமாஸ்கந்தர் நடேசர் விஷ்ணு ஹிரண்யகர்ப்பர் இவர்களுக்கு உபதேச குருவின் அதிகாரத்துவம் அந்த உருவத்தில் சொந்தமாகக் கிடையாது.

1860. பரலோகமுயற்சி விடாதபிரயத்தனம் ஞானமோக்ஷ தெய்வநம்பிக்கை உபாயம் தைரியம் இவைகளுடன் சேர்ந்த குற்றமற்றவனது காரியங்கள் முடிவடைகிறது.

1861. எவன்மனது கோபமூட்டப்பட்டும் சந்தோஷத்தையடைகிறதோ அவன் மனதிற்கு இதரர்கள் புண்ணியங்களும் வந்தடைகின்றன.

1862 சித்தசுத்தியானவர்கள் ஆத்மஞானத்தையன்றி வேறொன்றையும் ஆஸ்ரயிக்கக்கூடாது.

1863. மனுஷ்யத்தன்மையிலிருந்து தெய்வத்தன்மை பெற்றவன் மரணமடையமாட்டான்.

1864. எமனும் மிகுந்த கோபமுடைய அந்தகனும் அளவற்ற பராக்கிரமமுடைய காலமிருத்யுவும் உத்தமமான யோகியை அடக்கமுடியாது.

1865. மாம்ஸபக்ஷணம் தைலஸ்நானம் இவைகளை யோகி அடியோடு விட்டுவிடவேண்டும்.

1866. யோகியானவன் பிண்ணாக்கு நொய் யவதான்யமா ஜலங்கலந்தபால் இவைகளை உண்ணவேண்டும்.

1867. வருணாஸ்ரமதர்மங்களும் மற்றுமுள்ள சமஸ்தபுண்ணிய கருமங்களும் சித்தசுத்திமட்டும் செல்லுகிறது, அப்பாற் செல்ல முடிவதில்லை.

1868. சாஸ்திரஹிதமான ஜாதிஹிம்ஸை தேசவிசேஷத்தில் ஹிம்ஸை காலவிசேஷஹிம்ஸை காரியவிசேஷஹிம்ஸை இவைகளை அனுஷ்டிக்கிறவன் மஹாவிரதத்தை அனுஷ்டித்தவனாகிறான்.

1869. ஒருவன் அடைந்தவழியில் சிலர்களோ அதிகமானவர்களோ பின்பற்றி நடந்தால் அதற்கு **மதம்** என்று பெயர்.

1870. இவ்வுலகிலுள்ள சகல பிராணிகளுடைய கதிகளையும் அறிந்து விஷயங்களில் வைராக்கியமடைந்து விட்டால் சரீரம் நீங்கிய பிறகு சந்தேகமின்றி முக்தியை அடையலாமென்று **சாங்கியமதம்** கூறுகிறது.

1871. பேசாதிருப்பது முதல் நல்லது சத்தியத்தோடுபேசுவது இரண்டாவது நல்லது தர்மந்தவறாது பேசுவது மூன்றாவது நல்லது இனிமையாகப் பேசுவது நான்காவது நல்லது.

1872. குறியிலும் வயிற்றிலும் பற்றுடையவர்களையும் கடுஞ் சொல்லுடையவர்களையும் திருடர்களையும் தேவர்கள் சேர்க்கிற தில்லை.

1873. கோபத்தோடு செய்கிற தானம் தவம் யாகம் ஹோமம் புண்ணியம் இவைகளின் பலனை எமன் கொண்டுபோய் விடுகிறான்.

1874. ஸ்திரீகளையும் குழந்தைகளையும் முத்தமிட்டவர்கள் மலத்தை முத்தமிட்டவர்களாகிறார்கள்.

1875. யாரும் எந்தவிடத்திலும் யாரை நமஸ்கரித்தபோதி லும் தன்னையே நமஸ்கரித்துக் கொண்டவர்களாகிறார்கள்.

1876. சாங்கியர்கள் யோகிகள் ஞானிகள் மூவரும் பிரகிருதி வரை ஒன்றாகவே செல்லுகிறார்கள்.

1877. ஞானயோகத்தினால் எதார்த்த உண்மை புலப்படும்.

1878. யோகிகள் எதை அடைகிறார்களோ அதையே சாங்கி யர்களும் அடைகிறார்கள்.

1879. மலஜலம் விடுகிறகாலம் போஜனஞ் செய்யுங்காலம் தவிர மற்றக்காலங்களிலெல்லாம் யோகஞ்செய்யலாம்.

1880. தியானயோகம் ஹடயோகம் என்றஇரண்டில் தியான யோகமே சிறந்தது.

1881. இராத்திரியின் முன்பாகத்திலும் பின்பாகத்திலும் ஆத்மாவில் மனதை நிருத்தியோகஞ் செய்யலாம்.

1882. யாதொரு ஆதாரமுமில்லாத பிரகிருதியையே ஜெகத் காரணமென்று சாங்கியர்கள் கூறுகிறார்கள்.

1883. பிரகிருதியையும் பரமாத்மாவையும் ஒன்றென்று கூறு கிற சாங்கியவாதத்தை வேதவாதிகள் அங்கீகரிப்பதில்லை.

1884. பிராணனையும் மனதையும் சேர்த்து ஆத்மாவில்அடக்குவது சிவராஜாங்கயோகம்.

1885. தர்மத்தை எதிர்பாராமல் பொருளைமட்டும் எதிர்பார்ப்பவர்கள் பற்பல பாபங்களுக்கு ஆளாகுகிறார்கள்.

1886. சகல யோகங்களும் வித்தையோடு முடிவடைகிறது.

1887. சிரிப்பு அழுகை தூக்கம் உதாரம் பயம் திருட்டு அதிகாரம் தந்திரம் வஞ்சகம் வியாபாரம் உத்யோகம் கிருஷி வியபிசாரம் உபதேசம் பிரியம் இவ்வகைகளால் திரவ்யத்தைச் சம்பாதித்துப் புண்ணியம் தர்மம் செய்கிறவர்கள் முறையே மின்னல் மேகம் இடி நக்ஷத்திரம் மிருத்யு சந்திரன் நிருதி வாயு வருணன் குபேரன் ஸ்வர்க்கம் பிதுர்லோகம் கந்தர்வலோகம் துருவலோகம் நாகலோகம். முதலிய உலகங்களை அடைந்து மீண்டும் பூமியில் ஜனிக்கிறார்கள்.

1888. பிரகிருதியைத் தாண்டுவது அமானுஷயோகம்.

1889. பிரகிருதியில் நிலைத்துவிடுவது சாங்கியயோகம்.

1890. அபேதமதம் அழிவில்லாதது பேதமதம் அழிவுள்ளது.

1891. உண்பதற்கும் உடுப்பதற்கும் போகிப்பதற்கும் தூங்குவதற்கும் மரணமடைவதற்கும் அவதாரமாயிருக்கிறவர்களை மனிதக்கழுதை யென்று வேதம் கூறுகிறது.

1892. புத்தியைக்கொண்டு புத்தியுள்ளவர்களால் புத்தியுள்ள காலத்தில் புத்திக்குத் தக்கபடி புத்திசாதுர்யத்தால் புத்திக்கு எட்டினவரை புத்தியாலுண்டாக்கப் பட்டது மதங்கள்.

1893. பக்தியோகத்தினால் குணசகிதமுக்தியையும் ஞானயோகத்தினால் குணரகித முக்தியையும் அடையலாம்.

1894. சங்கல்பமும் வசனமும் யாதொரு இயற்கைகளுமில்லாதவன் விதேகமுக்தன்.

1895. வஞ்சகமின்றி எவனெவனுக்கு எதெது கிடைக்கிறதோ அவையவைகளை அப்படியப்படியே சர்வேஸ்வர பகவானுக்கு அர்ப்பணஞ்செய்து பூஜிக்கவேண்டும்.

1896. ஸ்திரீகளை அடிமைகளாக வைத்துக் கொள்ளக்கூடிய ஆஸ்ரமங்களைத் துறவிகள் வெறுக்கிறார்கள்.

1897. யோகிகளுக்குச் சாங்கியத்திலும் வேதத்திலும் ஆதாரமிருக்கிறது.

1898. சூக்ஷ்மபுத்தி யில்லாதவர்களுடன் பழகுவது தீமையை விளைவித்துவிடும்.

1899. பேசிப்பேசி உலகவுபகாரஞ் செய்வதைவிடப் பேசாமற் செய்வது நல்லது.

1900. பிரஹ்மத்தை யறியப் பக்தியோகம் வேண்டியதில்லை.

1901. திரிமூர்த்திகளது பதவிகளைப் பெறுவதைக் காட்டிலும் யாதொரு மறைப்புமில்லாத ஞானம் பெறுவதே சிலாக்கியம்.

1902. பரமாத்மாவை மறைத்துவிடுகிற செய்கைகளே சகல மதங்களிலும் அதிகமாய்க் காணப்படுகின்றன.

1903. சொந்த ஆத்மாவை அறியாதவர்கள் அன்னியமாகத் தெய்வத்தை நாடுகின்றனர்.

1904. உருவமுக்தியை விரும்புவர்கள் உபாஸனையையும் பதமுக்தியை விரும்புபவர்கள் கருமயோகத்தையும் செய்கிறார்கள்.

1905. நேரே பரப்பிரஹ்மத்தை அடைய முயற்சிக்கின்ற மஹாத்மாக்கள். திரிமூர்த்திகள் மற்றதேவர்கள் ரிஷிகள் சித்தர்கள் வேதங்கள் உலகங்கள் இவர்களைப் பூஜித்துச் சகாயமாக்கிக்கொள்ளுகிறார்கள்.

1906. பிரபஞ்சத்தின் பெரும்பகுதியினர் அதோமுக காரியங்களைச் செய்துகொண்டு ஊர்த்வமுகமாய்ச் செல்வதற்கு ஆசைப்படுகின்றனர்.

1907. சகலதத்துவங்களையும் சாஸ்திரங்களால் தாண்டிச்செல்பவர்கள் மனதினால் கடந்துபோகிறவர்கள் அனுபவத்தினால் தள்ளிச்செல்பவர்கள் என்று மூன்று பிரிவினர் இருக்கிறார்கள்.

1908. அக்னி சூர்யன் வாயு இம்மூவரும் எல்லோருடைய சரீரங்களிலுமிருந்து அவரவர்கள் செய்கிற பாபபுண்ணியங்களுக்குச் சாக்ஷியாயிருக்கின்றனர்.

1909. இகலோகத்தில் தான்செய்த கர்மமானது யாதொரு தடையுமின்றிப் பரலோகத்தில் தனக்கேவந்து சேருகிறது.

1910. ஞானத்தை வேண்டி நிற்பவன் எப்போதும் ஒருவனுகவே சஞ்சரிக்கவேண்டும்.

1911. எவ்வளவுபெரிய ஞானியானுலும் மனம் தேகம் பிராணன் இவைகள் இரும்பு போலிக்கிறவரை பூர்ண மஹானென்று சொல்லுவது சுருதி சம்மதமல்ல.

1912 எவன் மனது ஆத்மாவில் ஒரு முகூர்த்தகாலம் நிலேத்துக் கீழிறங்குகிறதோ அவன் மத்திம போகசாலி யென்றறிக.

1913. எவன் மூன்றவஸ்தைகளேயும் மெதுவாகத் தாண்ட ஆரம்பிக்கிருனே அவன் துரியானுபவத்தினின்று கீழிறங்குவது கடினம்.

1914. எவனுக்குப் பிரஹ்மானுபவம் வந்து அங்கேயே நிலேத்துவிடுகிருனே அவன் விடுதிப் பிராரத்தமுடையவன்.

1915. சங்கல்பத்தை விட்டவன் தத்துவஞானி.

1916. விரதானுஷ்டானமில்லாதிருப்பது பிராம்மணனுக்குத் தோஷம். உத்ஸாகத்தோடிருப்பது ஸ்திரீகளுக்குத் தோஷம். ஸ்திரீசங்கமம் சந்நியாசிகளுக்குத் தோஷம்.

1917. பிரமலோகம் வைகுண்டம் கைலாசம் யமலோகம் தேவலோகம் நக்ஷத்திரவுலகம் பிரபஞ்சத்தோற்றம் குரு சிஷ்யன் வேதம் சாஸ்திரம் நன்மைதீமை இவைகளாகத் தோற்றுவிப்பது மனது.

1918. தேவயானமார்க்கத்திலிருப்பவர் விஷ்ணு பிதுர்யானமார்க்கத்திலிருப்பவர் சூர்யன் இரண்டுமார்க்கத்தையுந் தாண்டினவர்கள் ஞானிகள்.

**1919.** வித்தைக்குச்சமமான நேத்திரமில்லை. சத்தியத்திற்கு நிகரானதவமில்லை. ஆசைக்கு நிகரானதுக்கமில்லை. தியாகத்திற்குச் சரியான சுகமில்லை.

**1920.** ஒன்றுமில்லாதிருத்தல், மிகுந்த சந்தோஷமடையாமை சபலகர்மமின்றி யிருத்தல், ஒன்றையும் பிரார்த்தியாதிருத்தல் ஒன்றிலும் நியமமின்றியிருத்தல் இவைகள் பிரஹ்மஞானியின் லக்ஷணம்.

**1921.** காற்றடிக்கும்போது வேதாத்தியயனமோ வேதாந்த சாஸ்திர படனமோ செய்யக்கூடாது.

**1922.** பிரஹ்மத்தை நோக்கிச் சென்றுகொண்டிருப்பவனுக்கு மேல்முகமாகச் செல்லக்கூடிய ஒவ்வொரு படிகளும் தானே தோன்ற ஆரம்பிக்கின்றன.

**1923.** வேதசாஸ்திரங்கள் பாஷ்யங்கள் இவைகளைக் கற்றும் பிரஹ்ம ஞானிகளைக்கண்டு சம்பாஷித்தும் தேசயாத்திரை செய்தும் உண்மையான சந்தேகந் தீரமாட்டாது

**1924.** ஜகத் பிரதீதியில்லாத சகஜநிஷ்டையில் நிலைத்த ஞானிகளும் அந்த நிலையிலிருந்து கீழிறங்குவார்களானால்அவர்களைப் பிரஹ்ம சக்திகளான மாயையின் கணங்கள் பற்றிக்கொள்ளுகின்றன.

**1925.** உடலிருக்கிறபோதே நேரமீளாத முக்தியை விரும்புகிற முமுக்ஷுக்கள் இந்தமஹத்சாஸ்திரத்தை அஷ்டீஸ்வாயோகநியமப்படி அனுஷ்டிப்பார்கள்.

**1926.** ஆயிரம் அஸ்வமேதங்களும் நூறு வாஜபேயங்களும் லக்ஷம் ராஜசூயங்களும் யோகமஹிமையின் வீசத்தின் ஒருபாகங் கூடக்கிடையாது.

**1927.** தீவிரபுத்தியுள்ளவன் தன் சரீரத்தாலும் மற்ற யாராலும் ஒன்றையும் எதிர் பார்க்கக்கூடாது.

1928. சுகருக்கு இருபத்தைந்தாவது வயதில் வியாசர் உபதேசித்திருக்கிறார்.

1929. உலக போகங்களைத் தள்ளிவிட்டுச் சரீரத்தினாலும் மனத்தினாலும் அடையப்படாதது போன்ற தவத்தைச் செய்கிறவனால் கிடைக்காததொன்றுமேயில்லை.

1930. தபோவனங்களிலேயேபிறந்து அங்கேயே வளர்ந்து உலக காமபோகங்களை அறியாமல் மரணமடைந்தவர்களுடைய தர்மமானது மிகவும் அற்பமென்று பீஷ்மர் சொல்லுகிறார்.

1931. தான் ஒருவனேயென்றும் தனக்கு ஒருவரும் சொந்தமுடையவர்களில்லை யென்றும் நினைக்கிறவன் ஆத்மலாபத்தை அடைகிறான்.

1932. யோகி பிரணவ ஜெபம் தியானம் செய்யவேண்டும்.

1933. இந்திரியங்களை அடக்குவதினாலேயே தவம் விருத்தியாகிறது.

1934. பகிர்முக திருஷ்டியுடையவர்களால் புகழப்படுவதைக் காட்டிலும் அந்தர்முக திருஷ்டியுள்ளவர்களால் நிந்திக்கப்படுவது விசேஷம்.

1935. வெளிவேஷங்களைப் போட்டுக்கொண்டு ஏகாக்கிர புத்தி யின்றிச் செய்யப்படுகிற யோகங்களையும் பகிர்முக நிஷ்டைகளையும் பார்த்துத் தேவர்களும் மனோநிலைமையை அறிந்தவர்களும் நகைக்கிறார்கள்.

1936. முக்குணங்களை இல்லாமற் செய்யவேண்டுமானால் மனத்தை இல்லாமற் செய்யவேண்டும்.

1937. பிரசித்த ஞானியாய்ப் பிரபஞ்சத்தை நோக்கிப் புறப்படுவது தெய்வீகஆக்ஞாரூப அதிகார அவதார புருஷர்களுக்கன்றி மற்றையோர்களுக்கு ஆபத்தை விளைவித்துவிடும்.

1938. உண்மையான வைதீக மதத்திற்கும் சாங்கியமதத்திற்கும் மோக்ஷவாதத்தில் வித்தியாஸமில்லை, ஞானத்திலும் அதை அடைகிற மார்க்கங்களிலும் சிறிதுவித்தியாஸ மிருக்கிறது. ஆரம்ப காலத்தில் பலவித வேறுபாடுகளிருக்கின்றன.

1939. சாங்கியஞான புருஷர்கள் சூரியமண்டல மார்க்கமாக மேற்சென்று ஜீவசுபாவ மார்க்கத்தை விட்டுச் சத்துவகுண நாராயண ஸ்வரூபத்தின் வழியாய்ப் பரமாத்மாவை அடைகிறார்கள்.

1940. உலக வஸ்துக்கள் முதல் ஹிரண்ய கர்ப்பன்வரையுள்ள துக்கங்களை நன்றாக விசாரித்தறிந்தவன் பிரஹ்மத்தை அறிய இச்சிக்கிறான்.

1941. விதேகமுக்தி காலத்திலன்றி ஜீவன்முக்தியில்கூட உண்மையான சாந்தியை அடையமுடியாது.

1942. பாஷாஞானத்தை விரும்புகிறவர்கள் பதவிஞானத்தையும் இச்சிக்கிறார்கள்.

1943. யாதொரு தடையுமின்றி க்ஷேமத்தோடு யோகமார்க்கத்தில் யாரும் செல்லமுடியாது.

1944. பிரபஞ்சக் குருடர்களைக்காட்டிலும் பிறவிக்குருடர்கள் விசேஷம்.

1945. ஒருவன் செய்கிற பாபபுண்ணிய கருமங்கள் அன்றே ஆகாமியமாகமாறி இருபத்திரண்டாவது வருஷத்தில் சஞ்சிதமாக விளைந்து அறுபத்தாறுவது வருஷத்துக் கடைசியில் அனுபவ பிராரத்தமாக முடிகிறது.

1946. ஜாக்கிர சொப்பன புருஷர்களைப் பலத்தாலிழுத்து அவர்களைச் சுழுப்தி புருஷனிலாக்கி மூவரையும் துரியபுருஷனிடத்தில் விட்டு இந்நால்வரையும் அதீத புருஷனிடத்து அழுத்திவிடுதல் துரியபிராணயாமம்.

1947. உடலை வசப்படுத்திக்கொண்டு உடலைக் கருமேந்திரியத்திலடக்கிக் கருமேந்திரியத்தை ஞானேந்திரியத்திலடக்கி

அதைப் பிராணனிலடக்கிப் பிராணனை மனத்திலடக்கி மனத்தைப் பிராக்ஞனிடத்திலும் பிராக்ஞனை ஜீவனிடத்திலுமடக்கி ஜீவனைப் பிரத்யகாத்மாவிற் சேர்த்துச் சைதன்யத்திற் கலந்துவிடுவதுசகஸ்திராப்பிரமேய சகஜயோகம்.

1948. யோகியானவன் யோகமஹிமையால் விஷ்ணு பிரமா சிவன் முதலிய மூர்த்தித் தன்மைகளையும் அடைந்து சிருஷ்டிக்கிரமங்களையும் செய்கிறான்.

1949. ஆனந்தம் பிரீதி கெட்டவிஷயத்தில் நடுக்கம் மனத்தின் பிரகாசம் புண்ணியத்தையே நாடுதல் சந்தோஷம் சிரத்தை நேராயிருத்தல் தியாகத்தில் நாட்டம் ஐஸ்வரியம் இவைகள் சத்துவ குண காரியங்கள்.

1950. ஆஸ்திகத்தன்மை கோடை ஈயாதவனாயிருமை சுக துக்கங்களைச் சேவித்தல் பேதப்படுத்தல் புருஷாகாரம் காமம் குரோதம் மதம்கர்வத்தினாலும் துவேஷத்தினாலுமுண்டாகிற அதிகப்பேச்சு இவைகள் ரஜோகுணகாரியங்கள்.

1951. தாமதம் மோஹம் மஹாமோஹம் தாமிஸ்ரம் அந்ததாமிஸ்ரம் நித்திரை சோம்பல் அஜாக்ரதை போகம் இவைகள் தாமத குணகாரியங்கள்.

1952. கெட்டகுணங்க ளுண்டானபோது சத்துவகுணமானது ஒருமூலையில் பதுங்கி ஒதுங்கிப் படுத்துக்கொள்ளுகிறது.

1953. பிராணிகள் ஒன்றையொன்று பக்ஷிப்பதைக்கண்டு அறிவுள்ளவன் உலகத்தில் வசிக்க கஷ்டப்படுகிறான்.

1954. சாங்கியமதத்திற் பிரவேசித்து ஞானம் பூர்த்தியாகாவிடில் தேவர்களுக்கு அதிகாரியாயிருந்துவிட்டு மீண்டும் பூமியில் பிறக்கிறார்கள்.

1955. பாபத்தை அடியோடு விட்டுவிடுவதுபோலப் புண்ணியத்தையும் விட்டுவிடவேண்டுமென்று சாங்கியமதம் கூறுகிறது.

1956. சகலமதங்களுக்கும் உலகங்களுக்கும் பொதுவான கடவுள் மீறுகிறமதங்களேயும் உலகங்களேயும் தேவர்களேயும் யாரையும் அப்போதைக்கப்போது அடக்கிக் கொண்டுவருகிறார்.

1957. யோகியானவன் யாதொரு சம்பந்தமுமின்றிய ஆத்மாவைப் பார்க்கும்போது பேசுவதற்கு வெட்கப்படுகிறான்.

1958. தீர்த்தயாத்திரை தேசயாத்திரை மூர்த்திதரிசனம் உத்ஸவம் ஜனக்கூட்டம் பிரசங்கம் பலருக்குப் போதித்தல் பேசுதல் அறுசுவையுணவு இவைகளே யோகி விட்டுவிடவேண்டும்.

1959. ஆத்மாவையன்றிய அனாத்ம குணங்களேக்கொண்டே மனிதன் நினைக்கவும் பேசவும் வேண்டியிருக்கிறது.

1960. ஜீவன் தேவத்தன்மை மனிதத்தன்மை நரகத்தன்மை இவைகளே முறையே சத்துவம் ராஜசம் தாமசம் இக்குணங்களால் மாறிமாறி அடைகிறான். மூன்றையும் விட்டவன் பிரகிருதியையும் அடைகிறான்.

1961. உலகத்திலுள்ள அஞ்ஞானகுருடர்கள் பற்பலயாத்திரைகளினாலும், குடும்பக் கஷ்டத்தினாலும், ஆடையாபரணச் சேர்க்கையாலும், ஸ்நானபான ஆகாராதிகளாலும், விரதாதிப்பிடிவாதங்களாலும், பசிமுதலிய வியாதிகளாலும், வேதவிருத்தமான மதங்களாலும், நல்லதும் கெட்டதுமான செய்கைகளாலும், நன்மை தீமையான ஸ்தானங்களாலும், வருணாஸ்ரமதர்மங்களின் பிடிவாதத்தாலும் கஷ்டத்தை அடைகிறார்கள்.

1962. யாதொரு விஷயத்திலும் ஆசையற்றவனே ஒரு அடையாளமுமில்லாத பிரகிருதியானது ஒன்றுஞ் செய்யமுடிகிறதில்லை.

1963. அறிவின்மையாலும் அஞ்ஞானிகளின்சகவாசத்தினாலும் மனிதன் பலபிறப்பையடைந்து மடிகிறான்.

1964. விஷய சுகத்தில் ஆசையுள்ளவன் காட்டிலிருந்தும் நாட்டிலுள்ளவனாகிறான்.

1965. சாத்வீக தைரியமில்லாமல் தர்மஞ்செய்கிறதில் பல னுண்டாகிறதில்லை.

1966. வேதங்களையும் சாஸ்திரங்களையும் படிப்பதில் மாத்திரம் பற்றுதலுள்ளவனும் அதன் அர்த்தத்தினுண்மையை அறியாதவனுமா யிருப்பவனுடை படிப்பு வீண்.

1967. தேவர்களெல்லாம் பிதுர்க்களுடைய புத்திரர்கள்.

1968. ஆத்மதரிசனமின்றிப் பிராணநிரோதம் செய்வதால் வாதரோகம் உண்டாகிறது

1969. பிராணநிரோதம் சகுணயோகம், மனநிரோதம் நிர்க்குணயோகம்.

1970. பிராம்மணன் க்ஷத்திரியன் வைஸ்யன் சூத்ரன் நீசன் ஸ்திரீ யாராயிருந்தாலும் பூரணசிரத்தை மட்டுமுடையவன் ஞானத்தைப்பெற்றுவிடுகிறான்

1971. எந்த ஆஸ்ரமம் எந்தவருணமாயிருந்தாலும் பிரஹ்ம ஞானியாயிருந்தால் உபதேசம் பெற்றுக் கொள்ளலாம்.

1972. அங்கங்கள் உபாங்கங்களுடன் வேதத்தைத் தடையின்றி அத்தியயனஞ்செய்தும் அதன் அர்த்தங்களை உள்ளவாறறிந்தும் அறியவேண்டியதை அறியாதவன் வேதமென்னும் பாரத்தைச் சுமந்தவனாகிறான்.

1973. எல்லா இந்திரியங்களையும் மனத்தினால் ஜெயித்துச் சமாதிபெற்று ஆரூடயோகத்தில் நிலைத்து நின்றவனிடம் மரணம் அணுகாது.

1974. அருந்ததீநக்ஷத்திரமும் துருவநக்ஷத்திரமும் ஒருபோதும் தெரியாதிருந்தாலும் பிறருடைய கண்களில்தன்சாயை தோன்றாதிருந்தாலும் ஒரு வருஷகாலத்தில் மரணமுண்டாகும்.

1975. ஞானத்தில் சாங்கியர்களும் பலத்தில் யோகிகளும் சமர்த்தர்கள்;

1976. உண்மைஞானமுடையவனுக்கு மறைவான விவகாரமே கிடையாது.

1977. மலைபினுச்சியில் ஸ்வர்ணமயமான விருக்ஷங்களைப்பார்க்கிறவன் சீக்கிரத்தில் மரணமடைவான்.

1978. யோகத்தையும் சாங்கியத்தையும் ஒன்றாகப் பார்க்கிறவன் உண்மை தெரிந்தவன்.

1979. மனம் ஒன்று ஒழிவடைந்தால் சகல தத்துவங்களும் ஒழிவடைகின்றன.

1980. வஞ்சகமின்றி உண்மையாக ஒருவன் கேட்டால் தெரிந்ததை மறையாமல் கூறவேண்டும்.

1981. அழகிய வஸ்திரம் வாசனைத் திரவியம் ஸ்திரீக்கை படுக்கை பகல்நித்திரை நடனவாத்தியகானம் இவைகளில் இச்சையுண்டானபோது தமோகுணம் வந்ததென்றறியவேண்டும்.

1982. மிருத்யுவுக்கு அஞ்சுகிறவன் தெய்வத்தையாவது குருவையாவது அடையவேண்டும்.

1983. யோகிகள் வியக்தம் வரையிலும் சாங்கியர்கள் அவ்யக்தம் வரையிலும் செல்லுகிறார்கள்.

1984. அவ்யக்தத்திலிருந்து வியக்த தத்துவமான ஈஸ்வரன் உண்டானான்.

1985. ஞானமும் கர்மமும் வேறு வேறாக இருக்கிறதென்றும் இருக்கவேண்டுமென்றும் கபிலாசாரியர் கூறுகிறார்.

1986. பகிரங்கத்தில் ஸ்ரீராமனையும் அந்தரங்கத்தில் ஸ்ரீ கிருஷ்ணனையும் ஒத்திருக்கவேண்டும்.

1987. மனம் வாக்கு பிராணன் முதலிய கரணங்களால் காணக்கூடாதவர் கடவுள்.

1988. பாபமுள்ளவனை ஸ்ரீராகவரும், பாபம் மட்டுமில்லாத வனை ஹயக்ரீவரும், புண்ணியம் மட்டுமுடையவனை மஹேஸ்வரரும், புண்ணியத்தையும் விட்டவனை ஸ்ரீ கண்ணபிரானும் அங்கீகரித் திருக்கிறார்கள்.

1989. உண்மையான யதிகளுக்கும் அரசர்களுக்கும் தண்டமும் செங்கோலும் பந்தத்தைக்கொடுக்கிறது.

1990. பிரஹ்மத்திலிருந்துண்டானவர்களெல்லோரும் பிராம்மணர்களென்று யாக்ஞவல்கியர் கூறுகிறார்.

1991. பிரஹ்மஞான நிஷ்டையுடையவனெவனோ அவன் உண்மையான பிராம்மணன். எவனாயிருந்தாலும் பிரஹ்ம நிஷ்டையை யுடையவனுக்கு மோக்ஷமுண்டென்று வேதம் கூறுகிறது.

1992. பிராகிருதத்திலுண்டாயிருக்கிற தர்மா தர்மங்களை விட்டவன் யதார்த்தமான யதி.

1993. காஷாயந்தரித்துக்கொள்ளல், முண்டனஞ்செய்து கொள்ளல், மூன்றுதண்டஞ் சேர்த்துத்தரித்தல், கமண்டலம், தோல், இவைகள் தியாகமார்க்கத்திற்குரிய அடையாளங்களே யன்றி ஞானகாரணமாக மாட்டாது.

1994. கர்மேந்திரியங்களால் கிரகிக்க முடியாததும் ஞானேந்திரியங்களால் அறியமுடியாததும் புத்தியினால் கோசரிக்கமுடியாததுமானது அவ்யக்தம்.

1995. உலகமுக்தியை அடைந்தபின் உலகாதீத முக்தியில் இச்சையுண்டாகிறது.

1996. பெரிய மேதாவிகளும் சித்தர்களும் யோகிகளும் பண்டிதர்களும் தேவர்களும் கண்டு மயங்காத பெரிய மயக்கத்தில் மஹான்கள் மயங்கிக்கிடக்கிறார்கள்.

1997. பாரமார்த்தீகம் வியாவகாரிகம் இரண்டிற்கும் ஒன்றைவிட்டு ஒன்றான ஒருசம்பந்தமுண்டு.

1998. பிறப்பு இறப்பு என்னும் பெருஞ் சுழலுக்கப்பால் பேப்மானது வாசஸ்தலமிருக்கிறது.

**1999.** வெளித்தோற்றமும் உள்தோற்றமும் ஒன்றுபோல் அனுபவிக்கிறவன் தியானயோகத்தின் முடிவுகண்டவன்.

**2000.** ஸ்தூல சரீரத்தின் தாதுலாபம் சுக்ல சுரோணித பரிசுத்தம் இவற்றைத்தருவதும் உஷ்ணரோகத்தைப் போக்குவதுமான சக்திவாய்ந்ததில் வாழைப்பூப்போல் வேறு வஸ்து இல்லை.

**2001.** ஹிருதயக்ஷேமத்தை அடைவதற்குமுன் உடம்பின் நோயின்மையான க்ஷேமத்தை அடைந்திருக்கவேண்டும்.

**2002.** சூக்ஷ்ம அறிவுள்ளவர்கள் தன்னை அறிவதிலும் ஸ்தூல அறிவுள்ளவர்கள் தனக்கன்னியமானவைகளை அறிவதிலும் ஈடுபட்டிருக்கிறார்கள்.

**2003.** ஒற்றுமையும் ஒற்றுமையின்மையும் பொருந்திய காலத்தில் உத்தமபுருஷர்கள் அவதரிக்கிறார்கள்.

**2004.** எப்போது மாறாத வைராக்கிய முண்டாகிறதோ அப்போதே சந்நியாஸம் செய்து கொள்ளலாம்.

**2005.** அவஸ்யமாகச் செய்து தீரவேண்டிய கர்மானுஷ்டான காலங்களில் அவற்றிலும் விசேஷகாரியத்தில் பிரவேசித்திருந்தால் அந்த அவஸ்யகர்மங்களை நித்தியமஹரிஷிகள் செய்து முடித்து விடுகிறார்கள்.

**2006.** தீரமில்லாத எண்ணங்களை உடையவர்களுக்குத் தீரமான வசனங்களே அடையாளம்.

**2007.** கர்மானுஷ்டானமே பிரதானமென்றும், கர்மபலப் பிரயோஜனமே முக்கியமென்றும், கர்மபலத்யாகமே விசேஷமென்றும், கர்மசூத்ரநிராசையே உண்மையென்றும், கர்மபலப்பிரதான ஆக்ஞாரூப யீஸ்வர கைங்கரியமே வாஸ்தவமென்றும், நிச்சயித்திருக்கிற கூட்டத்தார்கள் ஆஸ்திக வைதீக சநாதன உண்மை மதத்தில் சஞ்சாரஞ் செய்கிறார்கள்.

**2008.** வேதமார்க்கத்திற்கு விரோதிகளும், குதர்க்கவாதிகளும், சுதந்தரமிழந்தவர்களும்; ஸ்வாதீன புத்தியில்லாதவர்களும்;

தாசி விடர்களும், பரதாரகமனர்களும், மதுமாம்ஸ பக்ஷணிகளும் ஆசுரசம்பத்தையுடையவவர்களும், மஹான்களையும் அவரது வாக்கியங்களையும் தூஷிப்பார்கள்.

2009. பிரஹ்மஞானத்திற்குத் தடையாயுள்ள காரியங்களில் பிரவேசித்தும் தடையென்பதறியாதிருந்தால் அது ஒரு பெருந் தடையான பூதப்பிரதிபந்தம் என்று தெரிந்து கொள்ளவேண்டும்.

2010. கெர்ப்பகாலமுதல் வேதமந்திர சமஸ்கார பூர்வகமாக உண்டானசரீரம் பரிசுத்தமானது அவர்கள் இருபிறப்பாளர்கள்.

2011. பெரியஞான சாஸ்திரங்களைக்கற்றுப்பெரிய ஞானி யென்று பெரிய பெரிய பெயரெடுப்பதைக்காட்டிலும் சிறிய மனத்தைக்சிறிதுகாலம் பரவஸ்துவில் நிறுத்திவைப்பது மஹாவிசேஷம்.

2012. பெரிய குலத்தில் பிறந்தவனும் லஜ்ஜையுள்ளவனும் தீர்க்காலோசனையுள்ளவனுமிருப்பவன் நல்லதானாலும் கெட்டதானாலும் ரகஸ்பத்திற்செய்ததை வெளியிற் சொல்லக்கூடாது.

2013. உபதேசிக்குங்காலத்தில் சொல்லுகிறவன் கேட்கிறவன் சொல்லப்படுகிறவாக்கியம் இம்மூன்றும் முழுதும் ஒத்திருந்தால் அதனுடைய அர்த்தம் பிரகாசிக்கிறது.

2014. சரீரப்பிராம்மணர்கள் மனப்பிராம்மணர்கள் குணப்பிராம்மணர்கள் ஞானப்பிராம்மணர்கள் பிரம்மப்பிராம்மணர்கள் என்று ஐந்துவிதமான பிராம்மணர்களிருக்கிறார்கள். இவர்கள் முறையே படிப்படியாய் உயர்ந்தவர்கள்.

2015. இன்னபடியென்று கண்டுபிடித்தறிய முடியாததும் ஒரேபடியாயிராததுவுமான ஞானமார்க்கமானது அவரவர்கள் பக்குவத்திற்கும் புண்ணியத்திற்கும் தக்கவாறுமாறுபடுகின்றன.

2016. தான் மேன்மை பெருவதற்காகப் பிறரைத் தாழ்வு படுத்தக் கூடாது.

2017. பிராம்மண ஜாதிகளில் நீசர்களும் நீசர்களில் பிராம்மண ஜாதியு மிருக்கிறது.

2018. வேதத்தில் நம்பிக்கையில்லாதவர்களுக்கும் அசத்திய புத்தியுள்ளவர்களுக்கும் ரகஸ்யமாக வஞ்சிக்கிறவர்களுக்கும் மனந் தளர்ந்தவர்களுக்கும் கோணலான புத்தியுள்ளவர்களுக்கும் தான் பண்டிதனென்று பிறரை இகழ்பவனுக்கும் யாதொரு உபதேசமும் செய்யக்கூடாது.

2019. சிரத்தை தைரியம் முதலிய நற்குணங்களையுடையவன், பிறரைக் குற்றஞ் சொல்லாதவன், சுத்தயோகமுடையவன், அறிவுடையவன், குரு சொற்படி நடக்கிறவன், சுகதுக்கங்களைச் சகிக்கிறவன், ஹிதன், சுத்தன், சீலன், விகிதகர்மத்தில் பிரியமுடையவன், விசேஷமாக வாதஞ்செய்யாதவன், வேத உண்மை தெரிந்தவன், சொன்னதை அறிகிறவன், அடக்கம், பொறுமை, உதாரம், தியாகபுத்தி, இவைகளையுடையவன், ஓரிடத்தில் மனதை நிறுத்துவதில் சமர்த்தன், இவர்களுக்கு உபதேசிக்கலாம்.

2020. உலக சிருஷ்டிகளையும் தத்துவ சிருஷ்டிகளையும் அதன் லக்ஷணங்களையும் உற்பத்திக் கிரமங்களையும் உத்தமமான ஞானப்பியாசிகள் கவனிக்க வேண்டியதில்லை.

2021. தன்னைவிட்டு மற்றைய இடங்களில் கடவுளைக்காண விரும்புகிறவன்போல் மூடன் உலகிலில்லை.

2022. வேறுபட்ட எண்ணமுடையவர்கள், வியாதியால் மெலிந்தவர்கள், மனதில் ஆசையில்லாதவர்கள், விரதம் பூண்டவர்கள், கெர்ப்பமுடையவர்கள், ரஜஸ்வலையானவர்கள், இந்த ஆறு ஸ்திரீகளையும் எந்தப் புருஷர்களும் சேரக்கூடாது.

2023. சூரியகலையில் அக்னிச்சரம் ஓடும்போது பாய்கிற ரேதஸ்ஸினால் உத்தமமான ஞானி உற்பத்தியாகிறான்.

2024. பரப்பிரஹ்ம பரவாசுதேவ ஸ்ரீமந்நாராயண சர்வேஸ்வர சகுணமூர்த்தியை உத்தமமான சாத்வீக பக்தர்கள் சூக்ஷும நாதபிந்து தேஜோமய சரீரத்துடன் ஸ்வேததீபம் சென்று தரிசித்துத் திரும்புகிறார்கள்.

2025. எவன் உலகத்தை வேறாகவும் அன்னியமாகவும் பார்க்கிறானோ அவன் மிருத்யுவை அடைகிறான்.

2026. உண்மையாக ஞான யோக மோக்ஷ மார்க்கங்களிற் செல்லப்பட்டவர்கள் ஸ்துதி நிந்தை இவைகளை அற்பமேனும் கருதமாட்டார்கள்.

2027. இச்சையுண்டாகிற இடமும் நினைப்பு உதயமாகிற ஸ்தானமும் ஒரே இடமாயில்லாதிருந்தாலும் ஒரேசாதனத்தால் நீக்கிவிடலாம்.

2028. உலகங்களிலுள்ள எல்லாமதத்திற்கும் பூமிகளுக்கும் பொதுவான ஓர் குரு தெய்வம் வேதம் ஞானம் இந்நான்கும் இருக்கிறது.

2029. உத்தமமான ஞான யோகத்தைக்கண்டு கொண்டவன் உறுதியான எண்ணங்களையும் வசனங்களையும் நிறுத்திவிடுகிறான்.

2030. பெண்ணையும் பொன்னையுங்கண்டு எவன் மனது நடுநடுங்குகிறதோ அவன் அபூர்வ பூர்வ புண்ணிய பாக்கியசாலி.

2031. புதிதானவார்த்தைகளையும் விஷயங்களையும் சொல்லி மனதை மயக்குவது போதிப்பவர்களுக்கு லக்ஷணமல்ல.

2032. யோகஞான மார்க்கங்கள் ஒன்றை உத்தேசித்து அப்பியாஸம் செய்து கொண்டுபோகும்போது உத்தேசமல்லாத மற்றோரனுபவம் வெளியாகிறது.

2033. தேவமனுஷ்யர்களுடைய மனமானது ஒரேபடியாயிராதானபடியால் ஒருவனை முன்னுள்ள நிலைமைபோல் எப்போதும் நினைத்துவிடக்கூடாது.

2034. யாதொரு விரிப்புமின்றிப்பூமியிற் சயனித்துக் கொள்ளுகின்றவர்களுடைய கெட்டகுணங்களுள்ள தமோகுண அசுத்தரத்தங்களையும் மனத்தின் விகாரகுண சேஷ்டைகளையும் பூமியின் அபூர்வசக்திகள் ஆகர்ஷித்துக் கொள்ளுகின்றன.

2035. உத்தமமான சத்துவகுணமார்க்கத்தின்படியும் வேதத்தின் தாத்பரியத்தை அனுசரித்தும் மோக்ஷமார்க்கத்திற்கு விரோதமில்லாததாயுமுள்ள மஹரிஷிகளின் கொள்கைகளை யொட்டியே எல்லாவிதப்பிரவிர்த்தியையும் செய்யவேண்டும்.

2036. புத்திமானானவன் உலகவிஷயங்களில் எதையும் எந்தப்படியும் நிச்சயித்துவிடக்கூடாது. நிச்சயத்திற்கு விரோதம் வந்தால் மனது சலன மடையும்.

2037. சாளக்கிராமம் சிவலிங்கம் இவைகளைப் பூஜை செய்து புத்திசாலி பிரஹ்மத்தைக்காண இச்சிக்கமாட்டான்.

2038. கர்மானுஷ்டானம் கர்மநிஷ்டை யோகாப்பியாஸம் யோகநிஷ்டை மந்திராப்பியாஸம் மந்திரஷ்நிடை ஞானப்பியாஸம் ஞானநிஷ்டை தியானம் பாராயணம் மந்திரசமாதி மந்திரஜெபம் வேதாத்திய யனம் இவைகளை நடந்துகொண்டும் நின்று கொண்டும் சாய்ந்து கொண்டும் படுத்துக்கொண்டும் பூமிக்குமேல் உயரமான இடத்திலிருந்து கொண்டும் செய்யலாகாது.

2039. பேராசையினால் அதிக ஆகாரமுண்பவர்களையும், தன்னுடைய ஆஸ்ரமகாரியங்களில் உறுதியில்லாத சந்நியாசிகளையும் ஒழுங்காகக் குடிகளைப் பாதுகாப்பதைவிட்ட அரசனையும்; சொந்த மனைவியை விட்டுப் பரதாரத்தினிடமும் தாசிவேசிகளிடத்திலும் சென்றவர்களையும், எமதருமராஜன் தன்னுடைய சொந்த உலகத்திற்கு அழைத்துக்கொண்டு போகிறான்.

2040. பூலோகம் புண்ணியகருமம் செய்வதற்குத்தகுந்த இடம் ஸ்வர்க்கம் போகம் அனுபவிப்பதற்குத்தகுந்த இடம்.

2041. ஒரே ஹிருதயமே, சங்கல்பம் புத்தி மனம் அகங்காரம் சித்தம் உள்ளம் இவைகளாகி அகத்திலும் புறத்திலும் உலாவுகின்றன.

2042. சாதுவல்லாதவனோடு பழகினால் மூன்றுநாள் உபவாஸமிருக்கவேண்டும்.

2043. ஒன்றிலும் சேர்க்கையற்றிருப்பவனுக்குத் தூக்கமேயில்லை.

2044. பசு குதிரை ஆடு முதலியவைகளை ஹிம்ஸை செய்யப்படுகிற யாகத்தை யஜுர்வேதம் பலமாகத் தடுத்திருக்கிறது.

2045. ஒரு முகூர்த்தகாலம் எவன் சர்வ இந்திரியங்களையும் நிறுத்தி ஆத்மவிசாரணை செய்கிறனோ அவன் ஜென்ம முடிவில் முக்தனாகிறான்.

2046. அதிரகஸ்யமான விஷயங்களை வெளியில் எழுத ஆரம்பித்தால் பூரணமாகாத மனதுடையவர்கள் மயங்குவார்களென்று சுருக்குகிறேன்.

2047. மனோசங்கல்ப பாவனாமுதிர்ச்சியினால் உருவத்தோற்றமும அதன் அன்னியமான வரங்களுமுண்டாகின்றன.

2048. கண்களிலிருந்து கண்ணீர் விடுகிற பக்தி பயங்காளித்தனமுடையது.

2049. ஸ்தூலசரீரத்திலுள்ள நூற்றெட்டு நாடிகளில் நடுவிலுள்ள பெரியநாடியின் வழியாகச் செல்லுகிற ஜீவன் ஜென்மிக்கிறதில்லை.

2050. சர்வ ஜீவர்களும் மெல்ல மெல்லப் பரமபுருஷனை அதாவது பரமாத்மாவை நோக்கிச் சென்ற வண்ணமாயிருக்கின்றனர்.

2051. யாதொரு முயற்சியு மின்றித்திடீரென்று நிருவிகல்ப சமாதி வந்து விடுவது அதீதயோகம்.

2052. உலகவஸ்துக்களைக் கண்டபடி உபயோகிப்பவர்கள் பரமேஸ்வர தண்டனைக்கு உட்படுகிறார்கள்.

2053. சுழுப்தி பிராக்ஞனுக்கும் துரிய கூடஸ்தனுக்கும் அன்னியமற்ற சம்பந்தமுண்டு.

2054. ஏழாவது உப்பரிக்கையின் மேலிருந்து கொண்டு கீழிறங்காமல் அழகிய ஹம்ஸதூளிகா மஞ்சத்தின் மீது வசித்துப் பருவமுடைய ரம்யமான பிரபுத்தன்மை வாய்ந்த பால்யப் பெண்களோடு விளையாடிக் கொண்டு அமிர்தபானம் பண்ணி. அளவற்ற சைன்யம் யுத்தவீரர்கள் இரத்தினக் குவியல்கள் திரவ்ய மூட்டைகள் இவைகளையுடைய அரசர்களிலும் திருப்தி யில்லாத தரித்திரனுண்டு, நாளைக்கும் அடுத்த வேளைக்கும் ஆகாரமின்றி உடுக்க உடை

யின்றிப் படுக்கப் பாயின்றி இருக்க இடமின்றிப் பிக்ஷையேற்றுண்டு சஞ்சரிக்கும் ஏழைகளிலும் திருப்தி கொண்டதன வந்தனுண்டு.

2055. உலகத்தை ஒரு குடையின் கீழ் அரசாக்ஷி செய்கிற கீர்த்தி வாய்ந்த சக்கிரவர்த்திக்கும் எவ்வளவு அளவில்லாத தான்யங்களிருந்த போதிலும் தன்வயிற்று அளவுக்கே உபயோகிக்க முடிகிறது. பெரிய விஸ்தாரமான அரண் மனையிருந்தும் ஒரேகட்டடமும் அதிலும் ஓர் அறையும் அதிலும் ஓர் சப்ரமஞ்ச ஹம்ஸதூளி மஞ்சமும் மெத்தையும் கிடைக்கிறது. அதில் பாதி ராஜஸ்திரீ பிரித்துக் கொள்ளுகிறாள். எத்தனை குதிரை ரதம் யானை இருந்தாலும் தனக்கு உபயோகமுள்ளது ஒவ்வொன்றே பெயர் மாத்திரம் உலகம் முழுமையும் ஆளுகிற அரசன்.

2056. யாரார் எத்தகைய அற்புதங்களைச் செய்திருந்த போதிலும் செய்தாலும் அவைகள் சர்வேஸ்வரரால் செய்யப்பட்டதென்றெண்ண வேண்டும்

2057. ஆத்மஞான மில்லாத ஒரு காரணத்தினால் ஒருவரையொருவர் ஹிம்சிக்கவும் வாழ்த்தவும் யாசிக்கவும் கொடுக்கவும் தூஷிக்கவும் பூசிக்கவும் செய்கிறார்கள்.

2058. மூன்றாசைகளை வெறுத்து அன்ன ஆகாரமின்றி ஆரண்யத்தில் தவஞ் செய்து கொண்டிருப்பவர்களிலும் ஸ்வர்க்க போக ஆசையுடையவர்களு மிருக்கிறார்கள்.

2059. சாஸ்திரங்களாலும் வேதங்களாலும் சில சந்தேகங்களும், குரு உபதேசத்தால் சில சந்தேகங்களும், ரிஷிகளின் அனுஷ்டானங்களால் சில சந்தேகங்களும், தீருகின்றன. பிரஹ்மானுபவ காலத்தில் சகல சந்தேகங்களும் தீருகின்றன.

2060. அடைந்த வஸ்துவை அடையவில்லை யென்றெண்ணுவது அஞ்ஞான மென்றும், அடைந்து விட்டோ மென்றெண்ணுவது ஞானமென்றும், அடைந்ததையும் அடையாததையும் விட்டு விடுவதே மோக்ஷ மென்றும் ஏகாத்மாவாதிகள் கூறுகிறார்கள்.

2061. ஈஸ்வரன் மாயை பிரகிருதி ஜீவன் பஞ்சமூர்த்திகள் இவர்களைப் பிரஹ்மம் போல் அநாதியாக சுருதி கூறவில்லை;

2062. சர்வகதிகளின் சொரூபமும் தெரிந்து கொண்டவர்கள் ஒரு கதிகளிலும் செல்லாமல் ஸ்வகதியில் நிலைத்து விடுகிறார்கள்.

2063. எவன்மனது துரியானுபவத்திற் சென்று உடனே கீழிறங்க ஆரம்பிக்கிறதோ அவனுக்குப் பகிரங்க உலகபோகப் பிராரத்தம் பலமாயிருக்கிறது.

2064. ஜாக்கிர புருஷனும் சொப்பன புருஷனும் ஒன்று, சுழுப்தி புருஷனும் துரிய புருஷனும் ஒன்று.

2065. மஹத்துக்களும் வேதமும் பிரஹ்மத்தையே வைகுண்டம் கைலாஸம் என்று கூறுகிற வழக்கம்.

2066. ஆத்மப்பிரஹ்மஞானம் அடையமுடியாமல் நிஷ்காமகர்மம் அனுஷ்டிப்பவன் சாங்கியர் பதவியை அடைகிறான்.

2067. ஞானேந்திரியங்களுடன் மனதை அலையாமல் நிறுத்துவது ஐம்பூடக யோகம்.

2068. மோக்ஷ ஆசையால் ஞானம் பழகுவனும் மயக்கமுடையவன்.

2069. நிருவிகல்ப சமாதியில் சப்த இந்திரியம் அடங்கும்.

2070. குருப்பிரசாத மின்றி ஆத்ம அனாத்ம விசாரணை கிடைக்காது. அஞ்ஞானமும் நீங்காது.

2071. சம்சாரத்திற்குள்ளகப்பட்டுக்கொண்டு ஞானம் பேசுபவர்கள் அற்பபுத்தியுள்ளவர்கள்.

2072. பஞ்சமூர்த்திகளுக்கும் ஆதாரதெய்வம் யாரோ அவரை நாமும் அடையவேண்டும்.

2073. எந்தெந்த விஷயத்தில் எவனெவன் மனம் பிரமாணத்துடன் தீவிரமாகச் செல்லுகிறதோ அந்தந்த விஷயத்தை அவனவன் அப்படியே யாதொரு தடையுமின்றி முடித்து விடுகிறான்.

2074. எல்லாப் பிரபஞ்சங்களும் அதிலுள்ள சகல வஸ்துக்களும் ஜேகத்ரக்ஷக ஜெகதீஸ்வரனது சிருஷ்டியிலுண்டானதும் அவருக்குச் சொந்தமானது மாகையால் உலக வஸ்துக்களை உண்மையறிந்தவர்கள் அளவுக்கு மீறி உபயோகப்படுத்தமாட்டார்கள்.

2075. உருவமில்லாத பரமாத்மாவை அடைவதற்கு ஞானயோகமும் உருவமுள்ள மூர்த்திகளையடையப் பக்தியோகமும் தகுதியானது.

2076. எவனிடத்தில் சக்தி அதிகரித்திருக்கிறதோ அவனைத் தெய்வமென்று பிரஜைகள் சொல்லுகிறார்கள்.

2077. உலகத்தார் ஒருவரும் நம்மைக்குற்றஞ் சொல்லக் கூடாதென்றெண்ணுவது குற்றம்.

2078. உண்மையான மதபக்தியுள்ளவன் உள் சாதனங்களை அனுஷ்டிப்பதுபோல வெளிச்சாதனங்களையும் தவறாமல் அனுஷ்டித்துவரவேண்டும்.

2079. முயற்சிசெய்து தொனியை விளைவிக்கின்ற வீணை வேணு இவைகளைக்காட்டிலும் இயற்கையாகச் சப்திக்கின்ற குயில் கிளி முதலிய பக்ஷிகளின் கீதங்கள் இனிமையானது.

2080. பிதா, பாட்டன், முதலியவர்களே அநேகமாகப் பேரன் புத்திரர்களாகப்பிறக்கிறார்கள்.

2081. எந்தக்காரியத்தைச் செய்ய ஆரம்பித்தபோதிலும் நினைத்தபோதிலும் தன்னைத்திரும்பிப்பார்த்துக்கொண்டு தன்னுடைய ஆஸ்ரமம் ஜாதி அந்தஸ்து காலம் இடம் தேசம் இயற்கை சக்தி இவைகளுக்கேற்றவாறு நடந்துகொள்ள வேண்டும்.

2082. தர்க்கம் முதலிய அனாத்ம சாஸ்திரங்களைக்கற்றவர்கள் பல விஷயங்களில் தர்க்கஞ்செய்து விட்டுப் பிரஹ்மத்தினிடமும் தர்க்கஞ்செய்ய வந்து விடுகிறார்கள்.

2083. பஞ்சேந்திரிய ஞாபகமற்று மனதை ஒருமுகப்படுத்தி ஓங்காரத்தின் தொனியை எழுப்பி மெல்லமெல்ல அந்த நாதத்தின் பிந்துவில் நாட்டம் வைத்துப் பழகப்பழக நாதாந்தம் பிரசன்ன மாகிறது.

2084. அளவற்றகாலம் சாஸ்திராப்பியாசத்தினுலுண்டாகக் கூடிய பலனை சில நாளிகை நேரமுள்ள சாதுசங்கம் கொடுத்து விடுகிறது.

2085. கண்பார்ப்பதாலும் காதுகேட்பதாலும் வாக்கு வசனிப்பதாலும் கால் நடப்பதாலும் கை உபயோகிப்பதாலும் கோபம் ஆசை துவேஷம் பொறாமை இவைகளுக்கு இடங்கொடுப் பதாலும் உள்ளிருக்கிற ஆத்ம சக்தியானது மெல்லமெல்ல வெளி யிற் சென்ற வண்ணமாயிருக்கின்றன.

2086. பிரஹ்மவஸ்து ஒன்றைத்தவிர மற்றெல்லோரும் ஆத் மாவை அகங்காரத்தை மனத்தை உலகத்தை உடலை விஷயங்களை ஆஸ்ரயித்தவர்களாயிருக்கிறார்கள்.

2087. சத்துவ குணத்திலிருந்துண்டான தர்மம் ஞானம் வைராக்யம் ஐஸ்வர்யம் இந்த நான்குமே மோக்ஷத்திற்குத்தடை யாயிருக்கின்றன.

2088. முக்குணங்களாலுண்டாகிற பதவிகளும் சுகங்களும் நிலையற்றன வென்றெண்ணியேஸ்ரீமந்நாராயணமூர்த்தி க்ஷீராப்தியில் ஏகாந்தமான நிஷ்டாநித்திரையிலிருக்கிறார் பிரம்மதேவர் ஸ்வேத தீப கற்பத்திலுள்ளவைஜயந்திபருவதத்தில் எப்போதும் தனிமை யான பிரம்மசாரியாகவே இருக்கிறார். பகவான் விஸ்வேஸ்வரர் உலக இன்பங் குடிகொண்ட மன்மதனை எறித்துவிட்டுக் கடுமையான தபஸ் செய்கிறார்.

2089. அசத்தல்லாத பரமாத்மாவினிடம் ஹிருதயத்தை அடையச்செய்து நிலைபெறச் செய்தவனெவனோ அவனே சத்திய வான்.

2090. சத்தியவஸ்துவில் அசத்தியம் பேசாதிருத்தலும் அசத்திய வுலகத்தில் அசத்தியஞ் சொல்லாதிருத்தலும் சத்திய மென்று தேவர்கள்கொண்டாடுகிறார்கள்.

2091. பிரஹ்மத்திலும் வேதத்திலும் ஆதரவில்லாத யோகம் ஞானம் கர்மம் பக்தி உலகம் இவைகளை அறிவுள்ள ரிஷிகள் ஆதரிக்கவில்லை.

2092. காலத்தை எதிர்நோக்கியே சிருஷ்டிகர்த்தர்களும் தங்கள் காரியங்களைச் செய்கிறார்கள்.

2093. யோசியாமலும் முயற்சியில்லாமலும் தானே வருகிற உலக போகங்களின் வஸ்து சாஸ்திரசம்மதமாயிருக்குமானால் ஏற்றுக் கொள்ளலாம்.

2094. சூரியசந்திரர்கள் மற்ற கிரகங்கள் சப்தரிஷிகள் திக்பாலகர்கள் பஞ்சமூர்த்திகள் சக்திகள் குரு இவர்களை வேறுவேறாக உபாசிப்பதைக் காட்டிலும் அனைவரையும் பரமாத்மாவாக உபாசிப்பது விசேஷம்.

2095. புருஷர்களாய்ப் பிறந்தவர்கள் பெண்களின் சுகத்தைப் பூர்ணமாக அனுபவித்துப் பாராமல் துறவுபூண்டு விடுவார்களானால் அவர்களது மனத்தைவிட்டு அவ்வாசை அகலாதென்று வல்லப மதாசாரியர் கூறுகிறார். அவர் அனுபவம் அவ்வாறிருக்கிறது.

2096. சகலவேத சாஸ்திர அனுபவமில்லாத தேசங்களில் உண்மைஞானம் பிரதிபலிக்கிறதில்லை.

2097. எதுவந்தாலும் மாயையின் தோற்றமென்று ஆரம்ப யோகிகளும் பிரஹ்மத்தின் அம்சமென்று மத்திமயோகிகளும் ஒன்று நினையாதிருப்பது உத்தமயோகிகளுமாக ஆகின்றனர்.

2098. ஞானம் யோகம் ஆஸனம் மந்திரம் கர்மம் சமாதி நிஷ்டை அத்தியயனம் இவைகளுக்குக் குருமுகமாயின்றிச் சாஸ்திர ஞானத்தைக் கொண்டு அனுஷ்டித்தால் குற்றமுண்டாகிறது.

2099. புண்ணியத்தினுலுண்டாகக்கூடிய ஸ்வர்க்கமும் பாபத்தினுலுண்டாகக்கூடிய நரகமும் அதிக வித்தியாசமுடையன அல்ல.

2100. தேவர்கள் பிதுர்க்கள் மனிதர்கள் மிருகங்கள் புழுக்கள் பற்பல ஜந்துக்கள் பறவைகள் மரம் செடி கொடிகள் இவைகளை எப்போதும் எந்த விஷயத்திலும் அலக்ஷியம் செய்யக்கூடாது

2101. ஆத்மஞான மில்லாததாலும், இந்திரியங்களை அடக்க முடியாததாலும், மனோ விருத்தியை இஷ்டம்போல விடுவதாலும், ஆசை கோபம் உண்டாவதாலும், அதிக சங்கல்பத்தினுலும், இது என்னது இது பிறருடையது என்றபேத எண்ணத்தினுலும், கெட்டகாரியங்களைச் செய்வதனுலும், கெட்ட ஆகாரங்களை உண்பதனுலும், கெட்ட தேசங்களுக்குப் போவதனுலும், அதிக விவகாரத்தினுலும், தீமைகளை உண்டுபண்ணுவதாலும், இது கிடைக்கவில்லை இது கிடைத்து விட்டது என்ற எண்ணங்களினுலும், கெட்டகாலத்தினுலும், துற்ஜனர்களின் பழக்கத்தினுலும், கெட்ட பதார்த்தங்களை நினைப்பதனுலும், அதிக ஆகார முண்பதாலும், அளவு கடந்த ஸ்திரீ சங்கத்தாலும், பரதாரச் சேர்க்கையாலும், பூர்வ ஜென்ம சாபபாபத்தினுலும், பெரியோர்கள் ஸ்திரீகள் சாபத்தின் வன்மையாலும், நாடிகளின் தடுமாற்றத்தினுலும், பிராணவாயு அதிகமாக ஓடுவதனுலும், அதிக வசனத்தினுலும், அன்னியர்களின் திரவ்யங்களை அபகரித்ததினுலும், பிரஜைகளுக்கு வியாதி உண்டாகிறது.

2102. மறுபிறப்பில்லாத தன்மை வாய்ந்தவர்களுக்குப் பிரபலமான முயற்சியின்றி சகல மோக்ஷசாதனங்களும் குணங்களும் வலுவில் வந்தடைகின்றன.

2103. பிரபஞ்ச சிருஷ்டிகள் ஒரே விதமாயிருப்பதில்லை. ஒவ்வொரு சிருஷ்டியிலும் ஒவ்வொரு விதமாயிருக்கின்றன.

2104. அனித்தியமான சிருஷ்டிகளைச் சொல்வதற்கு வேத புருஷனுக்கு அபிப்பிராய மில்லாதிருந்தாலும் மந்த புத்தி சாலிகளைக் குறித்து ஜீவகாருண்யத்தோடு சொல்லுகிறது.

2105. பரிபக்குவ அதிகார நோக்கிப் போதிப்பதை விட்டு எல்லோருக்கும் எல்லாவிஷயத்தையும் போதிப்பதால் உபதேச நஷ்டமும் தீமைகளு முண்டாகின்றன.

2106. ஆசனசித்தியின்றி யோகாப்பியாஸம் செய்ய ஆரம்பித்தால் பலவித நோய்களுண்டாகும்.

2107. பிரஹ்மத்தின் அனுபவஞான மில்லாதவர்கள் வாதனை நீக்கிய நிஷ்காம கர்மம் செய்து வரவேண்டும்.

2108. ஆபாசவாதம் அவச்சேதவாதம் இரண்டில் ஜீவர்களின் பரிபக்குவ நோக்கி இரண்டு வாதத்தையும் ரிஷிகள் ஒப்புக்கொள்ளுகிறார்கள்.

2109. அறிவினால் வரக்கூடிய பதவிகள் மனைவி சிஷ்யன் செல்வம் இவைகளைக் காட்டிலும் அன்பினால் வந்தவை விசேஷமானது.

2110. வீணாகச் சுக்கிலத்தை விடுகிறதனாலும் கண்ட இடங்களில் விழுவதனாலும் பாபமுண்டாகிறது.

2111. பெரிய பிரசித்தி பெற்ற மதங்களுங் கூடக்காலத்திற்கேற்றவாறு தோன்றி மறைகின்றன.

2112. உலகமும் சரீரமும் நிலை பெற வேண்டிய அளவுக்கு ஒவ்வொருவரும் காமிய கர்மங்களைச் செய்வதால் மோக்ஷமார்க்கத்திற்குச் சகாயம் செய்ததாகிறது.

2113. மனமானது ரஜோதமோ குணங்களினின்றும் விடுபட்டுச் சுத்த சத்துவ சங்கல்பமயமாகி அதையும் நழுவ விட்ட காலத்தில் பரமமான சாந்தி சொரூபமாகிய சைதன்னிய வஸ்து பிரகாசிக்கிறது.

2114. ஒவ்வொரு ஆஸனங்களும் யோகாப்பியாஸ காலங்களிலுண்டாகிற நோய்களை நன்றாகத் தீர்த்து விடுகின்றன.

2115. பிறருடைய நன்மை தீமைகளை நாடுவதால் தபோபலம் குறைகிறது.

2116. அன்னத்தால் ரத்தத்தைக்கொடுத்தும் பேசுவதற்கு வாக்கையும் நினைப்பதற்கு மனத்தையும் சரீரம் விழாமலிருப்பதற்குப் பிராணனையும் உடம்பிற்கு வேண்டிய சகல சாதன வஸ்துக்களையும் ஜீரணிப்பதற்கு அக்கினியையும் மாதாவின் கெர்ப்பத்திலிருந்து இதுவரை ரக்ஷித்துவந்த சர்வேஸ்வர எம்பெருமானை மறந்து விடுவதால் செய்த நன்றி கொன்ற தோஷம் பலமாயுண்டாகிறது.

2117. ஞானசாதனங்கள் பலவற்றிலும் ஹிருதயசுத்தமும் புத்தியின் கூர்மையுமே விசேஷம்.

2118. உருவமுடையவர்கள் எவருயிருந்தாலும் கட்டுப் பாடுடையவர்களென்று வேதமும் மஹரிஷிகளும் கூறுகிறார்கள்.

2119. ஞானிகள் அனுபவம் ஒன்றாயிருந்தாலும் சரீரச் செய்கைகள் அவரவர் பிராரத்தப்படி நாநாவிதமாயிருக்கின்றன.

2120. காமியத்தவம் மட்டு முடையவர்களைச் சித்தர்களென்றும், நிஷ்காமியத்தவம் மட்டுமுடையவர்களை ஞானிகளென்றும் இரண்டு தவமுடையவர்களை ரிஷிகளென்றும் அறிந்து கொள்ள வேண்டும்.

2121. பாரமார்த்தீகவைதீக ஞான திருஷ்டியினால் உலகமெல்லாம் பார்க்கும்போது ஒருவிஷயத்தில் உறவாகவும் மற்றொரு விஷயத்தில் விரோதமாகவும் தோற்றுகிறது.

2122. வெளியிலுள்ள உலகபோகங்களை அடியோடு விட்டவர்களாக விருந்தபோதிலும் உள்ளில் விட்டவர்களாகச் சொல்லிவிட முடியாது.

2123. யாரும் தன் சரீரத்திற்குரிய செயல்களைத்தானே செய்து கொள்வது நலம், கருமயோகிகள் யோகாப்பியாசிகள் ஞானிகள் இவர்களுக்கு உத்தமமான அன்புகொண்ட சிஷ்யர்கள் செய்யலாம்.

2124. காமம் உண்டானபோது ரேதஸை உபயோகிப்பதை விட்டு வித்தையோடு கூடின விசனத்தை உபயோகிக்கவேண்டும்,

2125. பிரவிர்த்தி நிவிர்த்தி இரண்டையுந்தாண்டியவன் பிரஹ்மத்தை அடைகிறான்.

2126. சாதன அனுபவம் சாத்திய அனுபவம் யுக்தி அனுபவம் சுருதி அனுபவம் என வசன அனுபவம் ஐந்து வித அனுபவங்களும் அந்தந்த அனுபவத்தையுடைய சாஸ்திரங்களுமிருக்கின்றன.

2127. தான் பெரிய அனுபவ ஞானியாயிருந்தாலும் தனது உன்னத அனுபவ சாதன சாத்தியங்களை உலகத்தார்களுக்குப் பகிரங்கப்படுத்துவது பிசகு.

2128. பார்க்கப்பார்க்க இன்பமாயிருக்கிற வஸ்துக்களெல்லாம் எமலோக சினேகிதமானவைகளென்று விலக்கிவிடவேண்டும்.

2129. அவரவர்களுக்கு மனோ சங்கல்பமுண்டாவதே சிருஷ்டி உண்டாவதென்றும் சங்கல்பமொடுங்குவதே சிருஷ்டிலயமென்றும் ரிஷிகள் கூறுகிறார்கள்.

2130. கர்மாவானது ஞான சாதனமென்று பயனைவிரும்பாமல் யாதொரு சந்தேகமுமின்றிச் செய்கிறவன் அதன் சித்தியை அடைகிறான்.

2131. அழிகிறசித்தியை விரும்பாவிடினும் அழியாத சித்தியை விரும்பியே தீரவேண்டும்.

2132. சாஸ்திரக்கண்ணால் கடவுளை அறிந்தவர்கள் ஞானக்கண்ணால் அறிவது முடியாத காரியமல்ல.

2133. பாஷாஞானமின்றி ஆத்மஞானமடைவது அவ்வளவு சிரேஷ்டமல்ல.

2134. ஒவ்வொருதேசத்தார்களும் தன்தன் தேசபாஷைகள் விருத்தியடைவதற்கு முயற்சிசெய்வது பெரிய தர்மமும் தவமும் ஆகிறது.

2135. தன் சொந்த பாஷையையன்றி மற்றெந்த பாஷைகளையும் மேன்மையென்றெண்ணக்கூடாது;

2136. சொந்த தேசம் பாஷை மதம் வேதம் சாஸ்திரம் மலை ஆறு க்ஷேத்திரம் பக்தர்கள் ஞானிகள் கொள்கைகள் அனுஷ்டானங்கள் ஜனங்கள் இவைகளைக் கவனித்துப் பூர்த்திசெய்தான பின்பே வேறுதேச விஷயங்களைக் கவனிக்கவேண்டும்.

2137. எந்தெந்த பாஷையை எவனெவன் விருத்தி செய்கிறானோ அவனுக்கு அந்தந்த பாஷையின் அதிதேவதையினது அனுக்கிரகம் உண்டாகிறது.

2138. ஞானப்பியாசிகள் யோகிகள் பக்தர்கள் இம்மூவரும் சர்வேஸ்வரன் சாதுக்கள் இவர்களது பெருமையைத்தவிர அரசர்கள் பிரபுக்கள் பண்டிதர்கள் இவர்களைப் பற்றியும் பெருமையைப் பற்றியும் பேசவும் நினைக்கவும் பேசுகிறவர்களுக்கு இடமும் கொடுக்கவும் கூடாது.

2139. பல பிராணிகள் கூடியிருந்தாலும் தான் ஒருவனாயிருந்து சந்தோஷிக்கிறவன் உத்தமஞானி.

2140. தர்மம் அதர்மம் சத்தியம் அசத்தியம்பாபம் புண்ணியம் இவைகளைத்தள்ளிவிட்டு இவற்றையெல்லாந் தள்ளிய மனத்தையும் தள்ளிவிட்டபோது தானே விளங்குவது ஞானப்பிரகாசம்.

2141. நன்மைபோலத் தோற்றுகிற உலக வஸ்துக்களைத் தீமைபோலப் பார்க்கிறவன் சீக்கிரம் வைராக்ய ஞானத்தை அடைகிறான்.

2142. தேசத்திற்குண்டாயிருக்கிற துக்கத்தைக் குறித்து வருத்தப்படுவதைக்காட்டிலும் நிவிர்த்திக்க வழிதேடுவது சிலாக்கியம்.

2143. சூர்யபகவானுடைய முகத்திலிருந்து ஆதியில் வெளிவந்த பாஞ்சராத்திரத்தை முதல்முதலில் உபரிசரன் என்ற பெரிய ராஜரிஷி பலமாக அனுஷ்டித்துவந்தான்.

2144. முதிர்ச்சிபெற்ற உண்மைஞானிகளுக்கு மட்டும் காடும் வீடும் ஒன்றாகத்தோற்றும்.

2145. தபசு செய்யும் போது ரேதஸ் வெளி வந்தால் தபம் குறையும்.

2146. சரீரசுகத்தையும் ஆகாரசுகத்தையும் விரும்புகிறவனுடைய தபசு வீணனது.

2147. திரிகுணரகித ஞானிகளுக்கு ஈஸ்வரனும் ரிஷிகளும் சமானமாக மாட்டார்கள்.

2148. சிருஷ்டிகர்த்தர்களான ரிஷிகளுக்கும் பிரகிருதியினின்றுண்டான மூர்த்திகளுக்கும் அகங்காரபாவனை போகமாட்டாது.

2149. மனமானது எந்தப்பாவனையோடு எந்த ரூபத்தைத் தியானிக்கிறதோ அந்தப்பாவனை முதிர்ந்தவுடன் அந்த ரூபம் பிரசன்ன மாகிறது.

2150. சகல சாஸ்திரங்களும் ஆசையைக் காட்டி மறைத்துக் கொண்டே வந்து கடைசியில் பிரஹ்மத்தைப் போதிக்கிறது.

2151. மௌனத்தால் ஞானபலமும் தானத்தால் பெரிய கீர்த்தியும் சத்திய வார்த்தையால் பேசுந் திறமையும் உண்டாகின்றன.

2152. பிராணன் சிரத்தை ஆகாயம் வாயு அக்கினி ஜலம் பூமி மனம் அன்னம் வீரியம் தவம் மந்திரம் கர்மம் லோகங்கள் நாமம் இந்தப் பதினைந்து கலைகளையும் விட்டு ஐந்து பிராணன் பத்து இந்திரியங்கள் மனம் புத்தி இந்தப் பதினேழு தத்துவங்களும் அதன் குணங்களும் காரியங்களும் இல்லாதவனெவனோ அவன் பிறவாமுக்தன்.

2153. சூரியனுடைய ஹிருதயமத்தியில் அந்தர்யாமியான சர்வேஸ்வரனிருந்து கொண்டு ஜீவராசிகளின் புண்ணிய பாபங்களைப் பார்த்துக் கொண்டிருக்கிறார்.

2154. வனங்களிலுள்ள மிருகங்கள் பக்ஷிகள் மரங்கள் செடி கொடிகளுக்கு வைத்தியஞ் செய்யாதிருந்தும் வியாதிகள் அதிகமாயில்லை, வைத்தியங்கள் பலரக்ஷணைகள் செய்தும் மனிதர்களுக்கு அதிக நோயுண்டாகிறது.

2155. பகல்பைசாசம் இராத்திரிப்பைசாசம் இவ்விரண்டில் இராத்திரி நடுமத்தியில் தனிமையாகப் பலவித பயத்துடன் கூடிய சங்கல்பத்துடன் சென்றால் இராத்திரிப்பைசாசம் துன்பப்படுத்தி விடு மென்று பிரஸ்தாபத்திலிருந்து வருகிறது, பகலில் நடு ரஸ்தாவில் பலபிரஜைகளின் மத்தியில் எத்தனை காவலோடிருந்தாலும் பகல்பைசாசம் அடித்துத் துன்பப்படுத்தி இரத்தத்தை உறிஞ்சி விடுகிறது.

2156. தைரியத்தால் குறியையும் வயிற்றையும் கார்க்கவேண்டும், கண்ணால் கை கால் களையும், மனத்தால் கண்ணையும் காதையும், வித்தையால் மனத்தையும் வாக்கையும், யோகத்தால் வித்தையையும் உலகத்தையும், ஞானத்தால் யோகத்தையும் தன்னையும், விசாரணையால் வேதாந்தத்தையும் பரிசுத்தத்தையும் கார்க்கவேண்டும்.

2157. ஆத்மாவிலிருந்து வெல்ல எழுந்து வருகிற சங்ல்பமுடையவர்களை ஞானயோகிகள் பரிபாலித்துக் கொள்ளுகிறார்கள்.

2158. ஈஸ்வரரும் ரிஷிகளும் உலகசிருஷ்டியை முன்னிட்டுச் சித்திமார்க்கங்களை வெறுப்போடு உபயோகித்துக் கொண்டிருக்கிறார்கள்.

2159. ரிஷிகள் பின் சிருஷ்டியில் ஈஸ்வரர்களாக வருகிறார்கள்.

2160. சனத்குமார ரிஷியே சுப்ரமண்யராக வந்திருக்கிறார்.

2161. ஆகாசகமனம் பரகாயப்பிரவேசம் தூரதிருஷ்டி ஞானம் அஷ்டமாசித்தி இவைகளில் உண்மையான பிரஹ்மஞானமில்லாதவர்களுக்கு ஆசை உண்டாகிறது.

2162. ஒவ்வொரு தத்துவங்களையும் விசாரியாமல் தள்ளிவிட்டுச் செல்வதைவிட விசாரித்து லக்ஷணஞானத்தோடு தள்ளிச் செல்வது சிலாக்கியமென்று சுகப்பிரஹ்மரிஷி போதிக்கிறார்.

2163. ஆரண்யங்களிற் சென்று பெரிய உலகபோகங்களை ஜெயிப்பதைக் காட்டிலும் அழகிய நகரங்களிலிருந்து கொண்டு ஜெயிப்பவன் தைரியசாலி.

2164. எந்தவிஷயத்திலும் யாதொருநியமமுமில்லாத ஞானிகளிடம் சுகதுக்க தேவதைகள் அணுகுவதில்லை.

2165. மோக்ஷசாதனங்களுக்காக அன்னபானாதிகளுண்டாயிருக்கிறதேயன்றி உதிரமாம்ஸங்களைப் பெருக்கவைத்துக் கொள்ளுவதற்காகவல்ல.

2166. சிவ விஷ்ணுக்களின் பேதரூபமானபக்தியை சிவவிஷ்ணுக்களே வேதத்திற் கண்டித்துக் கூறியிருக்கின்றனர்.

2167. அழிவற்ற பெரிய பதத்தையன்றி ஏனையபதங்களை விரும்புகிறவர்கள் யாவருயினும் காமிய ஆசையுடையவர்களென்று கூசாமற் சொல்லலாம்.

2168. பிரகிருதிக்கு அப்பாற்பட்ட அனுபவஞானமுடையவர்களைப் பிரகிருதி ஒன்றுஞ் செய்வதில்லை.

2169. பிரவிர்த்தி தர்மங்களோடு கூடினவனைப் பிரமதேவர் பார்க்கிறுர். நாராயணர் பார்ப்பதில்லை.

2170. தேவர்களும் முனிவர்களும் சத்துவகுணமுடையவர்களாயிருப்பினும் சூக்ஷ்மமான சத்துவகுணமுடையவர்களாயில்லாமையால் வைகாரிகர்கள் என்று சொல்லப்படுகிறுர்கள்.

2171. பிரம்மா விஷ்ணு சிவன் மஹேஸ்வரன் சதாசிவன் முருகன்கணபதி சக்தி இவர்களின் வேறுபாடில்லாத அந்தரங்க சத்துவகுண அபேத பக்தியினுல் யாதொரு தடையுமின்றிப் பிரஹ்மத்தினிடத்தில் ஒன்றுயிருக்குந் தன்மை ஏற்படுகிறது.

2172. போனவிஷயங்களையும் இப்போதிருக்கிற விஷயங்களையும் இனிவரப்போகிற விஷயங்களையும் எண்ணுமலிருப்பது மனோலயம் என்று வசிஷ்டமஹரிஷி கூறுகிறுர்.

2173. பிரஹ்மத்தில் சஞ்சாரமுடையவன் உத்தமபிரம்ம சாரி மனத்தில் ஸ்திரீ சங்கல்ப மில்லாதவன் மத்திமபிரமசாரி வெளியில் ஸ்திரீ சங்கல்ப மில்லாதவனும் ரேதஸை விடாதவனும் அதமப்பிரம்மசாரி.

2174. ஆசையோடு வந்தவர்களைச் சமாதானம் செய்யாவிட்டால் யாராலும் பெரிய பாபமுண்டாகும்.

2175. புத்திமான்களும் மோக்ஷதர்மத்தோடு கூடினவர்களும் ஆசையற்றவர்களுமான தியாகிகளின் யோகக்ஷேமங்களை ஸ்ரீமந்நாராயணனே வகித்து வருகிறார்.

2176. ஹிம்ஸையில்லாமையும் ஆத்மஞானமும் சமஸ்த பிராணிகளின் பற்றும் பரதந்திரபக்தியுமுள்ள பிரஜைகளால் உலகம் வியாபிக்கிறபோது கிருதயுகம் உண்டாகிறது.

2177. பரம ஏகாந்தயோகிகள் சங்கர்ஷண பிரத்யும்ன அனிருத்தர்களை உபாசியாமல் நேரேபிரஹ்மத்தையே அடைகிறார்கள்.

2178. மனுஷ்ய சரீரங்களில் அதிகப்புண்ணியமுடையவர்களைத் தெய்வ அவதாரமாகக்கண்டு கொள்ளவேண்டும்.

2179. விவகாரமில்லாத ஞானிக்கும் விவகாரமுடைய ஞானிக்கும் அனுபவத்தில் ஒருவித்தியாசமுமில்லை.

2180. பிரம்மா பிரஜைகளை அடக்கமுடியாத காலத்தில் மறைக்கப்படாத ஞானத்தோடுகூட மாயையை வசப்படுத்திக் கொண்டு சுதந்தரமாக ஸ்ரீமந்நாராயணசொரூபம் அவதரிக்கிறது.

2181. மரீசி ஆங்கீரஸ் அத்திரி புலஸ்தியர் புலஹர் கிரது வசிஷ்டர் இவ்வேழுபேர்களும் பிரவிர்த்தி மஹரிஷிகள்.

2182. ஜனர், சனத்சுஜாதீயர் ஜனகர் சனந்தர் சனத்குமாரர் கபிலர் சதானந்தர் இந்த எழ்வர்களும் நிவிர்த்தி மஹரிஷிகள்.

2183. தன்னைத்தவிர அன்னியர்கள் யாருக்கும் எந்த விதமான போதனைகளைச் செய்தாலும் பந்தமுண்டாகிறது.

2184. ஜீவசிருஷ்டிகளைக்கண்டு ஆச்சரியப்படுவதை விட்டு இயற்கையான தெய்வீக சிருஷ்டிகளைப் பார்த்து ஆச்சரியப்படுவதால் ஆத்மஞான உணர்ச்சி உண்டாகிறது.

2185. மூன்றவஸ்தைகளைத்தாண்டும் போது எவன் மயக்கமடைகிருனே அவன் மறு ஜென்மத்தில் முக்தி அடைகிருன்.

2186. அடிக்கடி சமுத்திரஸ்நானத்தால் சரீரமும் இந்திரியங்களும் சுத்தியாகின்றன.

2187. ஏதாவதொரு வஸ்துவில் ஒரு முகூர்த்தகாலம் வரை மனத்தை நன்ருக நிறுத்திப்பழக்கிக் கொண்டபின் பிரஹ்மத்தை நோக்கிச் செல்ல ஆரம்பிக்கலாம்.

2188. மனைவி மக்கள் செல்வம் பூமி மாளிகை இவைகளோடு கூடியிருந்தும் இவையெல்லாம் பரமாத்மாவுக்குச் சொந்தமானதென்று உள்ளவாறு நினைத்து யானெனதென்கிற அகங்காரத்தை விட்டிருப்பவர்கள் உத்தமமான பக்தர்கள்.

2189. முக்குணங்களுள்ளவரை மறுபிறப்பு மாறுவதில்லை.

2190. சாளக்கிராம தீர்த்த பானத்தால் நாடிசுத்தியும் ருத்ராக்ஷத்தை அணிவதால் தேஜஸ் விருத்தியும் பஸ்பதாரணஞ் செய்வதால் ரத்த சுத்தமும் உண்டாகின்றன.

2191. அவரவர்களுடைய கர்ம சுபாவமே அவரவர்களுக்கு வாழ்வையும் தாழ்வையும் உண்டாக்குகின்றன.

2192. பூர்வ புண்ணிய பலத்திற்குத் தக்கபடி மோக்ஷமார்க்கம் விளங்கும்.

2193. புஷ்பம் ஜலம் தளிர் காய் பழம் பால் அன்னம் இவைகளைக்கொண்டு சகுணமூர்த்திகளுக்குப் பூஜை செய்வதால் பாபம் விலகிப்பகவானது கிருபை உண்டாகிறது.

2194. சாத்வீககுணத்தோடு சரீரத்தை விட்டவர்கள் தேவர்களாகவும் இராஜச குணத்தோடு இறந்தவர்கள் மனுஷ்யர்களாகவும் தாமத குணத்தோடு மரணமானவர்கள் புல் பூண்டு மிருகம் பக்ஷி இந்தப் பிறப்புக்களை அடைகிறார்கள்.

2195. சரீரம் விலகுங் காலத்தில் மூன்று குணமுமில்லாதவர்கள் பிரஹ்மத்தில் கலந்து விடுகிறார்கள்

2196. ஞான இச்சை மனத்தெளிவு உண்டான போது சத்துவமும், பெண்ணாசை டம்பம் உண்டாயிருக்கிறபோது ராஜசமும், ஹிம்ஸை கோபம் உண்டானபோது தாமதமும், மேலெழுந்திருக்கிறதென்று தெரிந்து கொள்ளவேண்டும்.

2197. மோக்ஷசாதனமான ஸ்தூல சரீரத்தை அலக்ஷியஞ் செய்பவன் நரகத்தை அடைகிறான்.

2198. தெய்வபக்தியின்றிச் செய்யப்படுகிற புண்ணியகருமங்கள் பயன் படுவதில்லை.

2199. சப்த ஸ்பரிச ரூப ரச கந்தங்களை ஜெயித்து மனத்தைப் பரமாத்மாவினிடத்தில் நிறுத்துவது அகோரமான தபஸ்.

2200. அழிந்து போகிற உலகதக்ஷிணைகளைக் கொடுப்பதைவிட அழியாத ஞானதக்ஷிணையைக் கொடுப்பது விசேஷம்.

2201. சூரியன் வெகுவேகமாக ஓடிக் கொண்டேயிருக்கிறான். யாதொரு தாக்ஷண்யமுமின்றி யமன் எல்லோரையும் கொண்டு போய்க் கொண்டேயிருக்கிறான், இரவு பகல்கள் வெகு துரிதமாய்க் கழிந்து கொண்டே போகின்றன. உடலை விட்டுப் போவதற்குப் பிராணவாயுவும் காலத் தோடு தயாராயிருக்கின்றன, உலக முழுமையும் திடீரென்று மாறிக் கொண்டே போகின்றன, ஆறுகளெல்லாம் தனது சுபாவத்தைக் குறைக்காமலே சென்று கொண்டேயிருக்கின்றன, சமுத்திரங்களெல்லாம் அதனதன் காரியங்களாகிய அலைகளை நிறுத்தாமல் அடித்துக் கொண்டே யிருக்கின்றன, மனமும் இந்திரியங்களும் ஓய்வின்றி ஓடிக்கொண்டேயிருக்கின்றன, ஜனனமரணதேவதை ஒரு க்ஷணங்கூட ஓய்வதில்லை,

சகல ஜீவர்களும் அவரவர்கள் தொழில்களை இடைவிடாது செய்து கொண்டேயிருக்கின்றனர், மனுஷ்யர்கள் மாத்திரம் கடவுளை அறிவதற்குப் பிரஹ்ம மார்க்கத்தை நோக்கிச் செல்லாதிருந்தால் கால தேவதை நகைக்கும்.

2203. மலம் மூத்திரம் கிருமி சீழ் இரத்தம் தோல் மாம்ஸம் நரம்பு எலும்பு மயிர் கபம் நாற்றம் இவைகளோடு சேர்ந்திருக்கப் பட்ட உடம்பை நானென்றெண்ணுவது நியாயமல்லாததும் நரகத்தை நானென்பதையும் ஒக்கும்.

2204. பிரஹ்ம விசாரணை தவம் மறந்த விஷயங்களை மீண்டும் நினையாதிருத்தல் ஜீவ காருண்யம் உலக உதாசீனம் இவைகள் துறவிகளின் செய்கைகள்.

2205. மனத்தை அடக்குதல் சமம் இந்திரியங்களை அடக்குதல் தமம்.

2206. தன்னுடைய ஆத்ம நிலையை அறிவதற்குப் பிறருடைய உதவி பயனற்றது.

2207. ஆசையை விடுவது தவம், நிஷ்காமகர்மஞ் செய்வது யாகம், காமத்தின் காரியங்களை விடுவது தியாகம், மனத்தை அடக்குவது தைரியம், ஏகாக்கிர புத்தியே கல்வி.

2208. சத்தை அசத்தாகவும் அசத்தைச் சத்தாகவும் நாட்டி விடுவது மாயை.

2209. எல்லோரையும் நாமென்றெண்ணுவதால் ஸ்துதி நிந்தை செய்வதற்கு வழியில்லை. ராகத்துவேஷாதிகளுக்கு இடமில்லை.

2210. அபேதஞானம் வருகிற பரியந்தமும் மாறுத ஞானதிருஷ்டி வருகிற வரையிலும் புண்ணிய கருமங்கள் செய்து வர வேண்டும்.

2211. ரேதஸைப் பத்திரமாகக் காப்பாற்றி வருவதால் தபமும் தேஜஸும் விருத்தியாகிறது, சத்துவ குண அதிதேவதை பிரசன்னமாகிறது.

2212. தபசியும் ஞானப்பியாசியும் யோகாப்பியாசியும் ஒரு சாஸ்திரத்தையும் அப்பியாசிக்கக்கூடாது.

2213. சொல்லிச் சொல்லிச் செய்யுந்தர்மங்களை விடச் சொல்லாமற் செய்யுந் தர்மமே விசேஷம்.

2214. வெளியில் கடவுளைத் தேடுகிறவன் ஒருக் காலும் காணப் போகிறதில்லை.

2215. சித்திகளுக்காக யோகம் பழகுபவன் சிறந்த அறிவாளியில்லை.

2216. பசிக்கு நாம் அடங்கி விடாமல் பசி நமக்குள் அடங்கியிருக்க வேண்டும்.

2217. கடவுளை அறிந்த ஞானிகள் காலத்தையும் அதிக்கிரமித்து விடுகிறார்கள்.

2218. கிராமக்காரியங்கள் குடும்பக் காரியங்கள் தேவாலயக் காரியங்கள் பொதுக் காரியங்கள் அரசாங்க நிர்வாகக் காரியங்கள் மற்றும் மனோ சலனத்தை உண்டு பண்ணக் கூடிய எந்தக் காரியங்களிலும் துறவிகளும் சன்னியாசிகளும் பிரவேசிக்கக் கூடாது.

2219. வீட்டிலிருப்பதை விடக் காட்டிலிருப்பது விசேஷமென்று எண்ணுபவன் அப்பியாச முதிர்ச்சியில்லாதவன், வெளியிலிருப்பதை விட உள்ளிலிருப்பது விசேஷமென்று நினைக்கிறவன் பக்குவ நிறையாதவன்.

2220. பிராம்மணத்துவேஷம் செய்கிற அப்பிராம்மணர்களுக்கும் அப்பிராம்மணத் துவேஷஞ் செய்கிற பிராம்மணர்களுக்கும் இடங்கொடுக்கலாகாது.

2221. தெய்வம் வேதம் சாஸ்திரம் பாபம் புண்ணியம் இவைகளில் நம்பிக்கையில்லாதவர்களிடம் பழக்கமும் பேச்சுங்கூடாது.

2222. சாதுத்தன்மை மனதைப் பொறுத்ததேயன்றிச் சரீரத்தையும் இந்திரியங்களையும் பொறுத்ததல்ல.

2223. உண்மை ஞானியும் பக்தனும் தரித்திரத்தையே விரும்புகிறார்கள்.

2224. எதார்த்தமுள்ளவன் எதார்த்தத்தை வெளியிற் காட்டுவதில்லை, எதார்த்தமில்லாதவன் எதார்த்தத்தை வெளியிற் காட்டுகிறான்.

2225. பரத்துவம் அந்தரியாமித்துவம் வியூகத்துவம் விபவத்துவம் அர்ச்சாவதாரத்துவம் என ஐந்து விதங்களாகப் பரமாத்மாவின் சக்தி பிறிந்திருக்கிறதென்று விசிஷ்டாத்வைத வைஷ்ணவமதம் கூறுகிறது.

2226. சாஸ்திரங்களிற் கூறியபடி விரதாதிகளை ஒழுங்காக அனுஷ்டித்துக்கொண்டு வருவதாலும் காலாந்தரத்தில் பரமாத்மசொரூபத்தை அடையலாம்.

2227. சூரியமண்டல மார்க்கமாகப் பிரம்மலோகஞ் செல்வது அர்ச்சிராதிமார்க்கம் சந்திரமண்டல மார்க்கமாகப் பிரம்மலோகஞ் செல்வது தூமாதிமார்க்கம்.

2228. சூரியகலை தேவயான மார்க்கமென்றும், சந்திரகலை பிதுர்யான மார்க்கமென்றும் யோகசாஸ்திரம் கூறுகிறது.

2229. சகலமதங்களும் அவரவர்கள் புத்திக்கெட்டியவாறு பிரதிபாதிக்கின்றன.

2230. யாதொரு ஆசையுமில்லாமல் யோகஞ் செய்பவர்கள் பரமாத்மாவை அடைகிறார்கள், ஆசையோடு யோகஞ் செய்பவர்கள் அஷ்டமாசித்திகளை அடைகிறார்கள்.

2231. இல்லறக் காரியங்களோடு ஞானமடைந்தவர்களுக்கு நடந்துகொண்டே தூங்குகிறவனுக்குள்ளசுகமும், துறவோடு ஞானமடைந்தவர்களுக்குச் சப்ரமஞ்சப் பஞ்சணையில் தூங்குகிறவனுக்குள்ள சுகமும்போலிருக்கிறது.

2232. பொருள் ஒன்றை மட்டும் விரும்புகிறவர்கள் உலகபோகங்கள் அனைத்தையும் விரும்புகிறவர்களாகிறார்கள்;

2233. எவனுக்கு எதெது துக்கமென்று எதார்த்தமாய்ப் படுகிறதோ அவனுக்கு அதது அழிந்துபோகிறகாலம் சமீபித்ததென்று அறிந்துகொள்ளவேண்டும்.

2234. மாயையின் எல்லையைக்காண ஆரம்பிப்பது பிசகு.

2235. பிரஹ்மத்தில் இரண்டில்லாதிருத்தலே முக்தியென்று அத்வைதமதமும், பரமேஸ்வரனிடத்தில் பிறிவற்றிருத்தலே முக்தி யென்று விசிஷ்டாத்வைதமதமும், மஹா விஷ்ணுவிடத்தில் வேறாக இருப்பதே முக்தியென்று மத்துவமதமும் பிருகிருதி புருஷனிடத்தில் அடங்கிவிடுவதே முக்தியென்று சாங்கியமதமும், அளவற்ற ஜோதியில் கலந்து விடுவதேமுக்தி யென்று யோக மதமும், கர்மத்தைப்பூர்த்தி செய்துவிடுவதே முக்தியென்று மீமாம்ஸகமதமும், கடவுளை விட்டுப் பிறியாதிருத்தலே முக்தியென்று ஞானமதமும் கடவுளுக்கும் தனக்கும் சம்பந்தம் வைத்துக்கொள்வதே முக்தியென்று புத்தமதமும் கூறுகின்றன.

2236. சச்சிதானந்த தர்மம் சநாதன தர்மம் சாந்த தர்மம் இம்மூன்றும் என்றும் அழிவற்றவை.

2237. பரமாத்மாவை அறியவேண்டுபவர்கள் பிரஹ்மத்தைப் பற்றிக்கூறுகிற சாஸ்திரங்களைப்படிக்கவேண்டும், வருவது வந்தே தீருமென்றெண்ணித் திடமாயிருக்கவேண்டும், கிடைத்ததைக் கொண்டு திருப்தியடையவேண்டும், சர்வஜீவர்களிடத்திலும் கருணையோடிருக்கவேண்டும், விருக்ஷங்கள் நிறைந்த கானகத்தில் வசித்துவரவேண்டும், யோகாப்பியாஸம் சகுணத்தியானம் செய்ய வேண்டும், உலக வெளிவிஷய ஆசைகளிலும் சூக்ஷ்ம மனோ ஆசைகளையும் வெறுத்துத்தள்ளி விடவேண்டும், பெண் உருவத்தில் வெறுப்பு உண்டாக்கிக்கொள்ளவேண்டும்.

2238. மாதாவின் கெர்ப்பத்திலுள்ள சிசுக்களுக்கு ஐந்தாவது மாதத்தில் பசி தோன்றுகிறது. எழாவதுமாதத்தில் பூர்வ ஜென்மாந்தரங்கள் தோன்றுகின்றன. எட்டாவது மாதத்தில் தீவிர மோக்ஷ இச்சை உண்டாகிறது.

2239. ஸ்வர்க்கலோகத்திலுள்ள அழகிய ஸ்திரீகளின் சுகத்திற்காகவே மனுஷ்யர்கள் ஆசையோடு யாகஞ் செய்கிறார்கள்.

2240. காலத்திற்குட்பட்ட வஸ்துக்களுக்கு எந்தெந்தக் காலங்களில் எதெது இயற்கையாக வந்து தீரவேண்டுமோ அதது வந்தே தீருகிறது.

2241. எந்த வித்தையையும் வலுவில் யாருக்கும் போதிக்கக் கூடாது.

2242. முறைப்படியோகம் செய்துகொண்டு போகும் போது இடைவழியில் தாங்கமுடியாத உஷ்ணம் உடம்பிலுண்டாகும் விடாது யோகஞ் செய்து கொண்டு போனால் அது நீங்கிவிடும்.

2243. பெண்களுடைய காமத்திற் கட்டுப்பட்டவர்கள் தேச காலங்களையும் பிறர் நோக்க விசாலங்களையும் கவனிக்கவேண்டும்.

2244. சரீரமாகிய சித்திரத்தில் தன்னைக்காண்பவன் பிரஹ்மத்தையுங் காண்கிறான்

2245. தான் ஒருவரையும் நமஸ்கரியாமலிருந்துகொண்டு நமஸ்கரிக்கவேண்டியவர்களை நமஸ்கரிக்கவேண்டும்.

2246. வாக்கு மவுனம் இந்திரியமவுனம் கரணமவுனம் காஷ்டமவுனம் சுழுப்திமவுனம் மஹாமவுனம் என்று ஏழுவிதமவுனங்களிருக்கின்றன.

2247. பேதமாக ஈஸ்வரோபாசனை செய்பவர்கள் ஜனலோகம் தபோலோகம் பிரமலோகம் முதலிய லோகங்களுக்குச் சென்று மீண்டும் பிறக்கிறார்கள்.

2248. பலனை உத்தேசிக்காமல் யாகம் செய்து பரமேஸ்வர அர்ப்பணஞ் செய்பவர்கள் சூர்யமண்டலத்தைப் பிளந்துகொண்டு ஜோதிரூபமான பெரிய உலகத்தை அடைகிறார்கள்.

2249. சகுண யீஸ்வர பக்தியின்றி நிர்க்குணயீஸ்வர பக்தி பிரயோஜனப்படமாட்டாது.

2250. அஞ்ஞானத்தையும் மனத்தையும் விட்டுவிட்டவன் அதன் சொரூபத்தை உள்ளவாறு தெரிந்தவன்.

2251. உண்மையான பக்தர்களையும் ஞானிகளையும் ஏகாந்த யோகிகளையும் காணும்போது துற்ஜனர்களுக்குக் கூடப் பக்தி உண்டாகிறது.

2252. தெய்வபக்தியில்லாதவர்களும், மோக்ஷ ஆசையற்றவர்களும், பூருகெட்ட குணங்களுள்ளவர்களும், நல்லகாரியங்களை விட்டவர்களும், ஜன்ம மரணங்களுக்குப் பயப்படாதவர்களும், உலகத்தில் ஒருவருமேயில்லை.

2253. உண்மையாக ஞானமடைந்தவர்கள் பக்தியோகம் கர்மயோகம் இராஜயோகம் ஹடயோகம் இவைகளைக் குறைவாக நினைக்கமாட்டார்கள்.

2254. கெட்டிக்காரர்களும் புத்திசாலிகளும் பண்டிதர்களும் எந்தவிதத்திலும் சூரர்களுக்குப் பெண்ணைக் கொடுக்கமாட்டார்கள்.

2255. எவனுயிருந்தாலும் தான்செய்த தோஷங்களைத் தப்பு என்றொப்புக்கொள்ளுகிறவன் உத்தமன்.

2256. புண்ணியபாபங்களினிடையே சுற்றிக்கொண்டிருப்பவன் லோகாந்தரங்களை அதிக்கிரமிக்கிறதில்லை.

2257. கற்பனை சாஸ்திரங்களை நம்பக்கூடாது.

2258. யுககாலங்களுக்கும் தேசங்களுக்கும் தக்கவாறு வெளி ஆசாரங்களை அங்கீகரிக்கவேண்டும்.

2259. எவனுயிருந்தாலும் ஞானி உயர்ந்தவன் அஞ்ஞானி தாழ்ந்தவன்.

2260. பக்ஷிகள் மிருகங்கள் மரம் செடி கொடிகள் இவைகளுக்கும் ஆத்மப்பிரஹ்மஞானம் போதிக்கவல்லவர்கள் ரிஷீஸ்வரர்கள்.

2261. மனதைப் பலாத்காரமாக விகாரப்படுத்தி அடக்கு வதைவிடச் சுலபமாகச் சாந்தப்படுத்தி அடக்குவது சிரேஷ்டம்.

2262. அஞ்ஞானிகளாற் செய்யப்பட்ட சாஸ்திரங்களையும் கலப்புள்ள நூல்களையும் மதத்துவேஷமான கிரந்தங்களையும் தள்ளி விடவேண்டும்.

2263. எந்த வஸ்துக்களுக்காவது ஹிம்ஸை செய்து சம்பாதிக்கிற சுகங்களை எப்படியாவது விட்டுவிடவேண்டும்.

2264. ஜடவஸ்துக்களைக்கொண்டு ஞானமடைய வேண்டுமென்றெண்ணுவது தப்பு.

2265. பிரபஞ்சத்தின் சம்பூர்ணசுகங்களை அனுபவிப்பதற்கு எந்த இடம் பொருள் ஏவல் அவஸ்யமாயிருக்கிறதோ அந்த இடம் பொருள் ஏவல்களை அடியோடு விட்டுவிட்டவர்களிடம் சம்பூர்ண ஞான சுகம் பிரதிபலிக்கிறது.

2266. உண்மை புலப்படும்படியும், மனது கனிந்து இளகும் படியும், சந்தேகந்தீரும்படியும், யாருக்கும் அற்பங்கூட வெறுப்புத் தோற்றாத படியும், தைரியமுண்டாகும் படியும், ஞானசம்பத்தோடு கூடினதாயும், பேசவேண்டும்.

2267. மோக்ஷ சாதனமான சரீரத்தை எக்காரணங்களைக் கொண்டும் யாதொரு விகாரமும் பின்னமும் செய்யக்கூடாது.

2268. பிரதி உபகாரத்தை உத்தேசித்து ஒருகாரியத்தை யும் செய்யக்கூடாது, ஞானமடைந்தவர்களைபற்றியாதொருவித மான நிபந்தனைகளையும் சொல்லக்கூடாது.

2269. உலகத்திலுள்ள எல்லாமதங்களின் வெளிச்சின்னங் கள் முழுமையும் விளையாட்டென்றெண்ணி விட்டு விடவேண்டும்.

2270. உற்பத்தி நாசமுடைய வஸ்துவாயிருந்தாலும் விசேஷ மிருக்குமானால் அதைமதிக்கவேண்டும். சத்தில் அசத்தும் அசத்தில் சத்தும் தோற்றுவது சகஜம்.

2271. உண்மையை அறிய வேண்டுமானல் எந்த சாஸ்திரங்களுக்கும் சொந்தபாஷ்யம் செய்து கொள்ள வேண்டும்.

2272. பரமாத்மாவை அறிய ஆரம்பித்தல் சமாதி தியானம் தாரணை பூஜை பாராயணம் ஜெபம் யோகம் வித்தை தபசு சித்தி இவைகள் புருஷர்களைப்போல ஸ்திரீகளும் அனுஷ்டிக்கலாமென்று அனுபவவேதம் கூறுகிறது.

2273. எந்தவஸ்துவையும் பலாத்காரமாக அடக்குவதை விடச் சிநேகமாக அடக்குவது நன்மை.

2274. பிரஹ்மத்தைத்தவிர மற்றவைகளைப்பற்றிக்கூறுகிற சாஸ்திரங்கள் மயக்கமானவைகள்.

2275. எந்தக்காரியத்தையும் வேகமாகச் செய்வதை விட மெதுவாகச் செய்வது விசேஷம்.

2276. மதாசாரியர்களையும் குலாசாரியர்களையும் கருமப்புரோகிதர்களையும் உயர்ந்த ஆஸ்ரமிகளையும் ஜாதியார்களையும் அரசர்களும் கிரகஸ்தர்களும் வேலைவாங்கக்கூடாது.

2277. எந்தவிதமான தோற்றமும் மாயையின் ஜாலங்களென்று தள்ளி விடுகிறவர்கள் திடப்பிரக்ஞர்கள்.

2278. பக்தியோகிகளும் ஞான யோகிகளும் விரும்புகிற வஸ்து ஒன்றே.

2279. பொருள் ஒன்றின் காரணத்தினலேயே உலகத்திலுள்ள சகலரும் ஒருவருக்கொருவர் சிநேகிக்கிறார்கள்.

2280. மிகவும் தாழ்ந்ததும் மிகவும் உரப்புமின்றி நடுத்தரமான வார்த்தைகளை மார்போடு பேசுகின்றவர்கள் வாக்கின் உண்மையை அறிந்தவர்கள்.

2281. எத்தனை வித்தைகளும் பலத்தின் முன் நிற்பதில்லை.

2282. அசுத்தமாயையைச் சுத்தமாயையால் வென்ற பின் சுத்தமாயையையும் விட்டு விடவேண்டும்.

2283. சுத்தமாயையின் சகாயத்தைக்கொண்டே சர்வேஸ்வர பகவான் சிருஷ்டி முதலிய சகல காரியங்களையும் நடத்துகிறான்.

2284. உலக ஜனங்களின் மரியாதையை உத்தமர்கள் விரும்பலாகாது.

2285. திரவ்யபலம் உலகபலம் சரீரபலம் வசனபலம் வீர்ய பலம் வித்யாபலம் மனோபலம் புத்திபலம் மந்திரபலம் மாயாபலம் யோகபலம் ஈஸ்வரபலம் தபோபலம் ஞானபலம் ஆத்மபலம் இவை கள் முறையே உயர்ந்தவைகள்.

2286. மனுஷ்யனாகப் பிறந்தவன் பதினைந்து பலத்துள் ஏதாவது ஒரு பலத்தைப் பெற்றவனாயிருக்க வேண்டும்.

2287. சகுண மூர்த்தியினுபாசகன் சகுண மூர்த்தியினுல கத்தை யடைந்து அங்கு நின்று திரும்பாமல் பிரஹ்மத்தை அடை கிறான்.

2288. தேவயான மார்க்கத்திற் செல்பவர்கள் பிரம்மதேவரது சபைக்கும், பிதுர்யான மார்க்கத்திற் செல்பவர்கள் பிரம்ம லோகத்திற்கும் செல்கிறார்கள்.

2289. அர்ச்சிராதி மார்க்கத்தினால் பிரம்மலோகம் சென்ற வர்கள் பிரம்மதேவர் அழிகிறவரை அங்கிருந்து கடைசியில் அன்னவர் அடைகிற சொரூபத்தைத் தாங்களும் அடைகிறார்கள்.

2290. அர்ச்சிராதி கதியால் பிரமலோகம் செல்லப்பட்ட வர்களுக்கு ஆதிவாஹிகர் அக்கினி தேவர் முதலியவர்கள் சகாய மா யிருக்கிறார்கள்.

2291. ஞானியினுடைய பிராணன் தேகத்தை விட்டு வெளி யிற் செல்லுகிறதில்லை.

2292. ஹிருதயத்தினின்றும் புறப்படுகிற நூற்றெட்டு அந்தர் முக நாடிகளில் விசேஷமான பெரிய நாடியின் வழியாக ஜீவ சொரூ பப்பிராணனைப் புறப்படச் செய்கிறவன் அர்ச்சிராதிகதியால் பிரம லோகத்தை அடைகிறான்.

2293. மனதை ஹிருதயத்தில் நிறுத்திப் பார்க்கும் போது ஓர் ஜோதி யோக சக்தியால் தோற்றப்படும்.

2294. உண்மையான உபாசகனுக்கு உத்தராயண தக்ஷிணாயன பேதம் கிடையாது.

2295. இராத்திரியில் சூர்யன் தோற்றாவிடினும் அவனது கிரஹணம் இருக்கிறது.

2296. அர்ச்சிராதி கதி உத்தராயண கதி இவைகள் ஜீவன் முக்தனுக்கில்லை.

2297. நினைத்தபடி முடிப்பவன் சத்திய சங்கல்பன்.

2298. முக்தனானவன் எதைச் சங்கல்பிக்கிறானோ அந்த அடைகிறான், தன்னளவிலும் பிறரளவிலும் சிருஷ்டித்து விடுகிறான்.

2299. விதி நிஷேதங்களுக்குக் கட்டுப் பட்டவன் முக்தனல்ல.

2300. பரமேஸ்வரருக்குச் சகுணத்துவம் நிர்க்குணத்துவம் இரண்டு மிருக்கிறது.

2301. மனத்தைப் பரமாத்மாவிற் களைத்து விட்ட மஹாத்மாக்கள் ஸ்வல்ப முயற்சியால் பஞ்ச மூர்த்திகளின் செயல்களைச் செய்கின்றனர்.

2302. சிருஷ்டியை விரும்பாத முக்தனுடைய ஹிருதய உண்மையைப் பஞ்ச மூர்த்திகளும் அறிவதில்லை.

2303. எந்தக்காரியமும் முடிகிற காலம் வரும்போது அதற்கேற்ற யுக்திகளும் அனுபவங்களும் சாதனங்களும் வெளியில் தோற்றுகின்றன.

2304. காலத்திற்கு முன் எவ்வித பலங்களும் யுக்திகளும் மற்றவைகளும் பயன்படுவதில்லை.

2305. சகுணப் பிரஹ்மத்தின் உதவியைப் பெற்று நிர்க்குணப் பிரஹ்மத்தை வியாபிப்பதே அதி உத்கிருஷ்டமானது.

2306. பெண்களின் சரீர சுகத்தை மட்டும் விரும்புகிற புருஷர்கள் அவர்களின் ஆத்ம சுகத்தையும் சேர்த்து விரும்புவர்களானல் எவ்வளவோ விசேஷமானது.

2307. உலக நாயகர்களின் ஸ்தூல சரீரத்திற்காகப் பிரயாசைப் படுகிற ஸ்திரீகள் ஆத்ம நாயகனுடைய சுகத்தை விரும்பித் தேடுவார்களானல் அழிவற்றதும் விசேஷமானது மென்று தேவஹூதி தேவி சொல்லுகிருள்.

2308. பெண்களின் சரீரசுகத்தை விரும்புகிறவர்கள் முதலில் தன் சரீர விசாரணை செய்து அதிலுள்ள குற்றங்களைக்கண்டு கொண்டு அப்பால் ஸ்திரீகளின் சரீர விசாரணை செய்யவேண்டும்.

2309. நியாயமில்லாமல் பிரஜைகளை உண்டாக்குவதால் உலகம் கெடும்.

2310. பகிர்முக காரியங்களில் மீதம் வைத்துக் கொண்டு அந்தர்முக காரியங்களில் பிரவேசிக்கக்கூடாது.

2311. யாரும் எந்த விஷயத்திலும் அவரவர்கள் அனுபவம் போல் எல்லோரையும் எண்ணுகிருர்கள்.

2312. நீதியும் ஒழுக்கமும் இல்லாத அரசர்களும் பிரஜைகளும் உள்ள தேசத்தில் சூக்ஷ்ம சரீரத்தோடு உலாவுகிற தேவர்களும் சித்தர்களும் ரிஷிகளுங்கூட வசிக்க விரும்புவதில்லை.

2313. ஞானி தன் சரீரத்தை விடும்போது சகல தத்துவங்களையும் தனக்குள் அடக்கிக் கொள்ளுகிருன்.

2314. அர்ச்சிராதிகதியால் சூக்ஷ்ம சரீரத்துடன் பிரம்மலோகஞ் செல்லுகிற ஜீவர்கள் இடையிலுள்ள வாயு வருணன் அக்கினி சந்திரன் சூர்யன் இந்திரன் முதலியவர்களுடன் சம்பாஷிக்கிருர்கள்.

2315. உபாஸனத்துக்கு இகலோகத்தில் முடிவு இல்லையாகையால் மரணபரியந்தம் உபாஸனம் செய்தே தீரவேண்டும்.

2316. பிரபஞ்சத்திலுள்ள ஒவ்வொரு வஸ்துக்களையும் பரமாத்மாவாக உபாசிக்கலாம், பரமாத்மாவிடத்தில் ஒருவஸ்துவையும் கற்பிக்கக் கூடாது.

2317. வர்த்தமானப் பத்திரிகைகள் வயிற்றுப் பிழைப்புக்கும், சுயநலக்காரியங்களைப் பூர்த்திசெய்துகொள்வதற்கும், ராகத்துவேஷத்தை விருத்தி செய்வதற்கும், அந்தர்முக உண்மையை மறைத்து விடுவதற்கும், ஞானயோக பக்தியோக கருமயோக சனாதன வைதீக மார்க்கத்திற்குத் தடையாயிருப்பதற்கும் ஏதுவாகிறது.

2318. ஏகாக்கிர புத்தியை விரும்புகிறவர்களும் தபசிகளும் ஞானிகளும் அண்டவிசாரம் பிண்டவிசாரம் அஞ்ஞான விசாரம் பிண்டவுலகவிசாரம் இவைகளைப்பற்றி நினைப்பதேயில்லை.

2319. துறவிகள் ஒருவரையும் சிநேகிக்கலாகாது.

2320. உயர்ந்தவனைத் தாழ்ந்தவனாக நினைக்கக்கூடாது, தாழ்ந்தவனை உயர்ந்தவனாக நினைக்கலாம்.

2321. பரமாத்மா தானென்று அத்வைதிகளும் பரமாத்மா தனக்கு ஆத்மாவென்று விசிஷ்டாத்வைதிகளும் பாவனைசெய்து தியானிக்கிறார்கள்.

2322. ஞாதேயமானவனுக்குப் பிரதிபந்தமிருந்தால் அதே ஜென்மத்தில் முக்தனாகிறதில்லை.

2323. இஷ்டம்போல் நினைப்பவர்கள் பேசுபவர்கள் செய்பவர்கள் நாஸ்திகர்களாகையால் அவர்களுடன் பழகவும் பேசவும் கூடாது.

2324. ஞானியும் யோகியும் உபாஸகனும் தனது வைபவம் வெளிக்குத் தோற்றாது மறைத்து வைத்திருக்கவேண்டும்.

2325. பேதவாசனைகளையுடையவன் மவுனவிருத மிருக்க வேண்டும்.

2326. குருசிஷ்யபாவமும், நாயக நாயகீபாவமும் முன்ஜென்மாந்தர கர்மத்தொடர்பாலுண்டாகின்றன.

2327. வெளியிற்செய்கிற பாபபுண்ணியங்களைவிட உள்ளிற் செய்கிற பாபபுண்ணியங்கள் பயனற்றவை.

2328. உலக அரசர்கள் தண்டிக்காத குற்றங்களுக்கு யமன் தண்டித்து விடுகிறான்.

2329. பகிரங்கத்திற் செய்யப்படுகிற பாபங்களுக்கு அரசன் தண்டிக்கிறான். அந்தரங்கத்திற்செய்த பாபங்களுச்கு ஆண்டவன் தண்டிக்கிறான்.

2330. யோக மஹிமையால் மனத்தையும் பிராணனையும் நிறுத்தி அந்தரங்க ஹிருதயதாமரையை மலரச்செய்து அதி லிருந்து கிடைக்கிற அமிர்தபானம் பண்ணுகிற மஹான்கள் வெளியாகாரத்தை விரும்புகிறதில்லை.

2331. அழியாத இடமும் அழிகிற இடமும் எங்குமிருக்கின்றன.

2332. உண்மையாக அமிர்தம் கிடைக்கப்பெற்றவன் யாருக்குந்தெரியாமல் யாதொரு சந்தடியுமின்றி அதை உண்ண ஆரம்பிக்கிறான், அமிர்தம் கிடைக்கப்பெறாதவன் அமிர்தம் அமிர்தம் என்று கூவி அதன் சுபாவங்களைப்பற்றிப்பேசிக் கூச்சலிடுகிறான்.

2333. துக்கானுபவத்தைக் கொடுக்கக்கூடிய பாபமானது ஞானியையும் யோகியையும் உபாஸகனையும் ஒன்றுஞ்செய்ய முடிவதில்லை.

2334. அஞ்ஞானதசைமுதல் முக்திதசை வரையுள்ள சகல விபரங்களையும் சாஸ்திர மூலமாகவும் கேள்வி மூலமாகவும் பெரியோர்கள் மூலமாகவும் நன்றாகத்தெரிந்து கொண்டவர்களுக்கும்

மனத்தின் பாபம் நீங்குவதில்லை. மோக்ஷமார்க்கத்தில் செல்ல முடிவதில்லை.

2335. எதார்த்தமாகப் பிரஹ்மானுபவம் வாய்க்கப்பெற்றவன் யாதொரு சலனமுமின்றி ஏகாந்தமாக அனுபவிக்கிறான், அனுபவம் வாய்க்கப்பெறாதவன் பரமாத்மாவைப்பற்றியும் அதன் லக்ஷணங்களைப்பற்றியும் பேசுகிறான். பெரிய கூட்டத்தில் அளவிறந்த சாஸ்திரக் குவியல்களைத் திரட்டிவைத்துக்கொண்டு பேசிப்பேசி அலைகிறான்.

2336. ஞானி போலானவன் ஞானத்தையடைய முயற்சிக்கிறான், அஞ்ஞானி போலானவன் அறியாமையிற் பிரவேசிக்கிறான்

2337. காமிய புண்ணியத்தாலுண்டாகிற விசேஷ போகங்களைக்கண்டு பெரிய தேவர்களும் பிரமிக்கிறார்கள்.

2338. சுகதுக்கங்கள் எந்த வஸ்துவிலிருந்துண்டாகின்றனவென்று கண்டு பிடித்து அதை அடியோடு நாசஞ்செய்யவேண்டும்

2339. உண்மை தெரிந்தவர்கள் முக்குணபக்தியையும் அங்கீகரிக்கிறார்கள்.

2340. சங்கல்பத்தை ஸ்வாதீனஞ்செய்து கொண்டவர்கள் மட்டும் சத்தியத்தினின்று நழுவதில்லை.

2341. இன்பதுன்பங்கள் கலப்பில்லாத சுகத்தை விவேகிகள் விரும்புகிறார்கள்.

2342. சரீரத்திலுள்ள சகல தத்துவங்களின் உற்பத்தி லயம் செயல் சக்தி போக்கு ஆதாரம் இடம் உண்மை சலிப்பு நிலைமை வேகம் அடக்கம் முடிவு ஜெயம் இவைகளை அனுபவத்தில் தெரிந்து கொள்ளவேண்டும்.

2343. கர்மகாண்டப்படி சந்நியாஸ ஆஸ்ரமத்தை அடைந்தவர்கள் தாழ்ந்த ஆஸ்ரமங்களுக்கு இறங்கக்கூடாது.

2344. யாதொரு வருணாஸ்ரமங்களுக்கும் கட்டுப்படாமல் அதிக்கிரமித்த அதிவருணாஸ்ரமிகள் வெகு சிலரே காணப்படுகின்றனர்.

2345. ஆத்மஞானமின்றி வருணாஸ்ரமங்களை விட்டவன் பதிதனாகிறான். அவன் பிராயச்சித்தத்தால் சுத்தனாகிறான்.

2346. நைஷ்டிகப்பிரம்மசாரி மதுபானம் ஸ்திரீ சம்போகம் முதலிய பெரிய பாதகங்களைச் செய்துவிட்டால் அக்கினிப்பிரவேசம் செய்துவிடவேண்டும், அல்லது கடினமான பிராயச்சித்தம் செய்துகொள்ளவேண்டும்.

2347. பிராணசங்கடம் நேருங்காலத்தில் எதை உண்பதாலும் தோஷமில்லை.

2348. பரிசுத்தமான ஆகாரத்தைப் புசிப்பதால் புத்திநிர்மலமாகிறது.

2349. பிரம்மசரிய விரதத்தை முடித்துவிட்டுக் கிரஹஸ்தாஸ்ரமம் போகாதவர்களும் கிரஹஸ்தாஸ்ரமத்தை முடித்துவிட்டு வானப்பிரஸ்தாஸ்ரமம் போகாதவர்களும் வானப்பிரஸ்தாஸ்ரமத்தை முடித்துவிட்டுச் சந்நியாஸ ஆஸ்ரமம் பெறாதவர்களும் நிராஸ்ரமிகள்.

2350. செய்கிற கருமங்களையெல்லாம் பிரஹ்மவித்தைக்குச் சாதகமாகச் செய்துகொள்ளவேண்டும்.

2351. எல்லா ஆஸ்ரமிகளும் பிரஹ்மத்தை உபாசிக்கலாம்.

2352. தன்னுடைய சொரூபத்தை அறிந்துகொண்டே கர்மங்களைச் செய்கிறவன் பந்தப்படுகிறதில்லை.

2353. சரீரபந்தங்களைவிட்டுக் கர்மங்களைச் செய்தால் சாந்தமுண்டாகிறது.

2354. கர்மத்தைக் கர்மமாக்காமல் ஞானமாக்கி விடவேண்டும்.

2355. பேதவாசனை யொழிந்தவனுக்கும் மனது ஏகாக்ரத் தன்மையும் நிர்மலமும் ஆனவனுக்கும் ஞானோதயமுண்டாகும்.

2356. பஞ்சாக்கினிவித்தையை உபாசித்தவன் அதன் பலத்தால் ஸ்வர்க்கம் அனுபவித்து மீண்டும் ஆகாயம் மேகம் பூமி புருஷன் ஸ்திரீ முதலிய ஐந்து அக்கினியிலும் சம்பந்தப்பட்டுப் பிறக்கிறான்.

2357. பரமாத்மா ஒன்றை மட்டும் தியானித்தவன் எல்லாவற்றையும் தியானித்தவனாகிறான்.

2358. கர்மாப்பியாசியிடம் ஞானத்தையும் ஞானாப்பியாசியிடம் கர்மத்தையும் கூறக்கூடாது.

2359. கர்மம் உபாஸனம் யோகம் ஞானம் இந்நான்கையும் ஜீவர்களின் பரிபக்குவ அதிகார நோக்கிப் போதிக்கவேண்டும்.

2360. எந்தக் காரியங்களிலும் முன்னும் பின்னும் ஆசமனம் செய்வதால் அந்தக் காரியம் சுத்தமாகிறது. போஜன காலத்தில் முன்பின் ஆசமனஞ் செய்வதால் பிராணவாயு திருப்தியடைகிறது.

2361. பிரபஞ்ச ஜீவர்களின் பரிபக்குவ நோக்கி அதிகார தேவர்களாலும் ரிஷிகளாலும் சொல்லப்பட்டிருக்கிற சாஸ்திரங்களைக் குற்றஞ் சொல்லக்கூடாது.

2362. பிரஹ்மத்தைத் தவிர மற்றவை எவையானாலும் அதை அடைய எண்ணலாகாது.

2363. அதிக சீதளமுள்ள இடங்களைவிட அதிக உஷ்ணமுள்ள இடங்களையே யோகிகளும் தபசிகளும் விரும்புகிறார்கள்.

2364. உலக உபகாரவடிவ கைங்கரியத்தை மீறுகிற சுதந்தர ஞானிகளும் பலரிருக்கிறார்கள்.

2365. அவதார புருஷர்கள் சிருஷ்டி கர்த்தர்கள் அதிகார ரிஷிகள் பாஷ்ய கர்த்தர்கள் இவர்களால் அருளப்பட்ட சாஸ்திரங்களையும் வேதாகமங்களையும் சகலாதீத அதிக்கிரம யோகிகள் அங்கீகரிப்பதில்லை.

2366. தெய்வீக அவதார புருஷர்களும் அதிகார ரிஷிகளும் பிரஹ்மஞானிகளும் ஞானசாரியர்களும் உலகோபகாரமாகக் கர்மோபாசனைகளை நடித்துக் காட்டுகிறார்கள்.

2367. பரிபக்குவமான ஞான ஜீவர்கள் காலாந்தரத்தில் யோக மஹிமையால் ரிஷிகளாகிறார்கள். அந்த ரிஷிகளை ஈஸ்வராக்ஞையால் பிரபஞ்ச அதிகார புருஷர்களாகிறார்கள். அவர்களே திரிமூர்த்திகள் பஞ்சமூர்த்திகள் ஸ்கந்தர் கணேஸ்வரர் இவர்களாகிறார்கள்.

2368. பிரஹ்மத்தை ஜீவனாகத் தியானிக்கக் கூடாது. ஜீவனைப் பிரஹ்மமாகத் தியானிக்கலாம்.

2369. உற்பத்திலயம் தெரியாத வஸ்துக்களை அதிக்கிரமிக்க முடியாது.

2370. சகல இந்திரியங்களிலும் சப்த இந்திரியமே பலமுடையது.

2371. மனித சரீர உபயோகத்திற்காக ஒன்பது துவாரத்தை யுண்டாக்கிய கடவுளுக்குக் கடுக்கன் புலாக்கு முதலிய ஆபரணங்கள் தரித்துக் கொள்ளலாமென்ற எண்ணமிருந்தால் அதற்கு வேண்டிய சிறிய துவாரங்களைச் சிருஷ்டித்திருப்பார்.

2372. எண்ணிக்கைக்கு அடங்காத மாயா சக்திகளையும் மனோசக்திகளையும் ஒரே சக்தியால் இல்லாமற் செய்துவிடலாம்.

2373. ஆசை கோபம் லோபம் மயக்கம் துவேஷம் இவைகளுக்கு ஆதாரஸ்தானம் ஒன்று.

2374. பற்றுக்கு ஆதாரமேதுவென்றாராய்ந்து அதைவிடாமல் வெறும் பற்றை மட்டும் விடுவதால் மீண்டும் அப்பற்றுமுளைக்க ஆரம்பிக்கிறது.

2375. தபோசக்தி பெற்றவன் அதைச் சாப முதலிய வீண் காரியங்களுக்கு உபயோகப்படுத்தி விடாமல் ஞானமார்க்கத்

திற்கோ அல்லது உலக உபகார காரியங்களுக்கோ சாதனமாக்கிக் கொள்ள வேண்டும்.

2376. ஒரே புருஷனே சூரியனுக்கு மத்தியிலும் நேத்திரத்திற்கு மத்திய ஸ்தானத்திலும் காணப்படுகிறான்.

2377. ஞான யாகத்திற்கு எஜமானன் ஆத்மா, மனைவி சிரத்தை, சமித்துக்கள் சரீரம் இந்திரியங்கள், யாகசாலை மார்பு, பசுக்கள் காமாதிக் கூட்டங்கள்.

2378. தபோ உஷ்ணத்தையும் யோக உஷ்ணத்தையும் அதிகமாக்கிக் கொண்டவன் தீவிரமாகப் பிரஹ்மத்தை நோக்கிச் செல்லுகிறான்.

2379. பிரஹ்ம ஞானத்திற்குச் சத்துருக்கள் நாசமடைய வேண்டுமென்று சர்வேஸ்வரஎம்பெருமானை ஸ்மரித்து வர வேண்டும்.

2380. பகவானிடம் அனித்தியமான வரங்களையும் பிரார்த்தனைகளையும் கேட்கலாகாது.

2381. சகுணப் பிரஹ்மோபாசகனுக்கு அர்ச்சிராதிகதியால் பிரகிருதி மண்டலத்தைத் தாண்டுகிற வரையில் சில சூக்ஷ்ம கர்மங்களும் பிராகிருத சூக்ஷ்ம சரீரமும் இருக்கின்றன.

2382. ஸ்கந்தர் வசிஷ்டர் வியாஸர் அகஸ்தியர் முதலியவர்கள் தெய்வீக சக்திபெற்ற அதிகார புருஷர்கள். அவர்களுக்கு இன்னும் பிராரத்தம் நசிக்கவில்லை. நசித்தவுடன் மாறாத முக்தியை அடைவார்கள்.

2383. பிரஹ்மத்தை அறிய விரும்புகிறவர்கள் ஒரு மதத்திலும் ஒரு வேதத்திலும் ஒரு வஸ்துவிலும் அழுத்தம் வையாமல் தன்னிடத்தில் மட்டும் அழுத்தம் வைத்திருக்க வேண்டும்.

2384. காய் கனியுள்ள மரங்களில் கல்லெறிவதால் பாபமுண்டாகிறது.

2385. தேவர்களுக்கெல்லாம் தேவனும் தலைவனும் ஈசனுமான புருஷன் எதைப் பெரிதாக எண்ணி தியானிக்கிறானோ அந்த வஸ்துவையே நாமும் தியானிக்க வேண்டும்.

2386. பூமி அதிரும்படி நடக்கக் கூடாது. திடுக்கிடும்படி பேசக்கூடாது.

2387. எந்த வஸ்துவையும் கூர்ந்து பார்க்கக்கூடாது.

2388. சகலத்தையும் அபேதமாகப் பார்ப்பவன் சன்னியாசி.

2389. சுயநன்மையைக் கருதுபவர்களைக் காட்டிலும் பிறர் நன்மையைக் கருதுபவர்கள் எத்தனையோ மடங்கு விசேஷமானவர்கள். நிஷ்காமகர்மிகள் பலனை அடைகிறார்கள்.

2390. ஆத்மாவில் மனதை அடக்க ஆரம்பித்தவன் அபார சக்தியுள்ள மஹா வீர்யவானான யுத்தவீரன்போலிருக்க வேண்டும்.

2391. பிரணவவுபாசனையின் முடிவில் நாதப் பிரஹ்மமும் அதனுச்சியில் நாதாந்தமும் அதன் முடிவில் ஆத்மாவும் அதனுபாசனையால் பரமாத்மாவும் பிரகாசிக்கிறது.

2392. தீரர்களான எவ்வனப் பருவமுடைய காமபுருஷர்கள் மன்மத கோலாகல சாஸ்திரப்படி தங்களுக்குத் தகுந்த அதிரூப லாவண்ய பால்ய ஸ்திரீகளைப் பலவித லக்ஷணங்களோடு போசஞ் செய்வதுபோல, ஜெகதீஸ்வரனும் பிரகிருத தத்துவ சாஸ்திரப்படி நானாவித சக்தி லக்ஷணங்களோடு மாயையைப் போகம் செய்கிறான்.

2393. அவித்யா சம்பந்தத்தினால் ஜீவனுடைய அனாதி மாயையின் உண்மை மறைவுபட்டிருக்கிறது.

2394. பகவத் தியானத்தினால் ஜீவனுடைய ஆதி மாயை நசிக்கிறது.

2395. மாயா சக்தியினல் ஜீவர்களுடைய சர்வக்ஞத்துவ சத்திய சங்கல்பத்துவ சதாசாரங்கள் மூடப்பட்டிருக்கின்றன.

2396. அஞ்ஞானத்தை நாசஞ் செய்துவிட்ட ஜீவன் நினைத்ததை முடிக்க வல்லவனாகிறான்.

2397. பிரஹ்மப் பிராப்தியைத் தவிர மற்றப் பிராப்திகளைக் கொடுக்கிற வித்தைகளெல்லாம் காம்ய வித்தைகள்.

2398. மானஸ யாகத்தை வருணாஸ்ரம பேதமின்றி ஸ்திரீ புருஷ தாரதம்மியமின்றி யாரும் அனுஷ்டிக்கலாம்.

2399. பகிர்முக விருத்தியோடு போஜனஞ் செய்பவர்கள் யாரும் பிராணாக்னி ஹோத்திரம் செய்யவேண்டும்.

2400. ஒரு புருஷாயுள் வரையுள்ள முப்பத்தாறுயிரம் நாட்களுக்கும் முப்பத்தாறுயிரம் அக்னிகளை மனமே சிருஷ்டித்துக் கொள்ளுகின்றது.

2401. மனத்தை அடக்கவேண்டியவர்கள் ஹிருதயவுபாசனை செய்யவேண்டும்.

2402. எந்தக் காரியத்தையும் ஆரம்பமுதல் முடிகிறவரை ஒருவருக்கும் தெரியாமல் முடித்துவிடுவது உத்தமம்.

2403. மனத்தினல் எது நினைக்கப்படுகிறதோ அதை வாக்கிற்பேசுவதும் வாக்காற் பேசுவதைச் சரீரத்தாற்செய்வதும் சுத்தமானவர்களுக்கு லக்ஷணம்.

2404. மாதா பிதாக்களின் வம்ஸங்களிரண்டும் சுத்தமாயிருக்கப் பிறந்தவனது சரீரமும் கர்மமும் பரிசுத்தமானது.

2405. காரியம் வீர்யம் இவ்விரண்டில் வீர்யம் பெரிதும் பலமுடையதுமாயிருந்தாலும் காரியம் முடிகிறவரை வீரியத்தை அடக்கி வைத்திருக்கவேண்டும்.

2406. மேகமானது பலவித ரூபத்தோடு ஆச்சரியப்படும் படியாகத் தோற்றி நொடிப் போதில் மறைந்துவிடுந் தன்மையுடையது பகிர்முக கந்தர்வ நகரம்.

2407. சூரியப் பிரகாசமில்லாத தேசத்தில் வசிப்பவர்கள் தங்களது சரீரப் பிரகாசத்தினுல் இருளைப் போக்கிக் கொண்டு சஞ்சரிக்கிருர்கள்.

2408. தேவர்களுக்கு எப்போதும் இருபத்தைந்து வயதாகவேயிருக்கிறது.

2409. சூர்யன் சந்திரன் சுக்கிரன் புதன் செவ்வாய் வியாழன் சனி இவவேழுமண்டலங்களும் பூமண்டலத்திற்கு மேலே மேல் மேலாக முறையே அமைந்திருக்கின்றன.

2410. சனி மண்டலத்திற்கு மேல் சப்தரிஷி மண்டலமும் அதற்கு மேல் துருவமண்டலமும் இருக்கிறது.

2411. துருவமண்டலத்திற்குமேல் மஹத்துக்கள் வசிக்கிற லோகமும், அதற்குமேல் ஜனகாதியர் உலகமும், அதற்குமேல் தபசிகள், யோகிகள் வசிக்கிற உலகமும், அதற்குமேல் சத்தியவுலகமும் இருக்கின்றன.

2412. ஸ்நானம் முதலியவைகளை இழந்து செய்கிற தவம் விசேஷமானது.

2413. சரீரதேஜசாலும் உருவத்தாலும் சத்துவ காம்பீர்யத்தாலும் ஜிதேந்திரியர்கள் என்பது விளங்கும்.

2414. நெடுநாள் சிநேகிதத்தை ஒரு நொடிப்பொழுதில் ஸ்திரீகள் கெடுத்துவிடுவார்கள்.

2415 ஆசையுள்ளவரையில் யாவருக்கும் சஞ்சாரம் இருந்துகொண்டேயிருக்கும்.

2416. தாழ்ந்தவர்களின் தாழ்ச்சியை உயர்ந்தவர்கள் நினைக்கக் கூடாது.

2417. விளையாட்டுக்காகவாவது பிரதிபலத்தை விரும்பியாவது மனதில் விருப்பமின்றியாவது ஒருவருக்கும் ஒரு உபகாரமும் செய்யக்கூடாது.

2418. காமக்குரோதங்களை ஜெயித்தவன் பிராம்மணத் தன்மை பெற்றவன்.

2419. அழிந்து போகிற புண்ணிய காரியங்களில் அவிவேகிகள் பிரவேசிக்கிறார்கள்.

2420. கோபம் சாபம் காமம் இம்மூன்றினால் தபோசக்தி குறைந்து போய்விடுகிறது.

2421. கிருஷ்ணாஜனம் புலித்தோல் முதலியவைகளில் தலைப் பக்கம் காலையும் கால்பக்கம் தலையையும் வைத்துப் படுக்கக்கூடாது

2422. தெற்குக் கிழக்குத் திக்குகளில் தலைவைத்து நித்திரை செய்தால் சுத்த தேவதை குடிகொள்ளுகிறது.

2423. பர்த்தாவோடு கூடியிருக்கிற ஸ்திரிகளுக்கு பர்த்தாவின் அனுமதியின்றித் தவம் யோகம் உபதேசம் முதலியவைகளில் சுதந்தரத்துவம் கிடையாது.

2424. சண்டாளன் ஜலம் ஸ்திரீ அக்கினி சர்ப்பம் இடி மலை பசு வீடு மரம் பற்களுள்ள ஜந்துக்கள் இவைகளாலும் பிராம்மண சாபத்தாலும் மரணமானவர்களுக்குச் செய்யப்படுகிற ஜலதர்ப்பணம் சிராத்தம் முதலிய பரலோக காரியங்களின் பலன்கள் அவர்களுக்குப்போய்ச் சேராமல் இடையிலேயே நசித்துவிடுகின்றன.

2425. கனவில் தோன்றிய வஸ்துக்களை நனவிற் கண்டனுபவிக்கக்கூடிய அற்புத மகிமைவாய்ந்த ருஷ்யமூக பருவத சிகரம் போன்ற ஸ்தானங்கள் பரதகண்டத்தில் பல இருக்கின்றன.

2426. ஆத்மஞானமில்லாத ஒரு காரணத்தினால் ஒருவருக்கொருவர் துவேஷமும் பொறாமையு முண்டாகின்றன.

2427. சிநேகிதனை ரக்ஷிக்கும் பொருட்டுப் பொய் கூறுவதால் குற்றமில்லை.

2428. மிகுதியும் வஞ்சகமாயுள்ளவன் தன் கருத்தை மறைத்துக் கொண்டிருப்பான்.

2429. மறைவாகக் கெட்ட எண்ண முடையவர்கள் தெளிவான மனத்துடன் எதிரே வரமாட்டார்கள்.

2430. தெளிந்த முகமுடையவர்கள் சுத்தமானவர்கள்.

2431. முகவிகாரம் புழுக்கம் தழுதழுப்பு அங்கசேஷ்டை இவைகளையுடையவர்கள் துஷ்ட அபிப்பிராய முடையவர்கள்.

2432. சிறந்தவஸ்துவாயிருந்தாலும் கலகத்திற்குக் காரணமாயிருந்தால் அதை விட்டுவிடவேண்டும்.

2433. சூரியன் ஆகாயத்தின் நடுமத்தியிலிருக்கிற அபிஜித் முகூர்த்தத்தில் பிரயாணமாகிற காரியங்கள் ஜெயமாகும்.

2434. யாதொரு சரீரசம்பந்தமுமில்லாத விதேகமுக்தியை வியாபிப்பதே எந்தமார்க்கத்திலும் விசேஷமானது.

2435. திரிமூர்த்திகளின் பெரிய செயல்கள், சிருஷ்டிகர்த்தர்களின் அருமையான செய்கைகள், ரிஷிகளின் ஆச்சரியமான சித்திகள், மற்றுமுள்ள பிரபஞ்சப் பிரமைகள் இவைகளெல்லாம் பிரஹ்மஞான மில்லாதவர்களுக்குப் பெரிதாகத் தோன்றுகிறது.

2436. சரணமடைந்தவன் எவ்வளவு தோஷமுள்ளவனானாலும கைவிடக் கூடாது.

2437. மனதை ஏகாக்கிரப் படுத்திக்கொண்டு யோகமாவது தவமாவதுசெய்ய ஆரம்பித்தால் உருவமுள்ள தடைகளும் உருவமில்லாத தடைகளும் வந்து சேருகின்றன.

2438. ஒரு பிரயோஜனத்தையும் உத்தேசிக்காமல் ஒருவனிடம் ஒருவன் வரமாட்டான்.

2439. கலப்பில்லாத தனி ஞானத்தோடிருப்பவர்களைக் காட்டிலும் பக்தியோக கர்மயோகங்களைக் கொண்டவர்கள் விசேஷமானவர்கள்.

2440. சொந்தப் பிரயாண காலத்திலோ, கிருஹப் பிரவேசத்திலோ, விவாக காலத்திலோ, வலது காலை முதலில் எடுத்து வைக்கவேண்டும். சத்துருக்களுடைய வீட்டிலோ கிராமத்திலோ இடது காலை வைக்க வேண்டும்.

2441. தலைவன் ஒரு காரியஞ் செய்ய வேண்டுமென்று நியமித்து அனுப்புகையில் அதற்கு விரோதமின்றி அனுகூலமாகவ் மேலான பெரிய காரியங்களையுஞ் சாதித்துக் கொண்டு வருபவன் உண்மையான தூதன்.

2442. தவம் பெருக ஆரம்பத்தால் ஜீவாத்மா சரீரத்தினின்று நழுவி ஜோதி லோகங்களை எதிர்பார்க்கும்.

2443. சங்கல்பத்தை யொடுக்க ஆரம்பித்தவர்கள் ஒருவிதமான வெளித் தர்மங்களையும் அனுஷ்டிக்க வேண்டியதில்லை.

2444. எந்த மனுஷ்யனும் தேவனும் நான்கு நுகத்தடிதூரம் வரை ஒருவருமில்லாதபடி யிருந்துகொண்டு தூங்க வேண்டும்.

2445. பசுவைக் காலால் உதைக்கவும் மிதிக்கவும் கூடாது.

2446. எப்பொழுது அதர்மம் தர்மத்தைப் பாழாக்குகிறதோ அப்பொழுது கலியுகமென்றும், எப்பொழுது தர்மம் அதர்மத்தைப் பாழாக்குகிறதோ அப்பொழுது கிருதயுகமென்றும் கண்டுகொள்ள வேண்டும்.

2447. நான்காவது ஜாமத்தில் சூரிய பரிவேடம் தோற்றுமானல் உலகம் அழியும், சூரிய மண்டலம் துவாரமாகத் தோற்றினல் இராஜாங்கம் அழியும்.

2448. மனுஷ்யன் தெய்வத்தன்மை பெற்றிருந்தால் மனுஷத்தன்மையையே வெளியில் காட்டிக்கொண்டிருப்பான்.

2449. உண்மை ஞானிகள் உலகத்தை வேறாகவும் தன்னை வேறாகவும் காண்பதில்லை.

2450. அனித்திய காரியங்களின் சித்திகளை விரும்புவதை விட்டுவிட்டு நித்தியத்தின் சித்தியை விரும்பி முயற்சி செய்கிறவர்கள் நித்திய சித்தர்கள் ஆகிறார்கள்.

2451. தெரியாததைத் தெரிந்ததென்றாவது தெரிந்ததைத் தெரியாததென்றாவது எதார்த்தமானவர்களிடத்தில் காட்டிக் கொள்ளக்கூடாது.

2452. உள்ளங்கை உள்ளங்கால் முகம் இம்மூன்றிடங்களில் பர்வதம் தாமரை சங்கம் சக்கரம் இந்நான்கின் ரேகைகளுள்ளவர்கள் ராஜயோக சாமுத்திரீக லக்ஷணமுடையவர்கள்.

2453. பகன் என்னும் சூர்யன் உச்சத்திலிருக்கக் கூடிய காலத்தில் விந்தம் என்னும் முகூர்த்தத்தில் பிறக்கிற பெண் குழந்தை ராஜாத்தியாகவும் ஆண்குழந்தை யோகியாகவும் ஆகிறது.

2454. வாக்குத் தத்துவத்தின் அதிதேவதையை உபாசித்து வாக்கை அந்தராத்மாவில் அடக்கிக்கொள்ள வேண்டும்.

2455. எந்த விஷயமும் தனக்குத் தெரியவில்லையானால் தெரியவில்லையென்று சொல்லிவிட வேண்டுமே தவிர அதில் குற்றங் கண்டுபிடிக்கக் கூடாது.

2456. தன் ஆத்மாவில் அன்பில்லாதவன் ஒரு யோகத்தையும் அடையப் போகிறதில்லை. ஆண்டவனும் அருள்புரிய வதுவில்லை.

2457. பாபிகளான ஈன ஜாதிகளுக்கு உயர்ந்த ஜாதிக்காரர்கள் ஊழியம் செய்யக்கூடாது.

2458. எள் சம்பந்தப்பட்ட எந்தப் பதார்த்தங்களையும் தேவ பிதுர் காரியங்களுக்கு உபயோகப்படுத்தாமல் உண்ணக் கூடாது.

2459. குரு உபதேசத்தை மறந்தவன் மஹா பாபத்தை அடைகிறான்.

2460. காலத்தையும் கர்மத்தையும் ஈஸ்வரனையும் நம்பியவன் ஒன்றிலும் கலக்கமடைய மாட்டான்.

2461. உதராக்னியான பசியைத் தணிப்பதனிமித்தம் உண்ணக்கூடிய ஆகார வர்க்கங்களில் இது நல்லது இது கெட்டது இது வேண்டும் இது வேண்டாம் இது சம்மதமானது இது சம்மதமில்லாதது என்றெண்ணுகிறவர்கள் வயிற்றை அடக்கமுடியாதவர்கள். அவர்களால் நாவையும் குறியையும் அடக்க முடியாது.

2462. கருமயோகி பக்தியோகி ராஜயோகி ஆத்மயோகி ஹடயோகி ஞானயோகி இவர்கள் ஒவ்வொருவர்களுக்கும் ஏற்படுத்தப்பட்டிருக்கிற நிபந்தனைகள் வேறு வேறானவைகள்.

2463. இன்னபடிதானிருக்க வேண்டும், இன்ன இடத்தில் தான் வசிக்க வேண்டும், இவ்வளவு காலந்தானிருக்க வேண்டும், இன்ன செய்கைதான் செய்ய வேண்டும், இத்தனை பேருடனும் இன்ன பேருடனும்தானிருக்க வேண்டும், இவ்வளவு சக்திதானுள்ளது, என்ற நிபந்தனைகளை உடையவர்கள் எவராயிருந்தாலும் பந்தமுடையவர்கள்.

2464. பிரகிருதி மாயை முக்குணம் மூன்று சரீரம் மூன்றவஸ்தை மனம் இந்திரியங்கள் இவைகளே சம்சார பந்தமென்று கண்டுகொள்ள வேண்டும்.

2465. விஷயசுகங்களின் தன்மை, போக்கு, சக்தி, முடிவு, அர்த்தம், அனர்த்தம், பலன், இவைகளின் ரகஸ்யங்களைத் தெரிந்துகொண்டபின் அதைவிட ஆரம்பிக்கலாம்.

2466. பிரஹ்ம திருஷ்டியினின்று நழுவாமல் விஷயபோகங்களை அனுபவிப்பவன் உலகத்தை முற்றுந்துறந்த துறவியே ஆவான்.

2467. பற்றில்லாமற் செய்யப்படுகிற எந்தக்கர்மங்களும் செய்பவர்களைப் பற்றுகிறதில்லை.

2468. ஸ்திரீபுருஷ சுகங்களின் உண்மைகளையும் மேன்மை தாழ்மைகளையும் உள்ளவாறு அறிந்து கொண்டவர்கள் அதற்கும் மேலான சுகத்தைஅறிய ஆசைப்படுகிறார்கள்.

2469. **துக்கம் ஆசை சுகம் துவேஷம் அதிகாரம் அன்பு அறிவு அகண்டம்** இந்தப் பாவனைகளால் சகல ஜீவர்களும் உலகத்தைப் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

2470. எவன் சன்மார்க்கயோகியும் தபசியும் ஞானியுமாயிருந்தும் பிறரால் தூஷிக்கப்பெறுகிறானோ அவன் பூர்வபுண்ணிய சாலி.

2471. செய்யப்படுகிற புண்ணிய பாபங்களுக்குப் பலானுபவம் எப்போதுமில்லையென்று சாதிக்கிற நாஸ்திகமதவாதமானது சூக்ஷ்மபுத்தியில்லாத விஷய ஆசைகளோடுகூடிய உலகமயக்கமுடையவர்களால் அங்கீகரிக்கப்படுகிறது.

2472. அர்த்தந்தெரியாமற் செய்யப்படுகிற எந்தக் காரியங்களும் பிரயோஜனப்படமாட்டாது. அதுபோல, அவமானமும் அறிவீனமும் வேறில்லை.

2473. பொய்யை மெய்போல நடித்துக்காட்டுகிறவன் சத்தியவாதி, மெய்யைப் பொய்போல நடித்துக்காட்டுகிறவன் அசத்தியவாதி.

2474. அவரவர்களின் சொந்த ஸ்திரீகளுக்குப் பரபுருஷர்களின் சம்பாஷணங்கள் நேராதபடி புருஷர்கள் ஜாக்ரதையாகப் பார்த்துக் கொள்ளவேண்டும்.

2475. வாக்குத் தத்துவத்தையும், மனோதத்துவத்தையும், சரீர தத்துவத்தையும், அதனதன் உற்பத்திகளோடு அதிதேவதைகளுடன் கண்டறிந்து அவற்றை ஜென்ம ஏதுவில்லாத பரிசுத்த நிலைமையில் வைத்துக் கொள்ளவேண்டும்.

2476. அவ்யக்தமான பிரஹ்மத்தினது சிறிது சக்தியைப் பெற்றுக்கொண்டு பஞ்சமூர்த்திகள் ரிஷிகள் அவதார புருஷர்கள் இவர்கள் பல பெரிய காரியங்களைச் செய்கிறார்கள்.

2477. எப்போதும் மனத்தை யாதொரு சம்சயமுமின்றித் தெளிவாக வைத்துக் கொண்டிருப்பது தெய்வசக்தியாலுண்டாகிறது.

2478. அன்னஆகாரங்கள் போகங்கள் முதலிய உலகசுகங்களை வெறுத்து ஆரண்யத்திற்சென்று தவஞ்செய்கிறவர்களில் அஞ்ஞானிகளுண்டு, உலகபோகங்களில் ஆழ்ந்தியவர்களின் பாவனை போல் காணப்பட்டுப் பெரிய நகரங்களில் உலகவிவகாரம்செய்து கொண்டிருப்பவர்களில் ஞானிகளுண்டு.

2479. பக்தியோகிகள் பராதீன சக்தியுடையவர்கள் ஆத்மயோகிகள் சுவாதீன சக்தியுடையவர்கள்.

2480. ஞானிகள் யோகிகள் பக்திமான்கள் ஆசாரியர் மாதா பிதா பெரியோர் இவர்களது பாதங்களைத் தொட்டு நமஸ்கரிப்பதனால் புண்ணிய சக்தி வளருகிறது.

2481. சர்வக்ஞர்களும் சத்திய சங்கல்பவாதிகளுங்கூடக் காலத்தை எதிர்க்க முடிவதில்லை.

2482. உண்மையான ஞானதிருஷ்டியுடையவர்கள் ஒரு மதத்தையும் ஆசாரியர்களையும் ராஜாங்கத்தையும் கொள்கைகளையும் மார்க்கங்களையும் குறைகூறமாட்டார்கள்.

2483. பிரகிருதியைத்தாண்டிய மஹா புருஷனால் செய்யப்பட்ட சாஸ்திரங்கள் மட்டும் மனோசலனத்தையும் மயக்கத்தையும் தீர்க்கக்கூடியது.

2484. உலகத்திலுள்ள ஒவ்வொரு ஆசைகளும் ஒவ்வொரு இந்திரியங்களுக்குச் சுகத்தைக் காட்டிமயக்கும், பெண்ணாசை ஒன்று மாத்திரம் ஏககாலத்தில் எல்லா இந்திரியங்களுக்கும் இன்பத்தைக்காட்டி ஏமாற்றிவிடும்.

2485. உள்ளிருந்துண்டாகிற பயத்தைத்தவிர வெளிப்பயம் ஒன்றுமில்லாதவன் நித்தியவிவேகி.

2486. பிராரத்த கர்மமானது காலசக்தியை அனுசரித்துக் கொண்டு அப்போதைக்கப்போது புத்தியை மாற்றிக்கொண்டு போகிறது.

2487. ஒன்றிலுந்தாக்கற்று ஒன்றையும் அனுசரியாது ஒன்றிலும் பற்றின்றி ஒரே வஸ்துவாய் இருப்பது கடவுள்.

2488. சகலமும் தன்னிடத்திலிருந்துண்டாகிறதாக எவனுக்கு அனுபவத்தில் தோற்றுகிறதோ அவன் சங்கல்பத்தை ஜெயித்தவன்.

2489. ஒரு சிஷ்யன் ஒவ்வொரு விஷயத்திற்காக ஒவ்வொரு குருவை அடையலாம்.

2490. மஹாத்மாவாகிய தத்தாத்திரேய மஹரிஷிக்கு இருபத்து நான்கு குருவும், விசிஷ்டாத்வைத மத ஆசாரியராகிய இராமானுஜாசாரியருக்கு ஐந்து குருவும் இருந்திருக்கிறார்கள்.

2491. பிரஹ்ம பாவனையால் எல்லோரும் ஒன்று, அந்தக்கரணபாவனையால் எல்லோரும் வேறு.

2492. நான் எனது என்னும் அபிமானத்தால் அகங்காரத்தை அடைந்திருக்கிற ஜீவாத்மாக்களின் அறிவின்மை போன்று வேறு உலகத்திலில்லை.

2493. அந்தர்முக ஆத்மானுபவத்திற் பழகியறியாத ஸ்தூலபுத்தியுடையவர்கள் பகிர்முக அனித்தியக் காக்ஷிகளில் ஆச்சரியமும் ஆனந்தமும் அடைகிறார்கள்.

2494. ஞானயோகம் பக்தியோகம் கருமயோகம இம்மூன்று யோகங்களும் ஒரேவஸ்துவைக் குறிப்பதாயிருந்தாலும் ஒன்றுக்கொன்று மார்க்க வேறுபாடுகளும் சாதனவேற்றுமைகளும் பிரதிபலிக்கின்றன. இம்மூன்று யோகங்களுக்கும் இடையிடையே பல நூற்றுக் கணக்கான சூக்ஷ்ம யோகங்களும் மறைந்து கிடைக்கின்றன.

2495. சிறிய அனுபவத்தால் பெரியவுலகத்தைச் சிறியதாக ஆக்கிக்கொண்டவர்கள் சித்தர்கள்.

2496. இருந்து மில்லாதவஸ்துவும் இல்லாமல் இருக்கிற வஸ்துவும் ஒன்றென்று வாதிக்கிற சூன்யவாதிகளுடைய தர்க்கம் யுக்திக்குப் பொருந்த வில்லே.

2491. பிரபஞ்சத்திலுள்ள வஸ்துக்கள் தனக்கு அன்னியமாகத் தோற்றும் போது அஞ்ஞானமும் தானுகத் தோற்றும் போது ஞானமும் உதயமாயிருக்கிறதென்று தெரிந்து கொள்ள வேண்டும்.

2498. விஷய இச்சைகள் போவதுதான் கடினம் ஞானேதயமாவது சுலபம்.

2499. துவாரகாபுரிவாசனுன ஸ்ரீ கண்ணபிரான் ஏழுதிரைக்குள்ளிருந்து பேசினுன், அயோத்தியாதிபதியான ஸ்ரீராகவர் ஒன்பது திரைக்குள்ளிருந்து பேசிவிட்டார், விதேகஜனகராஜன் பதினுன்கு திரைக்கப்பாலிருந்து சம்பாஷித்தான், தீரமஹாபிரமசாரியாகிய பீஷ்மாசாரியர் ஆறுதிரைக்குள்ளிருந்து பேசி யிருக்கிருன், பக்தர்களின் சகஜலோலனுகிய ஸ்ரீ கிருஷ்ணசைதன்யர் எட்டுத் திரைக்குள்ளிருந்து மொழிபகர்ந்தான், அழிவற்ற சரீரமுடைய கிருஷ்ணத்வைபாயனர் இருபத்து மூன்று திரைக்கப்பாற்போய் அங்கிருந்து பேசினுர். ஞானசொரூப காருண்யபராகிய புத்தபகவான் ஐந்து திரைமறைவிலிருந்து வார்த்தையாடினுன், பிரம்மபுத்திரராகிய வசிஷ்டமஹரிஷி பனிரெண்டு திரைக்கப்பாற் பேசினுன், பிரகிருதிவசமாகாத கபிலமஹரிஷி மூன்று திரைக்குள்ளிருந்து உபதேசித்தான். பரமாத்ம நிஷ்டாபரராகிய ஜடகோப முனீஸ்வரர் நான்கு திரைக்குள்ளிருந்து வசனம் புகன்றிருக்கிருர், சகலபேதங்களையும் அறுத்தெறிந்த சுகப்பிரஹ்மரிஷி ஐந்து திரைக்கப்பாற்போய்ப் பேசினுன், சாந்த சகஜ நிஷ்டானுபூதிவாய்ந்த தத்தாத்திரேய முனிவரர் ஆறுதிரைக்குள்ளபர்ந்து உபதேசமொழி பகர்ந்தார்.

2500. இகலோகவாழ்வு பரலோகப்பழக்கம் மோக்ஷ இன்பம் இம்மூன்றின் ரகஸ்யங்களை நன்குபுணர்ந்து அவைகளின் அதி ஆச்சரியமான சம்பந்தம் வைத்துக்கொண்டும் உலக சஞ்சாரமுடையவர்கள் ராஜரிஷிகள்.

2501. பகிர்முக லௌகீக உலகத்தில் அதிசூக்ஷ்மமும் காம்பீர்யமும் செல்வாக்கும் செல்வமும் பலமும் பொருந்தியிருக்கப்பட்டவர்கள் சன்மார்க்கர்களாயிருப்பது துர்லபம்.

2502. வேதசாஸ்திரங்களுக்கும் ஆதிவைதீக சனாதன தர்ம மஹரிஷிகளுக்கும் விரோதமானதும் எதிரிடையானதுமான அரசர்களையும் அரசாங்கத்தையும் பிரஜைகளையும் முன்னேறவிடாது தடுத்துவிட வேண்டும்.

2503. தனது லௌகீக வைதீக காரியங்களுக்குத் தடை செய்துகொண்டு உலக ஜனங்களுடன் அன்போடிருப்பது வேதத்திற்கு அங்கீகாரமில்லை.

2504. உலகப் பிரகாசத்தில் உள்ளம் மயங்குகிறவரை உலகாதீதப் பிரகாசத்தில் உறுதி கொள்ளாது.

2505. இல்லாததைக் கண்டுபிடிப்பது எப்போதுமில்லை. கண்டுபிடித்தது புதிதென்றெண்ணுபவன் அவிவேகி.

2506. தன்னைத்தானே அறிய வேண்டித்தானே தனித்துத் தவறாது அம்மார்க்கத்துசென்றுகொண்டிருந்தால் கீர்த்தி அந்தஸ்து குணம் செல்வம் வேதம் முதலிய சம்பத்துகளும் பின் தொடர்ந்து ஓடிவந்து கொண்டிருக்கும். பின்னாலே வந்துகொண்டிருக்கிற போகங்களில் இச்சைகொண்டு திரும்பிப் பார்த்தால் ஓடிவிடும்.

2507. பிரம்மரந்திரத்தினின்று புறப்படுகிற அசுப எண்ணங்களைப் போக்குவதற்குக் கபால சோதனமே தகுந்த வழியென்று சூர்ய குமாரர்களான அஸ்வினீ தேவர்கள் கூறுகிறார்கள்

2508. பொருளறிவு யுக்தி அறிவு அருளறிவு இம்மூன்றும், முறைப்படியே விவேகிகளைத் தொடர்கின்றன.

2509. வட பாரதகண்டத்தில் ஸ்ரீ கிருஷ்ணசைதன்ய தேவரும் தென்பாரதத்தில் ஸ்ரீ சங்கர பகவத் பாதாசாரியாரும் பிரசாரம் செய்த பின்புதான் புத்தமதம் பாரத நாட்டிலிருக்க ஆதரவின்றிக் குடிபோயிற்று.

2510. தங்களிடமுள்ள தீமைகளை ஓர் பெரிய ஞானியோ, அவதார புருஷரோ, யோகியோ, காண்பவிக்காமலே தெரிந்துக் கொள்ளுகிற பிரஜைகளுக்குச் சீக்கிரம் ஞானோதயமுண்டாகிறது.

2511. பனிரெண்டு வருஷம் வரை ஊழியத் தொழிலிலிருந்தால் ஏஜமானனது குணங்களெல்லாம் அவனுக்கு வந்து சேருகிறது.

2512. பரமாத்மானுபவம் அறியாத ஜீவர்கள் தற்பெருமை அவித்தியா அகங்காரம் அனாத்ம புத்தி மயக்க நினைப்பு இவைகளால் பந்தப்பட்டுத் தடுமாறுகிறார்கள்.

2513. ஞானசொரூபப் பிரதிபந்த மாயா சகித ஜீவாத்மாக்கள் சர்வேஸ்வரனது காருண்யத்தைப் பெறாமல் பிறவா முக்தியைப் பெறுவதென்பது குதிரைக்கொம்பாக முடியும்.

2514. யுக்தியின் விரிவைக் காட்டிலும் அனுபவ விபாகமே சிறந்தது.

2515. நியாயத்தை நினைப்பதிலும் செய்வதிலும் பயமடையக் கூடாது.

2516. பிறருடைய நன்மையையே விசாரணை செய்பவர்கள் தெய்வ சம்பத்துள்ளவர்களென்றும், தீமையையே கருதுபவர்கள் அசுரசம்பத்தை யுடையவர்களென்றும், இரண்டையும் விட்டவர்கள் ஞானிகளென்றும் தெரிந்துக்கொள்ள வேண்டும்.

2517. ஒருவரையொருவர் கட்டிக் கொள்ளுவதினாலும் முத்தமிடுவதினாலும் தீமையே விளைகிறது.

2518. அனாத்மாவைப் பற்றிய கேள்விகளுக்கும் ஆத்மாவைப் பற்றிய உணர்ச்சிக்கும் ஒன்றுக்கொன்று நெருங்கிய சம்பந்தமற்றவைகளாயிருக்கின்றன;

2519. உள்ளதையும் இல்லாததையும் தாண்டினவர்களை உடையவர் என்றழைக்கலாம்.

2520. உலக நன்மையின் பொருட்டு எதையும் செய்யலாம்.

2521. உண்மையான சுயராஜ்யம் தனக்குள் கிடைத்து விட்டால் சாம்ப்ராஜ்யம் தானே கிடைத்துவிடும்.

2522. அர்த்தந் தெரிந்த மந்திரத்தோடு ஏகாக்கிரபுத்தியுடன் ஆசமனம் செய்வதால் நாடிசுத்தி மூலசுத்தி உண்டாகின்றன.

2523. பரஸ்திரீசமனம் களவு பிறரை வெறுத்தல் இம்மூன்றினால் மனிதன் சீக்கிரம் நாசமடைகிறான்.

2524. பிறருடைய சந்தோஷத்தைப் பார்த்து நாம் சந்தோஷமடையலாம், துக்கத்தைக்கண்டு சிரிக்கக்கூடாது.

2525. மனது பரிசுத்தமானால் அளவற்ற பலத்தையடையலாம்.

2526. ஆடுளின் அருமையையும் அபூர்வ சக்தியையும் தெரிந்துகொண்டவன் வீண் காரியங்களுக்கு ஓர் இமைநேரமாவது இடங் கொடுக்கமாட்டான்.

2527. கெடுதி நேரிடாவண்ணம் பார்த்துக் கொள்பவன் புத்திமான். வந்த கெடுதியைப் பொறுத்துக்கொள்பவன் சாமர்த்தியவான்.

2528. தைரியம் ஊர்த்வ முகத்தையும் பயம் அதோ முகத்தையும் காட்டுகிறது.

2529. சுயராஜ்யம் சாம்ப்ராஜயம் என்பதன் உண்மைகளை மஹரிஷிகளின் ஆஸ்ரமங்களில் பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது.

2530. ஞான இச்சை மத சேவை தேச சேவை சமூக ஊழியம் சாஸ்திர சேவை இவைகளை உடையவர்களிடம் அடக்கமில்லாவிடின் அதற்கு அர்த்தமேயில்லை.

2531. அடக்கமில்லாத அடக்கந்தெரியாத பிரசாரங்கள் ஊழியங்கள் சுயநலத்தையே லக்ஷியமாகக்கொள்ளும்.

2532. வேதத்தைவிட்டுக் கர்மத்தையும் கர்மத்தைவிட்டு வேதத்தையும் அனுஷ்டிப்பதில் பிரயோஜனமில்லை.

2533. அந்தக் காணத்தின் அதிசூக்ஷ்ம பலஜென்மாந்தர பாபபுண்ணிய சமஸ்காரங்களின் ரகஸ்ய உண்மைகளை வேதசாகைகளான உபநிஷத்துக்களில் கௌதம சதானந்த சம்வாதத்திலும், யாக்ஞவல்கிய ஜனகராஜ சம்பாஷணத்திலும் விளக்கமாகக் கூறப்பட்டிருக்கிறது.

2534. உலகப் பெருமையும் தபோமகிமையும் ஒன்ருகச் சேர்வதில்லை.

2535. பிறரை அவமதிப்பதும் மரியாதைக்குணம் தெரியாதிருப்பதும் மூடர் வஞ்சகர் ராக்ஷசர் லக்ஷணம்.

2536. பிறரால் அவமதிக்கப்படுகிறபோது விவேகி துக்கப் படமாட்டான்.

2537. சரீர அழகும் இனியகுரலும் மனத்தின் சத்குணங்களும் நிராசையும் தெய்வாம்சமுடையவர்களுக்குத் தான் பொருந்தியிருக்கும்.

2538. பிரஜைகளை அடிமைப்படுத்தக் கூடிய சுபாவம் செல்வத்திற்கு அமைந்துள்ளது.

2539. எல்லாப்பிரஜைகளிடத்திலும் பழகலாம். சிலரை மட்டும் நம்பலாம்.

2540. குற்றத்தைக்கண்டிக்கலாம், குற்றஞ் செய்தவனைக் கண்டிக்கக்கூடாது.

2541. குற்றங்களை மன்னித்து விடுவதும் மறந்து விடுவதும் விசேஷமானது.

2542. திருபுடித்தோற்றமற்ற பிரஹ்மானுபவத்திற்கும் திருபுடித்தோற்றமுள்ள பிரஹ்மானுபவத்திற்கும் இடையே யுள்ள வேறுபாடுகளை உண்மையில் அறிந்துகொள்வது சகஜநிஷ்டர்களது இயற்கை.

2543. இகலோக ஞானமும் அவற்றின்முயற்சியும் உடையவனை மனிதமிருகமென்றும், இகலோகஞானம் பரலோகஞானம் அவற்றின் முயற்சிகளுமுடையவனை மனிதத் தன்மையில் மனிதனென்றும், இகலோகஞானம் பரலோகஞானம் பிரஹ்மானுபவம் அதன் ரகஸ்யஞானம் முயற்சியுமுடையவனை மனிதனில் தேவனென்றும் வேதாந்த சூத்திரம் கூறுகிறது.

2544. முழுதும் உண்மையுள்ளவர்களை உலகம் மதிப்பதில்லை. உண்மையில் பல உண்மையல்லாதவைகளைக்கொண்டவர்களிடம் மயங்கி உலகம் நன்கு மதிக்கிறது.

2545. உலகத்திலுள்ள எந்த வஸ்துவின் உதவியைக்கொண்டும் ஜீவிப்பவர்கள், உண்மையான சுயராஜ்யம் பெற்றவர்களாக மாட்டார்கள்.

2546. பிறரால் மதிக்கப்படுபவன் தன்னைத்தானே மதித்துக்கொள்ளக்கூடாது.

2547. மனோமுயற்சியற்றவன் உண்மையான பிராம்மணன்.

2548. சத்தியம் ஹிதம் பிரியம் இம்மூன்றின் தன்மையற்ற வாக்காளிகள் பேசாது மவுனமாயிருப்பது நலம்

2549. நமது வசம் நமது சரீரம் இருக்கவேண்டுமேயல்லாது சரீரத்தின்வசம் நாமிருக்கக்கூடாது.

2550. பகுத்தறிவு ஆசையின்மை நல்லொழுக்கம் அன்பு இவை நான்கும் ஆசாரியரால் அறிந்து கொள்ளக்கூடிய முக்கிய சாதனங்கள்.

2551. ஓய்வு ஒழிவு சமாதானம் சாந்தம் இன்பம் முக்தி இவைகள் ஒன்றன் பின்னொன்றாக அப்பியாசிகளைத் தொடர்கின்றன.

2552. உண்மையாக யோகத்தில் ஆசைகொண்டவன் சாங்கிய ஞானியைக்காட்டிலும் மேலானவன்.

2553. எவ்வளவு ஞானிபானாலும் எவராயிருந்தாலும் பிரபல சாமர்த்திய சாலியாயினும் மஹாபண்டிதனாகிலும் பராக்கிரம சார்வபௌமனானாலும் தேவனானாலும் சொந்த தர்மங்களிலிருந்து நழுவினால் பிரயோஜனமற்றவனென்பது வைதீகரிஷிகளது கருத்து.

2554. நெருப்பைத்தண்ணீராகவும் தண்ணீரை நெருப்பாகவும் ஆக்கிவிடக்கூடிய சித்தர்களைக்காட்டிலும் நெருப்பையும் தண்ணீரையும் ஒன்றாக்கிவிடக்கூடிய யோகிகள் சிரேஷ்டமானவர்கள்.

2555. கருமயோகத்தை எக்காலத்திலும், பக்தியோகத்தை ஏகதேசமாகவும், ஞானயோகத்தை அபுரூபமாகவும், ஜீவப்பிரஜைகளுக்குப்போதிக்கவேண்டும்.

2556. போதிப்பதற்கும் அனுஷ்டிப்பதற்கும் அனுபவிப்பதற்கும் சம்பந்தத்தை ஏற்படுத்திக்கொண்டு உபதேசிப்பவர்கள் உண்மையான ஆசாரியர்கள்.

2557. பிறரால் இச்சித்த ஆகாரவஸ்துக்களை உண்பதால் சரீர மனோ வியாதிகளுண்டாகின்றன.

2558. ஸ்தூல சரீரபாவனையால் ஸ்தூல ஆகாரங்களை ஸ்தூலமாக உண்பவர்கள் ஸ்தூல இச்சையினின்று மீள முடியாது.

2559. ஆத்மஞானமின்றி ஆத்மாவை மறந்து ஆத்மவிசாரணை கெட்டு அனாத்மபுத்தியோடு அனித்திய இச்சையாற் செய்யப்படும் வெளிச்சாதனங்கள் யாதொரு பயனும் பலமுமற்றவை.

2560. மதக் கட்டளை ஜாதி அபிமானம் பொறாமை பயம் இவைகள் காரணமாக நிந்திக்கப்படுபவர்கள் உண்மையான குற்றவாளி களாக மாட்டார்கள்.

2561. தெய்வத்தின் பெயரைச் சொல்லித்தேவையான காரியங்களைச்செய்து சாதித்துக்கொள்ளக்கூடிய அசுர சம்பத்துடையவர்கள் தேவாலயங்களிலும் தேடித் தேடிக்காணாத தேவர் கூட்டங்களிலும் காணப்படுகின்றனர்.

2562. பற்றுமல் பற்றுவதும் பற்றிப்பற்றுவதுமான தன்மையை எதார்த்தமாய் அனுபவத்திலறிந்து கொண்டு பற்றை ஜெயித்தவர்கள் பரமபுருஷர்கள்.

2563. தன்னை மீறிவருகிற ஒவ்வொரு சங்கல்பங்களிலும் ஒவ்வொரு ஜென்ம சமஸ்காரங்கள் அடங்கியிருக்கின்றன வென்று ஆராய ஆரம்பிப்பவர்கள் அதிக்கிரமரகஸ்ய தத்துவ ஞானயோகிகள்.

2564. பயம் மரணத்தைக் காட்டிலும் கேவலமானது.

2565. பயமுடையவர்களுக்கு லோபமும், லோபமுடையவர்களுக்குப் பேராசையும், பேராசையுடையவர்களுக்குக் குரோதமும், குரோதமுடையவர்களுக்கு மயக்கமும், மயக்கமுடையவர்களுக்கு அபிமானமும், அபிமானமுடையவர்களுக்கு அஞ்ஞானமும், அஞ்ஞானமுடையவர்களுக்குத் துக்கமும், துக்கமுடையவர்களுக்கு ஜென்மமும், முறையே தொடர்கின்றன.

2566. உலக ஞானமும் சூக்ஷ்மபுத்தியும் அதி சாமர்த்தியமும் சாந்தமும் வித்தையும் இல்லாதவர்களிடம் திரவிய மிருந்தால் பெரிய பல ஆபத்துக்களும் பல கஷ்டங்களுமுண்டாய் நரகப்பிராப்திக்கும் எதுவாகச் செய்துவிடும்..

2567. மனதிற்கும் யுக்திக்கும் அனுபவத்திற்கும் பொருத்தமில்லாத இடங்கள் மனிதர்கள் தேவர்கள் இவைகளை விட்டு விலகி விடவேண்டும்.

2568. யுக்தியில்லாத பக்தனையும், தாராள புத்தியில்லாத வேதாந்தியையும், கருணையில்லாத வைஷ்ணவனையும், இனிமையில்லாத சைவனையும், நிராசையில்லாத சந்நியாசியையும், ஆளத்

தெரியாத அரசனையும், குடும்பபாரந்தெரியாத மனைவியையும், பிறர்மனைவியரை இச்சித்து நடக்கிற புருஷர்களையும், பொய்யை மெய் யென்று நம்பிய சாங்கியனையும், வைராக்கியமில்லாத யோகியையும் அனுபவ மின்றிய ஆசாரியனையும், அனுஷ்டிக்கத் தெரியாத சிஷ்ய னையும், அன்பில்லாத பிரஜைகளையும் அந்த நிமிஷத்திலேயே விலக்கி விடவேண்டும்.

2569. பிரஹ்மஞான திருஷ்டியினால் பிரபஞ்சமுழுமையும் தானே யென்ற அனுபவம் வந்தால் மோக்ஷப்பிராப்தியும் அஞ் ஞான திருஷ்டியினால் உலக முழுதும் தானே யென்ற அனுபவம் வந்தால் நரகப் பிராப்தியும் சித்திக்கிறது.

2570. குடீசகம் பகூதகம் ஹம்ஸம் பரமஹம்ஸம் வித்வத்து விவிதிஷா வைராக்யம் ஞானம் அதிவருணாஸ்ரமம் என்று ஒன்பது சந்நியாசங்கள் வைதீக சாஸ்திரங்களில் கூறப்பட்டிருக்கிறது. ஒவ் வொன்றுக்கும் ஆசாரங்களும் தோற்றங்களும் அனுஷ்டானங்களும் வேறுபடுகின்றன.

2571. பஞ்சேந்திரிய சுகங்களில் பற்று குறைந்து அதில் வெறுப்புண்டாகும் போது பாப புண்ணிய சமத்துவம் வந்த தென்று தெரிந்து கொள்ள வேண்டும், பாப புண்ணிய சமத்துவம் வாய்ந்த வர்களுக்கே பிரஹ்மத்தின் சூக்ஷ்மஞானம் பிரகா சிக்கிறது.

2572. நித்தியமும் அநித்தியமும் சம்பந்தப் படுகிற காலத் தில் பிரகிருதி தன் சாமர்த்தியத்தைக் காட்டிக் கொள்ளச் சமயம் கிடைக்கிறது.

2573. பிராகிருத சரீரத்திலிருந்து கொண்டே அப்பிராகி ருதத்தன்மையை அனுஷ்டித்துக் காட்டியவர்களில் முதன்மை யானவர் ஜடகோபர்.

2574. அழகிய சகுண மூர்த்தியின் பிரசன்னத்தால் அளவு கடந்து சந்தோஷிப்பவன் நிர்க்குண ஞானனுபவத்தைச் சீக்கிரத் தில் அடையமாட்டான்.

2575. பகவானுடைய ஆறு அடையாளங்களில் ஒன்றிரண்டு மட்டு முடையவர்களை அம்ஸாவதார மென்று ரிஷிகள் சொல்லுகிறார்கள்.

2576. கொஞ்சமாகிலும் பிரஹ்மானுபவத்திற் பற்றிய மனது மீண்டும் உலகானுபவத்திற்குத் திரும்ப மாட்டாதென்று பெரிய தீர்க்கதரிசிகள் சொல்லுகிறார்கள். அப்படி இறங்குமானால் உலக உபகார சர்வேஸ்வர பகவானது கட்டளை யென்றறிய வேண்டும்.

2577. ஒவ்வொரு வஸ்துக்களிலும் பற்றிப் பற்றிப் போய்க் கொண்டிருக்கிற மனது எந்த வஸ்துவைப் பற்றி மீண்டும் அதி னின்று மீள முடிய வில்லையோ அது பரவஸ்து.

2578. அழுக்கில்லாத மனத்தில் அஞ்ஞானம் பதிவதில்லை, அழுக்குள்ள சித்தத்தில் ஞானம் பதிய ஏது வில்லை.

2579. ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு விதமான வேறுபாடுகளையுடைய அப்பியாஸ அனுபவங்களைக் கண்டறிபவன் சீக்கிரத்தில் நிருவிகல்ப சமாதியை அடைகிறான்.

2580. பகிர்முக நீதிகளையும் ஞானங்களையும் கண்டு களித்துத் தேர்ச்சி யடைந்தவன் தான் அந்தர்முக நீதிகளையும் ஞானத்தையும் அடைய அதிகாரியாகிறான்.

2581. விசிஷ்டாத்வைத வைஷ்ணவமத ஆழ்வார்களில் பெரியாழ்வார் திருமங்கையாழ்வார் திருமழிசையாழ்வார் நம்மாழ்வார் இந்நால்வரும் முறையே சரியை கிரியை யோகம் ஞானம் இந்நான்கையும் அனுஷ்டித்துக் காட்ட அவதாரமானவர்கள்.

2582. சிவாத்துவைத சைவ சமயாசாரியர்களில் திருநாவுக்கரசர் திருஞான சம்பந்தர் சுந்தரமூர்த்தி மாணிக்க வாசகர் இவர்கள் முறையே சரியை கிரியை யோகம் ஞானம் இந்த நான்கையும் பகிரங்கப்படுத்த வந்த மஹாபுருஷர்கள்.

2583. கலியுக காலத்தில் கரும யோகம் பக்தியோகம் ஞான யோகம் இம் மூன்றின் ரகஸ்யத்தை ஸ்தாபிப்பதற்கு முறையே மத்துவா- சாரியார். இராமானுஜாசாரியார் சங்கராசாரியார் இம் மூவரும் அவதாரமானவர்கள்.

2584. எல்லோரிடத்திலும் பய பக்தி விஸ்வாஸத்துடன் நடந்து கொள்வதைக் காட்டிலும் விரோதிகள் ஏழைகள் தாழ்ந்த ஜாதியார் இவர்களிடத்தில் பயபக்தி விஸ்வாஸத்துடன் நடந்து கொள்வதால் பரமேஸ்வர எம்பெருமான் பரம திருப்தி அடைகிறார்.

2585. ஒரு காலத்திலு மில்லாத வஸ்துவைப் பற்றியும் எப் போது முள்ள வஸ்துவைப் பற்றியும் ஒருவரும் ஒருகாலத்திலும் விசாரணையாவது கவலையாவது கொள்ளக் காரணமில்லை.

2586. மனதையும் ஞானேந்திரியங்களையும் அடக்கமுடியாத வனும் தெரியாதவனும் கர்மேந்திரியத்தின் அடக்கம் பெருமை இவைகளைக் குறித்துச் சிலாகித்துப் பேசுகிறான்.

2587. சிந்தனையே யில்லாத போது ஒரு சிந்தனை சிந்தியா மலே வந்ததானால் சிந்தனாதீதத் தடை யென்று சிந்தியாமலே தெரிந்து கொள்ளவேண்டும்.

2588. உலகத்தில் நடைபெறுகிற சமஸ்த காரியங்களையும் ஆலோசித்துப்பார்க்கும் பொழுது சகலமும் இந்திரிய காரியங்களா கவே முடிகிற தென்றும் நிவிர்த்தி மார்க்கப் பரமாத்மப் பிரவர்த்த கர்கள் சர்வேந்திரிய காரியரகிதர்களாயிருப் பார்களென்று சன காதி நான்கு மஹரிஷிகளும் சொல்லுகிறார்கள்.

2589. அந்தர்முக பரமாத்ம நாட்டமின்றிப் பகிர்முக அனாத்ம நாட்டமுடையவர்களின் ஜென்மக் கணக்குகள் அற்பமே கிடை யாது.

2590. ஆசை பிரியம் விஸ்வாஸம் பக்தி அன்பு இவ்வைந்தும் வேறுவேறான தாத்பரியங் கொண்டவைகள்.

**2591.** விஷயத்தில் ஆசை, சுற்றத்தாரிடம் பிரியம், பெரியவாளிடம் விஸ்வாஸம், பகவானிடத்தில் பக்தி, கடவுளிடத்தில் அன்பு, இவ்வைந்தும் இவ்வாறு பிரிகின்றன.

**2592.** தூஷணை தடை இவை யிரண்டும் பிரபலமாகத் தோற்றப் படுகிற பக்தன் யோகி ஞானி இம் மூவரையும் தேவர்களும் அவதார புருஷர்களும் கொண்டாடுகிறார்கள்.

2593. உபாஸனைக்கும் பக்திக்கும் அவாந்தர வேற்றுமையில்லாவிட்டாலும் ஊன்றிப் பார்த்தால் சாக்ஷாத் வேற்றுமையிருக்கிறது.

2594. தன்னிடத்தில் தன்னை வேறாகக் காணாமல் தானே தானாகக் காண்கிறவன் அத்வைத அனுபவி, தன்னிடத்தில் தன்னைத்தவிர வேறாகப் பரமாத்மாவை அறிகிறவன் துவைதானுபவி, தன்னிடத்தில் தனக்கன்னிய மின்றித் தனக்குள்ளே பிரஹ்மத்தை அறிகிறவன் விசிஷ்டாத்வைத அனுபவி.

2595. அஷ்டாவக்கிரர் அஸிதர் ஆங்கீரசர் ஆத்ரேயர் ஆபஸ்தம்பர் ஆருணி ஆஸ்திகர் மௌத்கல்யர் காலவர் உதங்கர் உத்தாலகர் கௌதமர் விஸ்வாமித்திரர் ததீசி சதானந்தர் சரபங்கர் ஜாண்டில்யர் சாந்தி சௌனகர் சுனகர் சுகர் ஸ்வேதகேது ஸ்வேதர் தமனர் நாரதர் பர்வதர் நாராயணர் தாலப்யர் தனுசாக்ஷர் தக்ஷர் மாண்டவ்யர் தத்தாத்திரேயர் பாரத்வாஜர் பிருகு ஜாடாலர் பிருங்கி சனத்குமாரர் உரோமசர் தன்வந்திரி நந்தி வான்மீகி பிரஹஸ்பதி புஜண்டர் தாசூரர் சுக்கிரன் சூரியன் மரீசி போகர் புலஸ்தியர் அகஸ்தியர் மைத்ரேயர் கிருஷ்ணத்வைபாயனர் பிரஹதாரண்யர் ஜாமதக்னியர் ஸ்ரீவத்ஸர் கபிலர் தூர்வாசர் குஜத்வஜர் சுமணர் குங்குமாரர் சுதீக்ஷணர் காஸ்யபர் வைஸம்பாயனர் காத்தியாயனர் வாதூலர் போதாயனர் கௌண்டுண்யர் பிப்பலாயர் சுமதி கர்க்கி சாந்தீபிணி சமன்வயர் தௌம்யர் பராசரர் சக்திரிஷி வாகீசர் ஷடமர்ஷணர் சநாதனர் திரிதுலர் தேவரங்கர் முதலிய மஹரிஷிகளது அங்கீகாரம் பெற்ற அனாதி சநாதனதர்ம மதத்தையே சர்வஜீவர்களும் அனுஷ்டிக்க வேண்டும்.

2596. பரவாசுதேவர் பஞ்சமூர்த்திகள் லக்ஷ்மி சரஸ்வதி பார்வதி கங்கை சாவித்திரி காயத்திரி காளி முருகன் கணபதி மாயா சக்தி காலசக்தி மிருத்யுதேவன் பராசக்தி சப்தரிஷிகள் நவக்கிரகங்கள் அஷ்டவசுக்கள் அஷ்டதிக்பாலகர்கள் பஞ்சமஹாபூதங்கள் தசாவதாரங்கள் சித்தர்கள் ரிஷிகள் ஞானிகள் பக்திமான்கள் கருமயோகிகள் பாரததேவி பூமாதேவி ஆதிசேஷன் நித்திய சித்தாதிகள் ஏகாதசருத்ரர்கள் திக்குதேவதைகள் யோகிகள் மஹாமேரு ஹிமவான் சப்தசாகரங்கள் துருவம் பிதுர்தேவர்கள் விஸ்வே தேவர்கள் சிருஷ்டிகர்த்தாக்கள் சப்தநதிகள் திரிமதாசாரியர்கள் சப்தகுலாசல பருவதங்கள் ஆழ்வாராதியர்கள் நாயன்மார்கள் நான்குவேதங்கள் ஸ்மிருதிகள் ஆகமங்கள் வேதாங்கங்கள் புராணங்கள் இதிகாசங்கள் பலசாஸ்திரங்கள் கலைஞானங்கள் மனம் சரீரம் அன்னம் உலகம் மழை ஆறுகள் பருவதங்கள் ஜனங்கள் அரசர்கள் பிராம்மணர்கள் கற்புள்ளமாதர்கள் இவர்கள் அனைவர்களுக்கும் தனித்தனியாகத் தினந்தோறும் மனதிற் பூஜைசெய்து நமது ஞானமோக்ஷமார்க்கங்களுக்கு உதவி செய்யவேண்டுமென்று பிரார்த்தித்து வரவேண்டும்.

ஓம். தத். ஸத்.

விலக்ஷணானந்தர்.

ஞானி உயர்ந்த ஜாதி — ஓம். தத். ஸத். — அஞ்ஞானி தாழ்ந்த ஜாதி

க. கடவுளைக் கண்டு முடிந்தவன் பிராமணன்.
உ. கடவுளைக் காணத் தீவிர அப்பியாஸம் செய்பவன் க்ஷத்திரியன்.
ந. கடவுளைக் காணவேண்டிய சாதனங்களைச் சேர்ப்பவன் வைசியன்.
ச. கடவுளைக் காணும் ஆரம்பப்படியி லேறியவன் சூத்திரன்.
ரு. கடவுளைக் காண்பதின் யாதொரு முயற்சியுமின்றி யிருப்பவன் பஞ்சமன்.

## பிரஹ்ம சாக்ஷாத்காரம். ஜனன மரண நிவிர்த்தி

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பரிசுத்தம் | எங்கே | உதயமோ | அங்கே | பக்தி | உதயம். |
| பக்தி | எங்கே | உதயமோ | அங்கே | அன்பு | உதயம். |
| அன்பு | எங்கே | உதயமோ | அங்கே | சாந்தம் | உதயம். |
| சாந்தம் | எங்கே | உதயமோ | அங்கே | சக்தி | உதயம். |
| சக்தி | எங்கே | உதயமோ | அங்கே | ஞானம் | உதயம். |
| ஞானம் | எங்கே | உதயமோ | அங்கே | கிருபை | உதயம். |
| கிருபை | எங்கே | உதயமோ | அங்கே | கடவுள் | உதயம். |
| கடவுள் | உதயம் | பெற்றவர் | கடவுளே | ஆகிறார். | |

விலக்ஷணானந்தர்.

Grisaille Press, 139, Big Street, Triplicane, Madras.



விலக்ஷணானந்தர்

ஞானரகஸ்யம் எழுதுகிற சமயம்